## நூல் விவர அட்டவணை

| | |
|---|---|
| நூலின் பெயர் | : அக்கரைச் சீமையிலே |
| ஆசிரியர் | : திருமதி லாவண்யா |
| உரிமை | : ஆசிரியருக்கு |
| மொழி | : தமிழ் |
| முதல் பதிப்பு | : செப்டம்பர், 2012 |
| தாள் | : 11.6 kg. வெள்ளைத் தாள் |
| நூலின் அளவு | : 1 x 8 கிரவுன் |
| அச்சு எழுத்து | : 11 புள்ளி |
| மொத்தப் பக்கங்கள் | : 220 |
| பைண்டிங் | : சாதா அட்டை |
| நூல் வெளியிடுவோர் | : அருணோதயம்<br>5/3, கௌடியா மடம் சாலை,<br>இராயப்பேட்டை,<br>சென்னை - 600 014. |

**விலை: ரூ.100.00**

| | |
|---|---|
| கணினி அச்சு | : வேலன் லேசர் - 94441-01753 |




# அக்கரைச் சீமையிலே

## முன்னுரை

எல்லோருக்கும் அன்பான வணக்கங்கள். இது திருமதி லாவண்யா எழுதிய இரண்டாவது நாவல். 'காதலின் சாரலிலே' என்ற அவரின் முதல் நாவலைப் போன்றே 'அக்கரைச் சீமையிலே' என்ற இந்த நாவலுக்கும் வாசகர்கள் மத்தியில் நல்ல வரவேற்பு கிடைக்கும் என்பதில் ஐயமில்லை.

ஒரு அழகான காதல் காவியத்தை நேர்த்தியான உரையாடல்களுடனும் அருமையான யுக்திகளுடனும் உருவாக்கியுள்ளார் ஆசிரியர். அமெரிக்காவின் மேற்குக் கடற்கரையில் அமைந்துள்ள சேன்ட்டா மானிகா என்ற நகரிலிருந்து கிழக்குக் கடற்கரையில் உள்ள நியூயார்க் நகருக்குப் பயணம் மேற்கொள்ளுகிறது ஒரு குடும்பம். அதில் ஆதிரனும் (கதை நாயகன்) வந்திதாவும் (கதை நாயகி) பங்கு கொள்கின்றனர். மூவாயிரம் மைல்களுக்கும் மேற்பட்ட தூரமுடைய பதினெட்டு நாள் பயணத்தில், எதிர் எதிர் குணாதிசயங்களைக் கொண்ட நாயகனும், நாயகியும் சீண்டல்களுக்கும், சிணுங்கல்களுக்கும், மோதல்களுக்கும் நடுவில் எவ்வாறு காதலர்களாகிக் கசிந்து உருகுகின்றனர் என்பதை அற்புதமாகச் சித்தரித்துள்ளார் ஆசிரியர். அது மட்டுமில்லாமல், புகழ் பெற்ற சுற்றுலாத் தலங்களுக்கு நம்மை அழைத்துச் செல்கிறார். காதலும் பயணமும் கலந்த கதை!

இம்முறையும் **அருணோதயம்** என்ற ஆல விருட்சம் லாவண்யாவின் இந்த இரண்டாவது நாவலை வெளியிடுகிறது. மீண்டும் மோதிரக் கையால் குட்டு. பதிப்பாளப் பெருந்தகைக்கும், படைப்பாளிக்கும் என் வாழ்த்துக்கள். வாசகர்களுக்கு என் அன்பும் நன்றியும்.

- மு.வேலாயுதம்

விஜயா பதிப்பகம்

# அக்கரைச் சீமையிலே

---

**கலிபோர்னியா...**

**சேன்ட்டா மானிகா (Santa Monica) நகரம்!**

---

பசிபிக் பெருங்கடல் மேல் கால்களை ஊன்றி, கைகளை விரித்து அனைவரையும் வரவேற்றுக் கொண்டிருந்தது மரப்பாலம். அதன்மேல் திருவிழாக் கூட்டம் போல மக்கள் திரண்டிருக்க, கடற்கரையில் நின்றிருந்த ஆதிரன் பார்வையை பாலத்தின் மேல் படர விட்டிருந்தான்.

ரோலர் கோஸ்டர் வேகமெடுக்க, ரங்க ராட்டினம் சுழல ஆரம்பிக்க, அதிலிருந்த குழந்தைகளின் ஆரவாரக் குரல்கள் அவன் செவியறைகளைத் தட்டி, புன்னகையைத் திறக்க வைத்தன.

பாலத்தின் மேல் ஓவியர்கள் தங்கள் தூரிகைகளை நடனமாட விட, இசைக் கலைஞர்கள் வாத்தியங்களை

கிச்சுகிச்சு மூட்டிச் சிரிக்க வைத்துக் கொண்டிருந்தனர். பொழுதுபோக்க கடலிலுள்ள மீன்களைப் பிடிக்க பலர் தூண்டில் போட்டுக் காத்திருக்க, வாசனையைத் தூண்டிலாகப் போட்டு உணவகங்கள் தயாராகிக் கொண்டிருந்தன.

கோப வெயிலில், சந்தோஷக் கடல் காற்று மேனியைத் தீண்டிச் செல்ல, பார்வையைத் திருப்பி மீண்டும் கடற்கரைக்கு வந்தான் ஆதிரன். கடல் தான் எத்தனை சுறுசுறுப்பானது! கரையைத் தழுவி, தன்னோடு அழைத்துச் சென்று விடலாம் என எண்ணி அலைகளைத் தான் சலிக்காமல் எத்தனை முறை தூது விடுகிறது!

தோற்ற அலைகளை நம் கதையின் நாயகி வந்திதா துரத்திக் கொண்டிருக்க, அலைகளோ ரோஷம் கொண்டு வீறு எழுந்து அவளைத் துரத்த என மாற்றி மாற்றி இனிதே அரங்கேறியது முடிவிலா விளையாட்டு. அதில் இன்னும் தோற்காமல், கால்களில் மட்டும் ஈரத்துடன் வெற்றியைத் தழுவிக் கொண்டிருந்தாள் நாயகி.

சற்று நேரம் இதை வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்த ஆதிரன், தக்க தருணத்தில் பலத்தை எல்லாம் திரட்டி அலைகளிடம் இருந்து தப்பித்து வந்தவளைத் திமிறத் திமிறக் கடலுக்குள் இழுத்துச் சென்று முழுவதுமாக நனைய வைத்தான்.

திகைத்துக் கூச்சலிட்டவளை இறுக்கிப் பிடித்தவாறே, ''இப்போ என்ன கரைஞ்சு போயிட்டியா? எவ்வளவு நேரம் தான் நீ ஓடறதைப் பார்க்கறது? இப்போ எப்படி ஜில்லுன்னு இல்ல?'' எனக் கிண்டலும் அடித்தான்.

ஆதிரனின் குரலில் சுயநினைவுக்கு வந்தவள், ''எதுக்கு எப்போதும் என்னை வம்புக்கு இழுக்கறீங்க?



ப்ளீஸ்! எனக்கு நீச்சல் தெரியாது. தயவு செய்து கையை விடாமப் பிடிச்சுட்டு அப்படியே என்னைக் கரையிலே சேர்த்துடுங்க'' என ஆதிரனின் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, சீண்டியவனிடமே அடைக்கலம் தேடினாள் அந்தப் பேதை.

அவள் சொல்வது காதிலேயே விழாதவன் போல கரையை நோக்கி வந்து கொண்டிருக்கும் மற்றொரு அலையை உல்லாசமாக எதிர்கொண்டு நின்றான் ஆதிரன்.

வந்திதாவின் கூப்பாட்டைக் கேட்டு அங்கு வந்த சாதனாவும், பிரணவும் விஷயம் விபரீதம் ஆகும் முன்னர் வந்திதாவை ஆதிரன் பிடியிலிருந்து மீட்டுக் கொண்டு, கடலிலிருந்து வெளியே வந்தனர்.

''ஏன்டா! உனக்கு வந்திதாவை வம்புக்கு இழுக்காம தூக்கம் வராதா? அவளுக்குப் பயமா இருந்தா விட வேண்டியதுதானே?'' என விசிலடித்தவாறே வந்த ஆதிரனைக் கடிந்து கொண்டான் பிரணவ்.

''என்னமோ தெரியலை, அவளை வம்புக்கு இழுத்து அவளைக் கோபப்பட வைக்க ஜாலியா இருக்குடா'' என நண்பனைப் பார்த்துக் கண்ணடித்தான் ஆதிரன்.

அவன் அலட்டாமல் பதில் சொன்னதைக் கண்டு, ''உங்களுக்குள்ள ஏன் தான் இப்படி ஏழாம் பொருத்தமா இருக்கோ?'' என பிரணவ் சலித்துக் கொண்டான்.

''உங்களுக்கு ஏன்னு தெரியாதா பிரணவ்? முதன் முதலா பார்த்ததிலிருந்தே என்னைச் சீண்டறதே இவருக்கு வேலையாப் போச்சு. ஊர் உலகத்துல மக்களுக்குப் பஞ்சம் வந்த மாதிரி இவர் தானா உங்களுக்கு பிரெண்டா கிடைக்கணும். என்னால தாங்க முடியலை.

இனிமே உங்க பிரெண்டைக் கூப்பிடற இடத்துக்கு என்னைக் கூப்பிடாதீங்க பிரணவ். இதுதான் முதலும் கடைசியும்'' எனக் கடலிலிருந்தும், திகைப்பிலிருந்தும் ஒரு சேர வெளிவந்த வந்திதா, ஆதிரனை விட்டுவிட்டு, காப்பாற்றிய பிரணவிடம் படபடத்தாள்.

''வந்திதா, ரெண்டு வருசத்துக்கு முன்னாடி அவன் ஏதோ தெரியாம கலாட்டா பண்ணிட்டான். அதுக்காக அதையே ஞாபகம் வச்சுட்டு இன்னுமா எலியும் பூனையுமா சண்டை போட்டுக்குவீங்க?'' என அவளைச் சமாதானப்படுத்த முயன்றான் பிரணவ்.

பிரணவ், அவர்களை எலியும் பூனையும் எனச் சொன்னது மிகையல்ல என்பதைச் சற்று நேரத்தில் நீங்களே தெரிந்து கொள்வீர்கள்.

சமாதானமடைவதற்குப் பதிலாகப் பொங்கினாள் வந்திதா. ''விளையாட்டுக்கு ஒரு அளவு வேண்டாம்? முன்ன பின்ன பார்க்காத ஒரு பொண்ணுகிட்ட அப்படித் தான் நடந்துக்குவாங்களா பிரணவ்?'' என்றாள் ஆதிரனைப் பார்த்தவாறே.

''விடுடா பிரணவ்! நான் அவளை நல்லா முன்னேயும் பின்னேயும் பார்த்ததுக்கு அப்புறம்தான் வம்புக்கு இழுத்ததாச் சொன்னா, புரிஞ்சுக்கவா போறா?'' என மிக எளிமையாக ஒரு பதிலைச் சொல்லி, கேள்வி கேட்டவளையும், சமாதானத்துக்கு வந்தவனையும் மானசீகமாக சுவற்றில் முட்டிக் கொள்ள வைத்தான் ஆதிரன்.

வந்திதாவின் குற்றச்சாட்டுக்குக் காரணம் பின்வருமாறு. இரண்டு வருடங்களுக்கு முன்னர் அவள் பெங்களூருவில் இருந்து கலிபோர்னியா வரும்பொழுது, அவள் வந்த அதே விமானத்தில் தான் ஆதிரனும் வந்தான். அதுவும் சிங்கப்பூரில் இருந்து அவளருகில்தான் அமர்ந்திருந்தான்.



ஆதிரன் சும்மா அமர்ந்து கொண்டு வந்திருந்தால் அவளின் சுனாமி போல் சீறு கொண்டு எழும் சினத்துக்கு ஆளாகி இருக்க மாட்டான். ஆனால், அவன் ஆதிரன் அல்லவா! அவனால் எல்லோரையும் போல சும்மா உட்கார்ந்து கொண்டு வர இயலாதே.

அவனருகில் அமர்ந்திருந்த வந்திதா அவனுக்கு நட்புடன் ''ஹலோ'' என்றாள். வந்திதா, லொடலொட வென பேசாவிட்டாலும் ஓரளவுக்கு கலகலப்பானவள் தான். அதனால்தான் அவள் ஆதிரனுடன் பேசியதும். ஆதிரனும் அவளுக்கு ஈடு கொடுக்கவே, இருவரும் பேச்சை வளர்த்தனர்.

ஆதிரன், கலிபோர்னியாவில் மூலக்கூறு உயிரியல் (Molecular Biology) துறையில் முனைவர் பட்டம் பெற்று, அங்கேயே ஒரு பல்கலைக்கழகத்தில் வேலையில் சேர உள்ளான். அதற்கு முன்னர் விடுமுறைக்கு இந்தியா சென்று திரும்பிக் கொண்டிருந்தான்.

வந்திதா, அமெரிக்கப் பிரஜை என்றாலும் அவள் பெற்றோர்கள் மாண்ட காரணத்தால் அமெரிக்காவில் இருக்க முடியாமல், இந்தியாவில் தங்கி இளங்கலைப் படிப்பை முடித்து மேற்படிப்புப் படிக்க கலிபோர்னியாவுக்குப் பயணித்துக் கொண்டிருக்கிறாள்.

இதையெல்லாம் விரிவாக ஆதிரனிடம் சொல்லாமல் பொருளாதாரம் பற்றிய மேற்படிப்புக்காகச் செல்கிறாள் என்று மட்டும் கூறினாள் வந்திதா.

பொதுவான விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர் இருவரும். பேச்சுக்கிடையில் வந்திதாவுக்கு

விமானத்தில் செல்ல பயம் என அறிந்து கொண்ட ஆதிரன் சும்மா இருக்காமல் தன் வேலையைக் காட்டத் தொடங்கினான்.

அவர்கள் நடுவானில் பறந்து கொண்டிருந்தபொழுது அவன் மடிகணினியில் மிக சுவாரசியமாக எதையோ பார்த்துக் கொண்டிருந்தான். அத்தோடு நின்றிருந்தால் பரவாயில்லை.

அவன் பார்ப்பதை, விடாப்பிடியாக வந்திதாவிடம் அவ்வப்பொழுது காட்டி விமர்சித்துக் கொண்டும் இருந்தான், அல்ல, அவளைச் சீண்டிக் கொண்டிருந்தான்.

அவன் அப்படி என்னதான் பார்த்துக் கொண்டிருந்தான்? உலகத்திலேயே விமானங்கள் இறங்குவதற்கு மிகவும் ஆபத்தான விமான நிலையங்கள் பற்றின ஆவணப்படமொன்றைத் தான் அவ்வளவு சுவாரசியமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். அதைப் பார்ப்பதற்கு நேரம் காலம் வேண்டாம்?

ஏற்கனவே பயந்து போயிருந்த வந்திதா அவனிடம் பலமுறை மன்றாடியும் அவன் அதை நிறுத்துவதாக இல்லை. இவள் கண்மூடி அமர்ந்தாலும் அவன் விடுவதாக இல்லை. இது ஒன்று போதுமே அவன் மேல் கோபத்தைப் படரவிட.

விமானம் ஜப்பானில் தரையிறங்க, ஏற்கனவே பயத்தில் இருந்தவள் ஆதிரனின் கைங்கரியத்தால் கலவரமடைந்தாள். மனதில் ஏற்பட்ட தாக்கம், அவள் தலையில் வண்டாகக் குடைந்து, வயிற்றில் பந்தாக உருண்டு, பயத்தை வாந்தி என்ற பெயரில் வெளிவர வைத்தது, அவன் மேல்!



தன் மேல் விழுந்த அபிஷேகத்தில் அவனுக்கும் எரிச்சல்தான். ஆனால் என்ன செய்வது? சுத்தம் செய்து வேறு உடைக்கு மாறியவன் ஆளும் மாறிப் போனான்.

தொழில்நுட்பக் காரணத்துக்காகத் தரையிறக்கப்பட்ட விமானம் மீண்டும் மேலேற, வந்திதாவிற்கு ஆதிரன் மேலிருந்த கோபமும் விர்ரென்று மேலேறியது.

வந்திதா, கழிவறைக்கு இவனைத் தாண்டித் தான் செல்ல வேண்டியிருந்தது. இவள் செல்ல எழும்பொழுதெல்லாம் வேண்டும் என்றே தூங்குவதைப் போல பாசாங்கு செய்தான். அவள் விமானப் பணிப்பெண்ணை வரவழைத்துத் தான் அவனைத் தட்டி எழுப்ப வேண்டியிருந்தது!

வந்திதா உறங்கும் நேரம் பார்த்து அவளுக்கு வந்த உணவை கபளீகரம் செய்தான் ஆதிரன். மீண்டும் விமானப் பணிப்பெண்ணிடம் கேட்டபொழுது, சைவ உணவு வேறு இல்லை என்று பதில் வந்தது..

உணவை அமுக்கியவனோ, உணவு உள்ளே போனால் தானே அது வாந்தியாக வெளிவருகிறது. அதனால்தான் உணவை தள்ளிவிட்டதாகக் கூறி, பசியால் அவளை வாட வைத்தான்.

ஒருமுறை, பணிப்பெண் கொடுத்த குளிர்பானத்தைத் தூங்கிக் கொண்டிருந்த வந்திதா மேல் கொட்டிக் கவிழ்த்தான். தூக்கம் கலைந்து பார்த்தவளிடம் தெரியாமல் கைத்தவறி விட்டதாகக் கூறினான். அவன் வேண்டும் என்றே செய்தானோ என இன்று வரையிலுமே வந்திதாவுக்குச் சந்தேகம்தான்.

இவ்வாறு தான் அவள் அந்தப் பனிரெண்டு மணி நேரப் பயணத்தை முடித்துக் கொண்டு குற்றுயிரும் குலையுயிருமாய் கலிபோர்னியா வந்தடைந்தாள்.

விமானத்தில் இருந்து இறங்கியவள், தன் வாழ்நாளில் ஆதிரனை மீண்டும் சந்திக்கும் சந்தர்ப்பம் அமையக் கூடாது என்ற வேண்டுதலுடன் தான் தன் உடைமைகளைச் சேகரித்துக் கொண்டு வெளியில் வந்து சுதந்திரக் காற்றை சுவாசித்தாள். போராடாமல் அவ்வளவு எளிதாகச் சுதந்திரம் கிடைத்துவிடுமா என்ன?!

அவள் தந்தையின் தூரத்துச் சொந்தக்காரர் மற்றும் நண்பர் சந்திரசேகரின் வீட்டில் தற்காலிகமாய் தங்கி இருக்க முடிவு செய்திருந்தாள் வந்திதா. அவர் மகன் பிரணவும், மகள் சாதனாவும் சிறு வயதிலிருந்தே இவளுக்கு நல்ல நண்பர்கள்.

வந்திதா குடும்பத்தினர் விடுமுறைக்கு இந்தியா செல்லும்பொழுது எல்லாம் சந்திரசேகரின் வீட்டில் தான் அதிக நாட்களைக் கழிப்பார்கள். வந்திதாவின் பத்தாவது வயதில் சந்திரசேகருக்கும் அமெரிக்காவில் வேலை கிடைக்க வந்திதா குதூகலமானாள், தன் தோழியை அடிக்கடிப் பார்க்கலாமே என்று.

ஆனால் அவளின் துரதிர்ஷ்டம் பெற்றோர்களின் மறைவுக்குப் பின்னர் இந்தியா செல்ல வேண்டிய நிர்ப்பந்தத்துக்குத் தள்ளப்பட்டாள். அவள் இந்தியா சென்றாலும் அவர்களின் நட்புப் பாலம் மேலும் பலப்பட்டு இன்றும் அறுந்து விடாமல் தான் உள்ளது.

வந்திதாவை விமான நிலையத்தில் இருந்து அழைத்துச் செல்ல வந்த பிரணவைப் பார்த்த பின்னர் தான் வந்திதாவுக்கு ஆதிரனால் போன உயிர் மீண்டு வந்தது. ஆனால், பிரணவ் சிரித்தவாறே ஆதிரனைப் பார்த்துக் கையசைக்க, இழுத்துப் பிடித்து மீண்ட உயிர் மீண்டும் மாண்டது. அப்படித்தான் உணர்ந்தாள்!



ஆதிரன் படித்த அதே பல்கலைக் கழகத்தில் தான் பிரணவும் கணினியியல் துறையில் தன் முதுகலைப் படிப்பை முடித்தான். பல்கலைக்கழகத்தில் உள்ள உடற்பயிற்சி மையத்தில் இருவரும் சந்தித்துப் பின்னர் ஒருவரை ஒருவர் பிடித்துப் போக, பிரணவ் தற்போது வேறு இடத்தில் வேலையில் இருந்தாலும் அவர்கள் நட்பு இன்றுமே இனிதாகத் தொடர்கிறது.

ஆதிரனை, பிரணவ் அறிமுகம் செய்து வைத்தப் பின்னர் தான் இவை அனைத்தையும் தெரிந்து கொண்டாள் வந்திதா. இந்தக் கொடுமையை எங்கே போய் சொல்வாள்? பாவம், அந்தப் பாவை!

அன்றிலிருந்து இன்றுவரை எப்பொழுதெல்லாம் ஆதிரனின் கண்களில் அகப்படுகிறாளோ அப்பொழுதெல்லாம் அவனின் கேலி, வம்பு, சீண்டல் போன்ற பொறிகளில் அகப்பட்டுக் கொள்வாள்.

அகப்பட்டவள் கோபத்தைப் பதிலாகக் கொண்டு அவனிடம் எகிற, அவன் திமிற என எலியும் பூனையுமாகத் தான் திரிகிறார்கள்!

மீண்டும் கடற்கரைக்குச் செல்வோம். ஆதிரனின் முன்னேயும் பின்னேயும் போன்ற கிண்டல் வார்த்தைகளில் எரிச்சலுற்ற வந்திதா, "இவரோட மனுசனால பேச முடியாது" என சிலுப்பிக் கொண்டு, கரையில் இருந்த சந்திரசேகர், அவர் துணைவி சௌந்தரவல்லி ஆகியோரை நோக்கி ஓடினாள்.

மற்ற மூவரும் அவளைப் பின் தொடர்ந்து வர, விஷயத்தை ஊகித்த சந்திரசேகர் வேறு விஷயங்களைப் பற்றி ஏதேதோ பேசி அவளைத் திசை திருப்பினார்.

அவளும் நடந்ததை மறந்து இயல்பாக மாற முயற்சித்தாள்.

அனைவரும் பல கதைகளைப் பேசியவாறே கொண்டு வந்திருந்த நொறுக்குத் தீனியை வயிற்றுக்குள்ள தள்ள, வந்திதாவின் கோபமும் தீனியுடன் சேர்ந்து அவள் பற்களுக்கு இடையில் சிக்கி நொறுங்கியது. அதனால் தான் இளையவர்கள் கைபந்து விளையாட அழைக்க, குதூகலமாகச் சென்றாள்.

பிரணவும் வந்திதாவும் ஒரு அணியில் சேர, சாதனாவும் ஆதிரனும் எதிர் அணியில் இருந்தனர். இரு அணிகளும் ஒன்றுக்கொன்று சளைத்தது அல்ல என நிரூபித்துக் கொண்டு மிகவும் உற்சாகமாகவே விளையாடினர். எல்லாம் வந்திதாவின் அருகில் வேறு ஒரு குழுவினரது பந்து உருண்டு விழும் வரை தான்!

ஆதிரன் தான் பார்த்துக் கொண்டிருக்கிறானே என நினைத்து ஒன்றும் சொல்லாமல் உருண்ட பந்தை எடுத்து உரியவர்களிடம் கொடுத்துவிட்டு வந்திதா திரும்ப, ஆதிரன் அடித்த பந்து இவள் முகத்தை அழுத்தமாக முத்தமிட்டுச் சிவக்க வைத்தது.

ஆதிரனின் வலிமையான கரங்கள் அடித்த பந்து பூப் போலவா அவளைத் தீண்டியிருக்கும்? தீப்போல் அல்லவா உரசியது! வந்திதா வலியில் துடிக்க, அங்கேயே மடங்கி உட்கார்ந்து விட்டாள்.

பிரணவும் சாதனாவும் ஓடி வந்து அவள் வலியில் பங்கெடுத்துக் கொள்ள முயல, ஆதிரனோ எரிச்சலுடன், ''சொல்லிட்டுப் போறதுக்கென்ன?'' என்றான்.

அவன் சும்மா இருந்திருந்தாலாவது வந்திதா பேசாமல் இருந்திருப்பாள். அவன் இப்படிக் கேட்டதும் தான் தாமதம், உடனே வெகுண்டவள்,



''உங்க கண்ணை எங்கே தலையிலா வச்சிருந்தீங்க? என்னை அடிக்க நல்ல சான்ஸ் தேடிட்டு, நான் சொல்லிட்டுப் போகலைன்னு சாக்குச் சொல்லறீங்களா? ச்சே!'' எனக் கூறி அங்கிருந்து எழுந்து ஓடினாள்.

அவளைத் தொடர்ந்த சாதனாவும், பிரணவும் தான் அவள் முகத்தில் உள்ள வீக்கத்தைக் குறைக்க, கொண்டு வந்திருந்த பனிக்கட்டிகளை எடுத்து அடிபட்ட இடத்தில் ஒத்தடம் கொடுத்தனர்.

ஓரளவு அவள் முகத்தைச் சீர்படுத்திய பின்னர், பிரணவ் தன் நண்பனிடம் சென்று வந்திதாவிடம் மன்னிப்புக் கேட்கச் சொன்னான்.

அவனோ, ''இப்படி அவளோட ஈகோக்குத் தீனி போட்டுப் போட்டே அவளை ரொம்ப சென்சிடிவ் ஆக்கி வச்சிருக்கீங்க. தெரியாம தானே நடந்தது. அதுக்கு இத்தனை ஆர்ப்பாட்டமா?'' என எரிச்சலுடன் சொன்னான்.

''ஆதி! உனக்கு வந்திதாவைப் பத்தி முழுசா ஒண்ணும் தெரியாது. அவள் தன்னோட வலிகளை, மனவலி, உடல்வலி ரெண்டையுமே வெளிய சொல்ல மாட்டா. இன்னைக்குக் கண் கலங்கியிருக்கான்னா அவளுக்கு ரொம்பவுமே வலிச்சிருக்கும்.

எப்பவுமே வலிகளைக் கண்ணீருக்குப் பதிலா அமைதி என்கிற திரையைப் போட்டு மறைச்சிடுவா. நீ எப்பவுமே அவளைச் சீண்டறதுனால உன்கிட்டே மட்டும் கோபத் திரையைப் போட்டுக்கிறா போல. சரி! நீ ஒரு சாரி கேட்டா குறைஞ்சா போயிடுவே'' என நண்பனை முடுக்க, வேண்டா வெறுப்பாக வந்திதாவிடம் மன்னிப்புக் கோரினான் அந்த வணங்கா முடியன்.

மாலை மங்க, எல்லோரும் கொண்டு வந்திருந்த உடைமைகளை எடுத்து வைக்க ஆரம்பித்தனர். ஆதிரன் மட்டும் இவர்களோடு சேராமல் தனியே ஏதோ செய்து கொண்டிருந்தான்.

சற்று நேரத்தில் அங்கே காவல்துறையைச் சேர்ந்த வாகனம் ஒன்று ஆதிரனுக்கு அருகில் நிற்க, அதிலிருந்து இறங்கிய காவலர்கள் ஆதிரனிடம் எதையோ விசாரித்துக் கொண்டிருந்தார்கள்.

ஆதிரன் சும்மா இருக்காமல் தன்னிடம் இருந்த 'லேசர் பாயிண்டரை' வைத்து விளையாடிக் கொண்டிருந்தான். அதுவும் எங்கே? வானத்தில். அதுவும் எப்போது? கடலோரத்தில் ரோந்து பணியில் ஈடுபட்டுக் கொண்டிருந்த ஹெலிகாப்டர் பறந்து செல்லும் சமயத்தில். இது ஒன்று போதாதா காவலர்களை அங்கு வரவழைக்க?

விசாரணை முடித்து காவலர் சென்றதும், பிரணவ் அதைப் பற்றி நண்பனிடம் கேட்க, ''ஒஹ்... அதுவா, என் லேசர் பாயிண்ட்டர்ல இருந்து வர்ற வெளிச்சம் வானத்துல எது வரைக்கும் போகுதுன்னு டெஸ்ட் பண்ணினேன்.

நடுவுல இந்த ஹெலிகாப்டர் வந்துடுச்சு. நான் அவங்களைச் சுடத்தான் குறி பார்க்கிறேன்னு நினைச்சுட்டாங்க. வெரி ஃபன்னி ஹ... ஹ... ஹா...'' எனக் கூறிச் சத்தமாகச் சிரித்தான் ஆதிரன்.

''என்ன ஒரு மூளை. தெரிஞ்சே பண்ணிட்டு ஏதோ தெரியாத மாதிரி.. வெரி ஃபன்னியா? உங்களுக்கு 'சென்டர் ஆப் அட்ராக்ஷனா' எப்போதும் இருக்கணும் போல'' என்றாள் வந்திதா எரிச்சலுடன்.

என்னதான் ஆதிரன் அவளிடம் மன்னிப்புக் கேட்டாலும் அவள் முகத்தில் குத்திய சுருக் சுருக் என்ற வலி



அவள் கோபத்தைச் சுடர்விட்டுப் பிரகாசிக்கத்தான் செய்தது.

''ஆமாம்! அப்படித்தான். ஜோக்கை ஜோக்கா எடுத்துக்கத் தெரியாத உன்கிட்டே நான் எதுக்கு விளக்கம் சொல்லணும்?'' என்றான் அவனும் எரிச்சலுடன். ஒரு தோள் குலுக்கலுடன் வந்திதா தன் பையை எடுத்துக் கொண்டு அவர்கள் காரை நோக்கி நடந்தாள்.

இரவு உணவுக்காக, 'தேர்ட் ஸ்ட்ரீட் ப்ரோம்னேட்' வந்தவர்கள் அங்கிருந்த ஓர் இந்திய உணவகத்தில் சாப்பிட்டனர். சாப்பிடும் பொழுது, வந்திதாவின் மேற்படிப்பு முடிந்து, நியூயார்க் நகரில் வேலைக்காக இன்னும் இரண்டு மாதத்தில் போய்ச் சேர வேண்டும் என்பதைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

சந்திரசேகர், வந்திதாவின் இடமாற்றம், அவள் எப்பொழுது அங்குச் செல்லப் போகிறாள் என்பதைப் பற்றிக் கேட்டுக் கொண்டிருக்க, சாதனாவும் பிரணவும் வந்திதாவிடம் ஒரு கடித உறையைத் தந்தனர். அதைப் பிரித்துப் படித்த வந்திதா, ''வாவ்! ரியல்லி?'' என ஆனந்தத்தில் கூத்தாடினாள்.

காரணம், அவளின் நெடுநாள் ஆசையான, கலிபோர்னியாவில் இருந்து சாலை வழியே நியூயார்க் செல்வதற்கான சுற்றுலாப் பயணத்தைப் பற்றிய விவரமும், அந்தப் பயணத்தில் சந்திரசேகர் குடும்பத்தினரும் வந்திதாவோடு செல்வதாகவும் குறிப்பிட்டிருந்ததுதான்.

வந்திதா தன் படிப்பை முடித்ததற்கு அவளுக்குத் தரும் பரிசாக அதைத் திட்டமிட்டிருந்தனர். சாதனாவும் பிரணவும். கண் கலங்கியவாறே அவர்களுக்குப் பலமுறை நன்றி கூறினாள் வந்திதா.

''வந்திதா! சாதனாவை நம்பாதே. அவ எதுக்கு இந்த ட்ரிப்புக்கு ஒத்துக்கிட்டான்னு தெரிஞ்சா நீ நொந்துடுவே'' என பிரணவ் கிண்டலாகச் சாதனாவைப் பார்க்க, 'ஏன்' என்பதைப் போலத் தோழியைப் பார்த்தாள் வந்திதா.

''ஒண்ணுமில்லை வது! அண்ணா சும்மா... கிண்டல் பண்ணறார்'' என்றாள் சாதனா முகம் சிவந்தவாறே. அவளின் முகச் சிவப்பே நிறைய விஷயம் புதைந்திருப்பதை வந்திதாவுக்குப் பறைசாற்றியது.

''எல்லாம் நிறைய இருக்கு வந்திதா. உன்கிட்டே இந்த ட்ரிப்பைப் பற்றிச் சொல்லிட்டு அப்படியே நம்ம சாதனாவோட நிச்சயதார்த்தத்தைப் பற்றியும் சொல்லணும்னு இருந்தோம்'' என பிரணவ் சொல்ல,

''ஹே! எனக்குத் தெரியாம என்னென்ன நடந்திருக்கு என்கிட்டே மூச்சு விடல நீ'' எனக் கண்டனத்துடன் தோழியைப் பார்த்தாள் வந்திதா.

''அது... அண்ணா... அப்பாதான்... வேண்டாம்...'' என சாதனா முடிக்காமல் திணற,

''நான் தான் சொல்ல வேண்டாம் எனச் சொன்னேன்ம்மா... அதைப் பற்றிச் சொல்லறேன்னு இந்த ட்ரிப்பைப் பத்திச் சொல்லிடுவா. அப்புறம் சஸ்பென்ஸ் போயிடும். உன்னோட ப்ராஜெக்ட் முடியட்டும் என காத்திருந்தோம்'' என பதில் தந்தார் அதுவரை அமைதியாக இருந்த சந்திரசேகர்,

''மாப்பிள்ளை யாருங்க அங்கிள்? எங்கே இருக்கிறாரு.''

''மாப்பிள்ளை பேரு விஷாக். சிகாகோல இருக்கிறாரு போன வாரம் தான் முடிவாச்சு. கல்யாணத்தை



இந்தியால வச்சுக்கறதுனால நிச்சயத்தைச் சிகாகோல வைக்கப் பிரியப்படறாங்க. மாப்பிள்ளை வீட்ல.

நம்ம ரோட் ட்ரிப் போறப்போ அப்படியே நிச்சயத்தையும் சிகாகோல வைக்கப் பிளான் பண்ணினோம்'' என விவரங்களை அடுக்கினார் பெரியவர்.

''அதான் நம்ம ட்ரிப்ல சிகா... கோவும் இருக்கா...?'' எனத் தன் தோழியைப் பார்த்து ராகத்துடன் இழுத்தாள் வந்திதா.

''சும்மா இரு வது'' எனச் சிணுங்கினாள் சாதனா வெட்கம் கலந்து.

எல்லாம் நன்றாகத் தான் போய்க் கொண்டிருந்தது! ஏற்கனவே விஷயம் அறிந்ததினால் இவர்கள் பேச்சில் கலந்து கொள்ளாமல் தன் கைப்பேசியை நோண்டிக் கொண்டிருந்த ஆதிரன், ''யாஹூ'' எனத் திடீரென்று கத்தினான்.

என்னவென்று பார்த்தவர்களுக்கு விஷயத்தைச் சொன்னான். ஒருவேளை வந்திதாவுக்கு மட்டும் விஷத்தைக் கக்கினானோ?

விஷயம் இதுதான். நியூஜெர்சியில் உள்ள ஒரு பிரபல பயோடெக்னாலஜி நிறுவனத்தில் அவன் சென்று வந்த நேர்முகத் தேர்வில் வெற்றி பெற்றுப் பணியில் சேர்வதற்கான வேலை நியமன உத்தரவைப் பார்த்துத் தான் அப்படிக் கத்தினான்.

ஆதிரனின் மகிழ்ச்சியில் மற்றவர்கள் பங்கெடுத்துக் கொள்ள, பிரணவ் தன் நண்பனையும் அவர்கள் செல்லும் பயணத்தில் உடன் வருமாறு அழைத்தான்.

''ஆதி! நீ ரெண்டு வருஷமா லீவே எடுக்கலையே. நீயும் எங்களோட வா. புது வேலையில ஜாயின் பண்ணினா அப்புறம் உடனே லீவு கிடைக்காது'' என்றான் பிரணவ்.

சற்று நேரம் யோசித்துக் கொண்டிருந்த ஆதிரன், வந்திதாவின் 'கடவுளே வரக்கூடாது...' என்ற இடைவிடாத முணுமுணுப்பைக் கேட்டு அவனும் வருவதாகச் சம்மதித்தான்.

ஆதிரனைக் கோபமாகப் பார்த்த வந்திதா, ''அப்படின்னா நான் வரலை. நீங்க மட்டும் போயிட்டு வாங்க'' என்றாள் அனைவரிடமும் பொதுவாக.

சாதனா, ''வது, இது என்ன சின்னப் புள்ள மாதிரி சண்டைப் போட்டுட்டு. நீ வரலைன்னா நாங்க யாரும் போகல'' எனச் சொல்ல, ''நமக்கு ஒரு டிரைவர் கிடைச்ச மாதிரியும் இருக்கும்'' எனத் தூண்டில் போட்டான் பிரணவ்.

''அவளுக்காக நாம ஏன் ட்ரிப்பை கேன்சல் பண்ணணும்?'' என்றான் பதிலாக ஆதிரன்.

''ஆஹ்... இந்த ட்ரிப் எனக்காக அரேஞ்ச் பண்ணினது. நான் இல்லாம நீங்க மட்டும் போவீங்களா? அதுக்கு நான் விட மாட்டேன். உங்களை விட இவங்ககிட்டே எனக்குத் தான் அதிக உரிமை இருக்கு. தெரிஞ்சுக்கோங்க'' என ஆதிரனிடம் உரிமைப் போராட்டம் நடத்திய வந்திதா,

''இவர் வந்தாலும் வரலைன்னாலும் எனக்கு என்ன வந்தது? நான் கட்டாயம் வருவேன்'' எனத் தன் சம்மதத்தை அனைவரிடமும் தெரிவித்தாள்.



ஆதிரன் சொன்னவளை விடுத்து, பிரணவைப் பார்க்க அவனோ சொல்லிக் கொண்டிருந்தவளைப் பார்த்துக் கொண்டிருந்தான். நண்பனை ஒரு மார்க்கமாகப் பார்த்த ஆதிரன் கேலியாகச் சிரித்துக் கொண்டான்.

இப்படித்தான் அவர்கள் பதினெட்டு நாட்கள் சுற்றுலாப் பயணத்தைத் திட்டமிட்டுத் தொடங்கினார்கள்!

---

**இலக்கு: - 3577 மைல்கள்...**

**நியூயார்க் நகரம்**

---

ஒரு மாதம் கழித்து, அதிகாலையில் கருப்பு நிற ஹோண்டா ஒடிசி வேன் ஒன்று ஆறு பேரை ஏற்றிக் கொண்டு கம்பீரமாகப் புறப்பட்டது. ஆம், அன்று தான் பயணத்தின் தொடக்க நாள்.

செல்லும் வழியில், ஒரு இடத்தில் 'ZZXYZ' என்ற சாலையைக் கடக்க, அதைப் பார்த்த ஆதிரன், ''எப்படித்தான் இப்படி அர்த்தமே இல்லாம பேர் வைக்கிறாங்க. ஒரு வேளை 'எபிசிடி' மறந்திருப்பாங்களோ. 'வெரி ஃபன்னி ஹ ஹ ஹா...'' எனச் சிரித்தவாறே காரைச் செலுத்திக் கொண்டிருந்தான்.

''உங்களுக்கு எல்லாமே ஃபன்னியா? அது இங்கிலீஷ்ல கடைசி வார்த்தைன்னு சொல்லிக்கறாங்க. உண்மையான்னு தெரியலை'' என பதிலளித்தாள் வந்திதா. அவள் சொன்னதைக் கேட்டு அலட்சியமாக உதட்டைப் பிதுக்கியவனின் பார்வை அவர்களை முந்திச் சென்ற காரில் பதிந்தது.

அந்தக் காரிலிருந்தவர்கள் சும்மா சென்றிருந்தால் ஆதிரனும் சும்மா இருந்திருப்பானோ என்னவோ. ஆனால் சென்றவர்கள் இவனைப் பார்த்து 'ஊ ஊ ஊ' எனக் கத்தி, கட்டை விரலைக் கீழே பார்த்தவாறு காண்பித்து விட்டுச் சென்றார்கள். ஆதிரனை உசுப்பிவிட இது ஒன்று போதாதா? ஆதிரன் என்னும் சிங்கம் சிலிர்த்து எழுந்தது.

அவர்கள் முந்தியது தான் தாமதம், இவனும் வண்டியின் வேகத்தைக் கூட்டினான். சாதனாவின் பெற்றோர்கள் உறங்கிக் கொண்டு வர, இளையவர்கள் தான் முழித்துக் கொண்டிருந்தார்கள்.

பிரணவ், நண்பனிடம் அத்தனை வேகம் வேண்டாம் எனக் கூறி, பார்த்துப் போகுமாறு அவனுக்கு மட்டும் கேட்கும் குரலில் சொன்னான். ஆனால், அதைப் பொருட்படுத்தாமல் முந்திச் சென்ற காரை முந்துவது தான் தன் இப்போதைய லட்சியம் என வேகத்தைக் கூட்டிக் கொண்டிருந்தான் ஆதிரன்.

ஒரு கட்டத்தில், அவன் வேகத்தைப் பொறுக்காத வந்திதாவோ கத்த ஆரம்பித்து விட்டாள். ''காரை ஓட்டத் தெரியாத ஆளுங்ககிட்டேயெல்லாம் காரை யாரு கொடுக்கச் சொன்னது, பிரணவ்? இது தான் கடைசி இவரைக் கார் ஓட்டச் சொல்லறது. காரை கொஞ்சம் நிறுத்தறீங்களா? நாங்க இங்கேயே இறங்கிக்கிறோம்'' என்றாள்.

''ஸ்ஸ்... வந்திதா! மெதுவாப் பேசு. அங்கிளும் ஆன்ட்டியும் எந்திரிக்கப் போறாங்க'' என்றவன் வந்திதா சொன்ன விஷயத்தைக் காதில் போட்டுக் கொள்ளாமல் தன் பாணியில் முன்னேறிக் கொண்டிருந்தான்.



சந்திரசேகர் எழுந்து ஆதிரனிடம், 'ஸ்பீடை குறைச்சுக்கோ ஆதி' எனச் சொல்லி விட்டால் அவன் கட்டுப்பட்டுத்தானே ஆக வேண்டும். அத்தோடு வண்டி ஓட்டும்போது யாராவது ஏதாவது சொன்னால் ஆதிரனுக்கு அறவே பிடிக்காது.

ஆதிரன் எவ்வாறு வந்திதா சொன்னதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லையோ அதைப் போலவே ஆதிரன் சொன்னதும் இவள் காதில் புகவில்லை.

''பார்த்துப் பார்த்து... முன்னாடி ஒரு ட்ரக் போகுது... ஐயோ... ரொம்ப ஸ்பீடா போகாதீங்க... வேற ஒரு கார் பாஸ்டா வருது. பார்த்து லேன் மாத்துங்க... போலீஸ் கார் வர்ற மாதிரி இருக்கு...'' என வந்திதா சத்தமாகப் பரபரக்க, ஆதிரன் எரிச்சலடைந்தான்.

கட்டுக்கடங்காமல் எரிச்சல் இருந்தும் அவள் சொன்னதுக்குச் செவி சாய்க்காமல் சாலையில் பார்வையைப் பதித்து மும்முரமாகத் தன் பணியில் ஈடுபட்டிருந்தான்.

திடீரென்று, ''மனுசனா இருந்தா சொல்றதைக் கேட்பாங்க... நீங்க மனுஷ லிஸ்ட்லேயே சேர்த்தி இல்ல. உங்களைக் கொண்டு போய் 'ஜூ'ல தான் வைக்கணும்'' என வந்திதா சொல்ல, அவள் குரலில் லேசாக சந்திரசேகர் அசைந்து, ''என்ன?'' எனத் தூக்கக் குரலில் வினவியதும் தான் தாமதம், வண்டியை ஓரம் கட்டினான் ஆதிரன்.

''மனுசியான நீயே ஓட்டிட்டு வா'' என வந்திதாவிடம் சொல்லி வண்டியை விட்டும் இறங்கினான்.

சின்னப் பசங்களிடம் தோற்று விட்டோமே என்ற எரிச்சல் அவனுக்கு. வந்திதாவும், அவன் சவாலை

விடாமல் பிடித்துக் கொண்டு கீழே இறங்கி, காரைச் சுற்றி வந்தாள்.

எதிரே வந்த ஆதிரன், ''பெண்ணா நீ? எனக்குத் தெரிஞ்சு உன்னை மாதிரி யாரையும் பார்த்ததில்லை. கார் ஓட்டறப்போ கத்தி ஆர்ப்பாட்டம் பண்ணக் கூடா துன்னு தெரியாது?

உன்னைக் கட்டிக்கப் போறவன் உன் கூட ஆர்கியூ பண்ணிப் பண்ணியே தாங்க முடியாம ஹார்ட் வெடிச்சு உடனே போய் சேர்ந்துடுவான்'' எனத் தன் எரிச்சலை மிகத் தெளிவாக அவளிடம் காட்டிவிட்டு அகன்றான்.

அவன் சொன்னதைக் கேட்டு விக்கித்து நின்றாள் வந்திதா. பலருடன் வாக்குவாதம் செய்திருக்கிறாள் தான். இவ்வளவு ஏன்? ஆதிரனிடமே பல தடவை மோதியும் இருக்கிறாள்.

ஆனால் இதுவரை யார் வாயிலும் இருந்து வராத வார்த்தைகளை அல்லவா உதிர்த்து விட்டான்! ஒரு உயிரை வாங்கும் அளவிற்கா தான் கொடூரமானவள் என மனதினுள் சுருண்டாள்.

'நான் அப்படி என்ன சொல்லிவிட்டேன். காரை மெதுவாக ஓட்டச் சொன்னது ஒரு குற்றமா? அதுவும் அனைவரின் நலனையும் மனதில் கொண்டு தானே அவ்வாறு சொன்னேன்.

இவனுக்கு உயிரின் மதிப்பைப் பற்றிக் கொஞ்சமாவது தெரியுமா? தெரிந்திருந்தால் இப்படிப் பேசுவானா?' என நின்ற இடத்திலேயே பிரணவ் வந்து அவள் தோளைத் தட்டும் வரை மனதிற்குள் மருகினாள்.

பேயறைந்ததைப் போன்ற தோற்றத்துடன் நின்றிருந்த வந்திதாவைப் பார்த்த பிரணவ், ''வந்திதா! நீ போய்



உட்காரு. நான் ஓட்டறேன்'' என மேற்கொண்டு ஒன்றும் சொல்லாமல் அவளைக் காரினுள் அனுப்பி வைத்தான்.

உள்ளே வந்து உட்கார்ந்ததும் எந்தப் பேச்சிலும் கலந்து கொள்ளாமல் வெளியே வெறித்துக் கொண்டிருந்த வந்திதா சற்று நேரத்தில் உறங்கியும் விட்டாள்.

பிரணவ் தான் தன் நண்பனிடம், 'என்னடா சொன்னே?' எனக் கண்களால் கேள்வி கேட்டுக் கொண்டிருந்தான். ஆதிரனோ, ஒன்றும் இல்லை எனத் தலையசைத்து உதட்டைப் பிதுக்கினான்.

கனத்த அமைதியுடன் கார் சீறிப் பாய்ந்தது!

---

**நெவாடா...**

**இலக்கு: 3295 மைல்கள்...**

**லாஸ்வேகஸ் (Las Vegas) நகரம்!**

---

பாலைவன தளத்தின் மேல் இருக்கும் இந்நகரம், பழுப்பு நிறம் கொண்ட வறண்ட மலைகள் சூழ கம்பீர மாக நின்றிருந்தது. இங்கே வெயிலின் தாக்கமும் அதிகமாகத்தான் இருந்தது.

உலகத்திலேயே கேளிக்கைக்குத் தலைநகரமாக விளங்கும் இந்நகரம், பல வானுயர்ந்த தங்கும் விடுதிகள் மற்றும் சூதாட்டக் கூடங்களைத் தன்னுள் அடக்கி யிருந்தது. இரவில், போட்டிபோட சூரியன் இல்லாததால் மின்சாரம் தன் ஆட்டத்தைத் துவக்கி லாஸ்வேகஸை தூங்கா நகரமாக மாற்ற முயன்றது.

காரினுள், உறக்கத்தில் இருந்து எழுந்த வந்திதாவுக்கு பிரமிட் போன்ற அமைப்பில் கட்டப்பட்ட விடுதி மற்றும் ஈபிள் கோபுரத்தின் பிரதி கண்களில் பட, உற்சாகம் மூண்டது. அவள் புன்னகையுடன் சாதனா விடம் பேச, அதைப் பார்த்த பிரணவுக்கு நிம்மதியாக இருந்தது.

விடுதியில், பிரணவும் ஆதிரனும் ஓர் அறையில் தங்கிக் கொள்ள மற்றவர்கள் வேறு அறையில் தங்கிக் கொண்டனர்.

அறைக்குள் சென்ற பிரணவ், நண்பனிடம், ''ஏன்டா! வந்திதா கிட்டே அப்படி என்ன சொன்ன? அவ இவ்வளவு அப்செட் ஆகிப் பார்த்து ரொம்ப நாள் ஆச்சு'' எனக் கேட்க, அவன் நடந்ததைச் சொன்னான்.

''உனக்கு யார் கிட்டே என்ன பேசறதுன்னே தெரி யாதா ஆதி! நீயெல்லாம் ஒரு சயின்டிஸ்ட்! போடா...'' என சலித்துக் கொண்டான்.

''அதுக்காக என்னோட டிகிரியை எடுத்துட்டு வந்தா காண்பிக்க முடியும்'' எனக் கிண்டலாகக் கேட்டான் ஆதிரன்.

அவனைப் பார்த்து முறைத்த பிரணவிடம், ''சரிடா! இனிமேல் அவளைக் கிண்டல் எல்லாம் பண்ணலை. ஆனா, எனக்கு முதல்ல இதைத் தெளிவுபடுத்து. உனக்கு அவளைப் பிடிச்சிருக்கா?'' எனக் கேட்டான்.

''அவளைப் போய் யாருக்காவது பிடிக்காம இருக் குமா? ஏன்னு தெரியலை, உனக்குத் தான் அவளைக் கண்டாலே பிடிக்க மாட்டேங்குது'' எனத் தன் மனக் குறையையும் கொட்டித் தெளிவாக பதில் தந்தான் பிரணவ்.



''நான் அந்த அர்த்தத்துல கேட்கலை. உனக்கு அவ மேல லவ்வான்னு கேட்டேன்'' இலைமறைக் காயாகக் கேட்டால் இவனிடம் வேலைக்கு ஆகாது என உணர்ந்து, நேரடியாக விஷயத்தைப் போட்டு உடைத்தான் ஆதிரன்.

''எனக்குச் சொல்லத் தெரியலை. அவளை ரொம்பப் பிடிக்கும். அவளோட இருக்கப் பிடிக்கும். ஆனா, லவ்வான்னு சொல்லத் தெரியலை'' எனத் தெளிவாக, குழப்பம் கலந்து பதில் தந்தான் நண்பனிடம்.

''ரொம்பத் தெளிவா தான்டா இருக்க... ஏன் கேட் டேன்னா, அப்படி வந்திதா மேல லவ் இருந்துச்சுன்னா எதுக்கும் இன்னொரு தடவை நல்லா யோசிச்சுக்கோ. இது உன்னோட வாழ்க்கை. அப்புறம் பின்னாடி ஃபீல் பண்ணக்கூடாது பாரு'' எனச் சொல்லித் திரும்ப, திறந்திருந்த கதவிற்கு வெளியே உக்கிரமாக நின்று கொண்டிருந்த வந்திதாவைப் பார்த்தான் ஆதிரன்.

''பிரணவ், அங்கிள் உங்களைக் கூப்பிடறார்'' எனச் சொன்னவள், அவன் சென்றதும், ''என்னமோ நீங்கதான் என்னைக் கல்யாணம் பண்ணிக்கப் போற மாதிரி எதுக்கு எனக்குக் கணவரா வரப் போறவரைப் பத்தி ரொம்பவும் அக்கறை காட்டறீங்க. இனிமேல் என்னோட விஷயத் துல தயவு செய்து தலையிடாதீங்க'' என ஆதிரனிடம் உரைத்தவள் வேகமாக நகர முயன்றாள்.

''ஹலோ, ஹலோ வந்து-தா... போயும் போயி உன்னை மாதிரி ஒரு பொண்ணை நான் கல்யாணம் பண்ணுவேனா? நெவர்! வாழ்க்கையில பாதி நாள் உன்னோட பேசிப் பேசியே வேஸ்ட் ஆயிடும். மீதி உன் னோட பேச்சைக் கேட்டுக் கேட்டே வேஸ்ட் ஆயிடும்.

வேற இல்லை இல்ல. போம்மா போ நடக்கறதைப் பேசு'' என்றான் ஆதிரன்.

''முதல்ல என்னை அப்படிக் கூப்பிடறதை நிறுத் துங்க மிஸ்டர். ஆதி'' எனக் கோபமாக அகன்றவள் தங்கள் அறைக்குள் சென்றாள்.

அங்கு உட்காந்திருந்த பிரணவிடம், ''நல்ல ஆளைக் கூட்டிட்டு வந்திருக்கீங்க. நல்லா சப்பாத்தி மாவைப் பெசைஞ்சு வச்ச மாதிரி ஒரு தலை, ஆந்தைக் கண்ணு, முறம் மாதிரி காது, கோடாலி மாதிரி மூக்கு, இது பத்தா துன்னு முள்ளம்பன்றி மாதிரி ஹேர்ஸ்டைல்.

இதை எல்லாம் தூக்கிச் சாப்பிடற மாதிரி அப்பப்போ வில்லன் சிரிப்பு வேற. இப்படி இருந்துட்டுப் பேச்சைப் பாருங்க'' என ஆதிரனைப் பற்றி அருமையாக வர்ணித் தாள்.

'நம்ம மூஞ்சி என்ன அவ்வளவு மோசமாவா இருக்கு' என அங்கிருந்த கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த் தான் அவளைத் தொடர்ந்து வந்த ஆதிரன். அத்தோடு நில்லாமல் அவன் தலை முடியையும் தொட்டுப் பார்த்துக் கொண்டான். முள்ளம்பன்றி போல் இருக்கிறதா என சரி பார்க்கிறானாம்!

அவன் கண்ணாடியில் பார்ப்பதைக் கண்ட பிரணவ், ''வாடா! உன்னைத் தான் அழகா வர்ணிச்சுட்டு இருந்தா வந்திதா'' எனச் சொல்லிச் சிரித்தான்.

நண்பன் அருகில் சென்று அமர்ந்தவன், ''என் அழகைப் பார்த்து ரொம்ப பேர் பொறாமைப் பட்டிருக் காங்க. அந்த லிஸ்ட்ல இன்னொருத்தர் சேர்ந்துட்டாங் கன்னு நினைச்சு விட்டுடறேன். சரி! இப்போ என்ன



ப்ரோக்ராம்? குளிச்சிட்டு வெளியில கிளம்பலாமா?'' என வேறு பேச்சிற்குத் தாவினான்.

''அதைத் தான் அப்பா சொல்லிட்டு இருந்தார். கொஞ்ச தூரம் நடந்துட்டு அப்படியே டின்னரை முடிச்சுட்டு வரலாம்'' என்றான் பிரணவ். அதன் பிறகு அனைவரும் குளித்து உற்சாகமாகக் கிளம்பினர்.

பலமுறை அங்கே வந்திருந்தாலும் லாஸ் வேகஸ் போலேவார்ட் (Boulevard) என்ற அந்த அகலப் பாதையை அங்குலம் அங்குலமாக கால்களால் அளந்த வாறும், பேச வேண்டிய கதைகளை வாய்களால் அளந்த வாறும் நடந்து சென்றனர்.

பெரியவர்களுக்குக் கால்கள் கடுக்க ஆரம்பித்தப் பின்னர் தான் உணர்ந்தனர் அவர்கள் நீண்ட தூரம் வந்து விட்டதை. அருகே இருந்த ஒரு சூதாட்டக் கூடத்தில் நுழைந்து பெரியவர்கள் இளைப்பாற, சிறியவர்கள் உள்ளே சுற்றிக் கொண்டிருந்தனர்.

உள்ளே சூதாட்டம் மட்டும் இல்லாமல், பல கடைகள், உணவு விடுதிகள், தாவரப்பூங்கா, மீன் காட்சியகம் என கண்டுகளிப்பதற்குப் பல சுவையான, சுவாரசியமான இடங்கள் இருந்தன. சற்று நேரம் அங்கே உலவிக் கொண் டிருந்தவர்கள் அறைக்குச் செல்லும் வழியில் திரும்பி நடக்க ஆரம்பித்தனர்.

திரும்பும் வழியில், அங்கிருந்த ஒன்பது ஏக்கர் பரப்பளவில் அமைந்த செயற்கை ஏரியில் உள்ள நீரூற்று இசைக்கு ஏற்ப நடனமாடிக் கொண்டிருந்தது. அனை வரும் அங்கே நடைபாதையின் ஓரம் தங்கி அந்த அழகிய நடனத்தை ரசிக்க ஆரம்பித்தனர்.

நடனத்தை மெய்மறந்துப் பார்த்துக் கொண்டிருந்த வந்திதா, ஒரு கட்டத்தில் உற்சாக மிகுதியில் அந்த நீரூற்றைப் பற்றி ரசித்து ஏதோ கூறியவாறே தன் தோழி சாதனாவின் கை என நினைத்து ஆதிரனின் கையைப் பற்றி அழுத்தி இவள் கையை அவன் கையினுள் கொக்கிப் போல் மாட்டினாள்.

மாட்டியவுடன் தான் அவளுக்கு ஏதோ உறுத்த, திரும்பிப் பார்த்து அதிர்ந்தாள். ஹா! பற்றிக் கொண்டிருந்தது வில்லனின் கையை அல்லவா?

தீயைத் தொட்டதைப் போல துள்ளிக் கையை உதறி உருவியவள், ''சாதனா எங்கே? என்னைச் சீண்டறதுக் குத் தானே இப்படிப் பக்கத்துல வந்து நிக்கறீங்க? உங்க கையைத் தொட்டவுடனேயே சொல்ல வேண்டியது தானே?'' எனப் படபடத்தாள்.

''நீ என்னோட கையைப் பிடிச்சு இழுத்துட்டு என்னமோ நான் தப்புப் பண்ணின மாதிரி குதிக்கற? சொல்ல லாம்னு தான் நினைச்சேன். ஆனா, என்கிட்டே ரொம்ப ஆசையா சிரிச்சிப் பேசிட்டு இருந்தியா, என்னடா உலக மகா அதிசயமா இருக்குன்னு பார்த்துட்டு இருந்தேன். உலக அதிசயத்தை யாராவது பார்க்காம, ரசிக்காம இருப் பாங்களா?'' என அவளையே திருப்பிக் கேள்வி கேட் டான் ஆதிரன்.

''உங்களைப் பத்தித் தெரிஞ்சிருந்தும் விளக்கம் கேட்டேன் பாருங்க என்னைச் சொல்லணும்!'' எனத் தலையில் அடித்தவாறே சாதனாவிடம் நகர்ந்தவள், ''சொல்லிட்டுப் போறதுக்கென்ன'' எனத் தோழியின் முதுகில் இரண்டு வைத்தாள்.



''இதைத் தானே அன்று வாலிபால் விளையாடும் போது நான் கேட்டேன். கேட்டா கண்ணை உங்க தலையிலா வச்சிருக்கீங்கன்னு யாரோ கேட்டாங்க'' என ஆதிரன் போட்டானே ஒரு போடு. குத்திக் காண்பிக்கிறா னாம்! அதைக் கேட்டவுடன் வந்திதாவின் முகம் விழுந்து விட்டது.

'என்னைப் பழிவாங்கறதுக்காகவே இப்படிப் பண் ணிட்டு, அவன் மேல தப்பில்லைன்னு உணர்த்தறா னாம். இவன் நிஜமாகவே வில்லன் தான் போல' என நினைத்துக் கோப முகத்துடன் அங்கிருந்து நகர்ந்தாள் வந்திதா.

இவள் ஏன் இப்படித் தொட்டாச்சிணுங்கியைப் போல இருக்கிறாள் என நினைத்த ஆதிரன், 'அவ எப்படி இருந்தா நமக்கென்ன' என மீண்டும் நீரூற்றைக் கவ னிக்கத் திரும்பினான்.

நீரூற்று தன் நடனத்தை முடித்துக் கொள்ள, அங்கிருந்து அகன்றவர்கள் அருகிலுள்ள ஒரு உணவுக் கூடத்தில் உணவை முடித்துக் கொண்டனர்.

பெரியவர்கள் இருவரும் அசதியாக இருப்பதால் அறைக்குத் திரும்புவதாகவும், இளையவர்களை இருந்து ரசித்துவிட்டு வருமாறும் கூறினார்கள்.

ஆதிரனும், பிரணவும் நடந்து சென்று தங்கள் காரை எடுத்து வர, பிரணவின் பெற்றோர்களைத் தங்கியிருக் கும் விடுதியில் விட்டுவிட்டு இளையவர்கள் சூதாட்டக் கூடத்தில் மீண்டும் கால் பதித்தனர்.

வந்திதா சூதாடுவதில் விருப்பம் இல்லாததினால் தனியாக அங்கிருந்த கடைகளைப் பார்த்தவாறே உலவிக் கொண்டிருந்தாள்.

மற்றவர்கள் சூதாட்டத்தில் மும்முரமாக இருக்க, ஒரு கட்டத்தில் வந்திதா தனியாக இருப்பதைப் பார்த்து, ''ஏன் வந்து-தா, விளையாடலையா?'' எனக் கேட்டவாறே வந்தான் ஆதிரன்.

''எப்படியும் போட்ட பணம் திரும்பி வரப் போற தில்லை. தெரிஞ்சே எதுக்குப் பணத்தை வேஸ்ட் பண்ண னும்? அதனால இன்ட்ரஸ்ட் இல்ல'' என உதட்டைப் பிதுக்கினாள்.

''உன்னை என்ன உன்கிட்டே இருக்கிற சொத்தை எல்லாம் வித்தா விளையாடச் சொன்னாங்க? சும்மா ஃபன்னுக்குத் தானே விளையாடச் சொல்லறது'' என அவன் மீண்டும் எடுத்துரைக்க,

''ப்ச்ச்'' என பதில் தந்தாள் வந்திதா. இது என்ன மாதிரியான பதில் என அவளைப் பார்க்க, ''அதுக்கு பதில் ஏதாவது ஷோ பார்க்கலாம்'' என்றாள் விளக்கமாக.

அதே சமயத்தில் இவர்கள் பேசிக் கொண்டிருந்ததைப் பார்த்த பிரணவுக்கு மூளைக்குள் மணியடிக்க, தன் தங்கையுடன் அவர்கள் நின்றிருந்த இடத்துக்கு விரைந்து சென்றான். அவர்கள் எலியும் பூனையுமாக மாறி சண்டை போடாமல் இயல்பாகப் பேசிக் கொண்டதைக் கேட்டவ னுக்கு நிம்மதியாக இருந்தது.

வந்திதாவின் ஆசையை உணர்ந்து அதை நிறை வேற்ற முடிவு செய்தனர். பிரணவும் சாதனாவும், இது அவளுக்காகப் போகும் பயணம் அல்லவா!

அதன்படியே அங்கே 'ப்ளூ மேன் குரூப்' என்ற இசைக் குழு நடத்தும் நகைச்சுவை கலந்த இசைக் காட் சியைக் கண்டுகளித்தனர்.



அவர்கள் மீண்டும் விடுதி திரும்பும் போது ஆதிரன் காரை ஓட்டிக் கொண்டு வர, நடுவில் காவலர் ஒருவர் அவர்களின் வண்டியை நிறுத்தினார். வந்திதாவோ அவளே ஒரு காரணத்தைக் கற்பித்துக் கொண்டு உடனே புலம்ப ஆரம்பித்து விட்டாள்.

''இதுக்குத் தான் உங்களோடவே வரவே கூடாது. இப்படி ஏதோ ஒண்ணு பண்ணி சிக்கல்ல மாட்டிக்கிறது. குடிச்சிட்டு வண்டி ஓட்டினா இப்படித்தான் ஆகும். என்னடா இன்னைக்கு ஒரு பிரச்சனையுமில்லாம நாள் நல்லா ஓடிடுச்சேன்னு பார்த்தேன்'' என ஆதிரனிடம் பொரிந்தாள்.

அவள் குரலில் கோபத்தின் சாயலை விட காவல ரிடம் மாட்டிக் கொண்டோமே என்ற பயத்தின் சாயல் தான் மிகுந்திருந்தது. ஆதிரன் பதில் சொல்வதற்கு முன்னால் காவலர் அங்கு வர அமைதியானாள்.

ஆதிரனைக் காரில் இருந்து இறங்கச் சொன்னவர் அவனிடம் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்தார். பின்னர் அவர் கூறியவற்றை செய்து காண்பிக்கச் சொல்ல அவனும் அதன்படி நடந்து கொண்டான்.

வெளியில் என்ன நடக்கிறது எனப் புரியாமல் காரி னுள் இருந்தவர்கள் விழிக்க, ஒரு வழியாக அந்தக் காவலர் ஆதிரனை விட்டு விட்டுக் கிளம்பினார்.

மீண்டும் காரின் உள்ளே வந்தவனிடம் பிரணவ் விவரம் கேட்க, ''அதுவா, ஸ்ட்ரைட் லைன்ல நடக்கச் சொல்லிக் கேட்டாரு. சும்மாவே நமக்கு நேரா நடக்க வராது. இதுல அண்ணாந்து பார்த்துத் தூக்கக் கலக்கத் துல இருக்கும் போது நடக்கச் சொல்லிக் கேட்டா...

அதான் கொஞ்சம் தடுமாறிட்டேன். 'வெரி ஃபன்னி ஹ ஹ ஹா...'' எனச் சொல்லிச் சிரித்தான்.

வாகனம் ஓட்டுபவர்கள் நிதானத்தில் இருக்கிறார்களா இல்லையா எனத் தெளிவுபெற அவர்களை அப்படி நடக்கச் சொல்லிக் காவலர்கள் பரிசோதிப்பது எப்பொழுதும் நடக்கும் ஒன்று. அதைத் தான் அந்தக் காவலர் ஆதிரனிடம் செய்யச் சொல்லிக் கேட்டிருக்கிறார்.

இவன் தடுமாறவும் அவர் அடுத்தப் பரிசோதனையையும் செய்திருக்கிறார். அதையும் ஆதிரனே சொல்வான் கேளுங்கள்.

''ஃபன்னியா? இதுக்குத் தான் குடிச்சிட்டு வண்டியை ஓட்டக் கூடாதுன்னு சொல்லறது'' எனச் சொன்னதையே மீண்டும் வந்திதா கூற, ''குடிச்சதை நீ பார்த்தியா?'' எனக் கேட்டான் ஆதிரன்.

''அதான் நீங்க வண்டியில ஏறியதுமே வாசம் வந்ததே. இதைப் பார்த்துட்டு வேற சொல்லணுமாக்கும்'' என முகத்தைத் திருப்ப, ''சரிடா! அப்புறம் என்ன ஆச்சு?'' என்றான் பிரணவ்.

''அப்புறம் 'எபிசிடி'யைப் பின்னாடி இருந்து சொல்லச் சொன்னார். நல்ல நேரத்துலேயே வராது. நைட் ஒரு மணிக்கா சொல்ல வரும். 'வெரி ஃபன்னி' ஹ ஹ ஹா'' என ஆதிரன் மீண்டும் சிரிக்க,

'குடிச்சிட்டு இல்லாத பில்ட் அப் வேற' என வாய்க்குள் முணுமுணுத்தாள் வந்திதா.

அதைக் கண்டுகொள்ளாமல், ''ஒரு ட்ரின்க் தான் குடிச்சேன். அதுவும் ரொம்ப நேரத்துக்கு முன்னாடி. இப்போ கிளம்பற சமயத்துல என் மேலே ஒருத்தர் தன்னோட



ட்ரிங்க்கை கொட்டிட்டார்ன்னு ஒரு வழியா புரிய வச்சுட்டு வந்தேன். ஹெட் லைட்டைப் போட மறந்துட்டேன். அதான் நிறுத்தியிருக்கார்'' என விளக்கம் தந்தான் காரை ஓட்டிக் கொண்டிருந்தவன்.

''தெளிவா இருந்தா தானே அதைப் போடறதுக்கு. யாருக்கு வேணும் இவனோட விளக்கம்' என முணுமுணுத்த வந்திதாவின் குரலில் இப்பொழுது கோபத்தின் சாயல் பயத்தை வென்றிருந்தது.

அவர்கள் தங்கியிருக்கும் விடுதி வர, விடுவிடுவென இறங்கி அவள் அறைக்குள் புகுந்து கொண்டாள் வந்திதா. இப்படித்தான் தங்கள் பயணத்தின் முதல் நாளைக் கழித்தனர்!

* * *

மறுநாள்! அன்றைய பொழுதையும் லாஸ் வேகஸில் கழிப்பதால் அனைவரும் சோம்பலுடன் நேரம் கழித்துத் தான் எழுந்தார்கள். அவர்கள் மட்டும் அங்கே சோம்பலுடன் இருக்கவில்லை. அந்நகரே அப்படித்தான் தூங்கி வழிந்தது. இரவில் இருந்த கலகலப்பும், பரபரப்பும் காணாமல் போய் மீண்டும் இரவுக்குத் தயாராகிக் கொண்டிருந்தது.

எழுந்தவர்கள், காலை உணவை அறைக்கே வரவழைத்து உண்டவாறு என்ன செய்யலாம் எனப் பேசிக் கொண்டிருந்தனர். வந்திதா ஷாப்பிங் செல்ல வேண்டும் எனக் கூறி, ஆதிரன் அதற்கு எதிராகப் போர்க் கொடியைப் பறக்கவிட்டான்.

''இந்தப் பொண்ணுங்களுக்கு வேற வேலையே இல்ல. உருப்படியா ஏதாவது பண்ணறதை விட்டுட்டு

எங்கப் போனாலும் ஷாப்பிங் தானா? நான் இதுக்கு ஒத்துக்க மாட்டேன்'' என ஆதிரன் கடுமையாக எதிர்த்தான்.

''நீங்க வேணா வரவேண்டாம். எனக்குப் போயே ஆகணும்'' எனப் பிடிவாதமாக முறைத்தாள் வந்திதா. ஆதிரன் எவ்வளவு முயன்றும் கடைசியில் அவளின் பிடிவாதமே வெற்றிக்கொடியை நாட்டியது.

''ச்சே!'' என வேண்டா வெறுப்பாகச் சொன்னவன், கிளம்புவதற்குத் தங்களறைக்குச் சென்றதும்,

''ஆனாலும் நீங்க அவ சொல்லறதுக்கு எல்லாம் இப்படித் தலையாட்டக் கூடாது. திஸ் இஸ் டூ மச். கூட வர்றவங்களைப் பத்திக் கொஞ்சமாவது நினைச்சுப் பார்க்க வேண்டாம். சரியான செல்பிஷ் கேர்ள்'' என நண்பனான பிரணவிடம் அவன் காது புளிக்கும் வரை வந்திதாவைப் பற்றித் திட்டித் தீர்த்தான்.

''ஆதி! எதுக்கு இவ்வளவு டென்ஷன்? உனக்கு வந்திதாவைப் பத்தி ஒண்ணும் தெரியாது. அவ இப்படி எல்லாம் பிடிவாதம் பிடிக்க மாட்டா. அப்படிப் பிடிவாதம் பிடிச்சா ஏதாவது காரணம் இருக்கும்'' என வந்திதாவுக்கு ஆதரவாக பிரணவ் பேச,

ஆரம்பித்த பேச்சை விடுத்து, ''இது கண்டிப்பா லவ் தான்டா! அவளை இப்படித் தாங்கற. ம்ம்ம்... நான் சொன்னா நீ கேட்க மாட்ட. சரி விதி யாரை விட்டது. நடப்பது நடக்கட்டும்'' என்றவாறே குளியலறைக்குள் புகுந்தான் ஆதிரன்.

அவனால் முடிந்த மட்டும் மெதுவாகக் கிளம்பி வந்தான். ஏதோ சீப்பை எடுத்து ஒளித்து வைத்துக்



கொண்டால் கல்யாணமே நின்று போய் விடும் என் பதைப் போல!

ஷாப்பிங் செய்யப் பிடிவாதமாகக் கிளம்பிய வந்திதா, கடைகள் மையம் கொண்ட இடத்தில் மையம் கொண் டவள் ஒரு மணி நேரத்தில் தனக்கு வேண்டியதை வாங்கி விட்டதாகக் கூறி ஓரிடத்தில் அமர்ந்தாள்.

சாதனாவும் அவள் அன்னையும் அவளருகில் அமர, பிரணவும் அவன் தந்தையும் கழிவறைக்குச் சென்றனர்.

ஆதிரனோ, 'இவ சொன்னா எல்லோரும் கேட்டுக்குவாங் களான்னு செக் பண்ணறதுக்காக இங்க வரணும்ன்னு அடம் பிடிச்சாளோ? அதுக்குள்ளே ஷாப்பிங்கை முடிச் சுட்டா.

ஒருவேளை ஒண்ணும் வாங்கலையோ?' என புரு வத்தை உயர்த்தியவாறே ஓரக் கண்ணால் வந்திதாவை நோட்டம் விட்டான். ஆனால், கையில் வாங்கியதற்கு அடையாளமாகப் பைகளைப் பார்த்ததும் திருப்தியடைந் தான்.

வந்திதாவின் பேச்சுக்குச் செவி சாய்க்க விரும்பாதவன், ''எனக்கு இன்னும் ஷாப்பிங் முடியலை. முடிச்சவங்க வேணா வெயிட் பண்ணுங்க, இல்ல, ரூமுக்கு நடந்து போங்க'' என வந்திதாவைப் பார்த்துக் கூறிய ஆதிரன் அங்கிருந்து அகன்றான்.

அவள் ஷாப்பிங் செய்வதற்கு முதல் ஆளாக வரிசை யில் நின்று முட்டுக் கட்டையைப் போட்டவன் இங்கே வந்ததும் அதற்கு நேர் எதிராக மாறிப் பேச, அவனை விசித்திரமாகப் பார்த்தாள் வந்திதா. அவனோ விசிலடித்த வாறே எதிரிலிருந்த கடைக்குள் நுழைந்தான்.

அவன் சென்ற கடையைப் பார்த்ததும், அவன் பிடிவாதம் பிடித்து அங்கு வந்ததற்கு வேண்டுமென்றே அவளிடம் வம்பு வளர்க்க அவ்வாறு செய்கிறான் என்பது ஊர்ஜிதமானது வந்திதாவுக்கு. அவன் செய்கையை நினைத்துச் சிரிக்க ஆரம்பித்து விட்டாள்.

உள்ளே சென்ற சில நொடிகளிலே அவசரமாக வெளியில் வந்த ஆதிரன், வந்திதா உட்கார்ந்திருந்த இடத்தை அவள் கவனித்துக் கொண்டிருக்கிறாளா என நோட்டம் விட்டான்.

கிடைத்த விடையில் எரிச்சலானான். ஏனெனில் அவள் சும்மா இருந்த சாதனாவையும் இழுத்து வைத்து ஆதிரனைக் காட்டிச் சிரித்துக் கொண்டிருந்தாள்.

அப்படி அவன் எந்தக் கடைக்குச் சென்றான்? கர்ப்பிணிப் பெண்கள் அணியும் துணிக்கடைக்குள் தான் அவ்வளவு உல்லாசமாக அவன் சென்றது!

வெளியில் வந்தவனுக்கு வந்திதா சாதனாவுடன் கூட்டுச் சேர்ந்து சிரித்ததும் அவமானமாகப் போய்விட்டது. அவன் வேண்டும் என்றே செய்வதை வந்திதா கண்டு கொண்டாளே என எரிச்சலடைந்தான்.

கீழே விழுந்ததும் மீசையில் மண் ஒட்டவில்லை என்பது போல பிரணவை அழைத்து, ''டேய்! எவ்வளவு நேரம் உனக்காக இங்க வெயிட் பண்ணறது? சீக்கிரம் வாடா. அப்போ தான் நான் வாங்க நினைச்சதைப் போய் வாங்க முடியும்'' எனச் சத்தமாகச் சொன்னான்.

அந்தப் பக்கம் இருக்கும் பிரணவிற்குப் புரிந்திருக்கும் என்றா நினைத்தீர்கள்? ஒரு வழியாக பிரணவ் வந்தவுடன் அவனைத் தள்ளிக் கொண்டு கிளம்பினான் ஆதிரன்.



ஆதிரன் திரும்பி வந்த பொழுது அவன் கையில் உள்ள பைகளைப் பார்த்த வந்திதா, 'இவன் வேண்டுமென்றே ஷாப்பிங் சென்று இவ்வளவு வாங்கி வந்திருக்கிறான் என்றால் வேண்டும் என்று கிளம்பினால் எவ்வளவு வாங்கி வருவான்?' எனத் தன் கற்பனையை ஓடவிட்டு, அவன் பைகளை சுமக்க முடியாமல் சுமந்து வருவதை நினைத்து, நகைத்தாள்.

ஒரு வழியாக ஆதிரன் வந்து சேரவும் அனைவருக்கும் பசியெடுக்க ஆரம்பித்தது. மதிய உணவு அமர்ந்து சாப்பிடும் பொழுது, வந்திதாவின் கைப்பேசி சிணுங்கியது.

அதை எடுத்து இயக்கிய வந்திதா, ''சாரி கண்ணா! நான் கூப்பிடணும்ன்னு நினைச்சேன். அதுக்குள்ள நீங்க கூப்பிட்டுட்டீங்க. கோவிச்சுக்காதீங்க. ப்ளீஸ் ப்ளீஸ்... என் செல்லம் இல்ல'' என அவசரமாக மறுமுனையில் இருப்பவரிடம் கெஞ்ச,

'இவளுக்கு இப்படியெல்லாம் கெஞ்சிக் கொஞ்சிப் பேச வருமா என்ன?' என அவளை விழி அகலப் பார்த்துக் கொண்டிருந்தான் ஆதிரன்.

அவள் பேசுவதைத் தான் ஒட்டுக் கேட்கிறான் என நினைத்த வந்திதா, 'மூஞ்சைப் பாரு. இங்கிதமில்லாம பேசறதை ஒட்டுக் கேட்டுட்டு' என முணுமுணுத்தவள், மெதுவாக அந்த இடத்தில் இருந்து நகர்ந்து சென்று பேச்சை முடித்துக் கொண்டு வந்தாள்.

மீண்டும் அவள் சாப்பிட அமர்ந்த பொழுது, சந்திரசேகர், ''வந்திதா இன்னைக்குக் காலையிலே உன் பாட்டிகிட்டே பேசினேன். அவங்க ஒரு முக்கியமான விஷயத்தைப் பத்தி உன்கிட்டே பேசச் சொன்னாங்க'' எனப் பீடிகையுடன் நிறுத்தினார்.

''பாட்டியோட பேசினீங்களா?'' என வியப்புடன் வினவியவள், ''என்கிட்டே கொடுக்கவே இல்லை. என்ன சொன்னாங்க? சொல்லுங்க'' என்றாள் உற்சாகத்துடன்.

''உன்னோட கல்யாணத்தைப் பத்தி...'' என அவர் மேலும் தொடரும் முன்,

''நினைச்சேன் அங்கிள். இந்தப் பாட்டிக்கு இதை விட்டா வேற பேசத் தெரியாதே. என்கிட்டே பேசிச் சலிச்சுட்டாங்க போல. அதான் உங்களை சிபாரிசுக்குப் பிடிச்சிருக்காங்களா? நல்ல ஆள் தான் இந்தப் பாட்டி'' என்றாள் வந்திதா பரிகாசமாக.

''அதில்லம்மா! நானும் ஆன்ட்டியும் உன்கிட்டே அதைப் பத்தி ஒண்ணு கேட்கணும். பிரணவுக்கும் கல்யாண வயசாயிடுச்சு. உங்க ரெண்டு பேருக்கும் பிடிச்சிருந்தா மேற்கொண்டு விஷயத்தைத் தொடரலாம் என பிரணவ்கிட்டே பேசினோம். அவனுக்கு ஒண்ணும் ஆட்சேபணை இல்லை. நீ என்னம்மா சொல்லறே?'' எனச் சொல்ல வேண்டியதைச் சொல்லி அவளைப் பார்த்தார்.

அவர்கள் பேசியதைக் கேட்டிருந்த ஆதிரன், 'இதைத் தான்டா நானும் அன்னைக்குக் கேட்டேன்' என்கிற மாதிரி நண்பனைப் பார்வையால் குற்றம் சாட்ட, நண்பனோ ஆதிரனைக் கவனிக்காமல் வந்திதா சொல்லும் பதிலுக்காக அவள் முகத்தைப் பார்த்திருந்தான்.

''அங்கிள்! என்னோட முடிவைச் சொல்லறதுக்கு முன்னாடி பிரணவ்கிட்டே கொஞ்சம் தனியாப் பேசணும் ப்ளீஸ்'' எனக் கேட்டாள் வந்திதா.

''சரிம்மா... பேசிட்டு அப்புறம் முடிவைச் சொல்லு. எந்த முடிவு எடுத்தாலும் உன் சந்தோசம் தான் முக்கியம்'' எனப் பேச்சை முடித்துக் கொண்டார்.



ஆனால் ஆதிரனோ அறைக்குச் சென்ற பின்னரும் பேச்சை முடிக்காமல் தன் நண்பனிடம் தொணதொணத்துக் கொண்டிருந்தான்.

''எனக்கு அப்பவே தெரியும். இப்படி தான் ஏதாவது நடக்கும் என்று. உனக்கு இதுல சம்மதமாடா? இவளைப் போய் உனக்கு எப்படி...?'' என முடிக்காமல் நிறுத்தினான்.

''ஆதி, நான் தான் முன்னாடியே சொன்னேனே எனக்கு அவளைப் பிடிக்கும்ன்னு. பார்க்கலாம் அவ மனசுல என்ன நினைச்சுட்டு இருக்கான்னு.''

''ஆனா, இனி வாழ்க்கை முழுக்க அவளை நான் பார்க்கணுமா? உன்னை ப்ரெண்டா அடைஞ்சதுக்கு நல்ல பலனைத் தந்துட்டடா. ஆதி, உனக்கு ஏன்டா இப்படி ஒரு சோதனை...'' எனத் தன் தலையிலேயே தட்டிக் கொண்டான் ஆதிரன்.

அப்பொழுது அங்கு வந்த வந்திதா, பிரணவிடம் தனியாகப் பேச வேண்டும் என்றாள். ஆதிரன் நண்பனிடம், 'பெஸ்ட் ஆப் லக்' சொல்லிவிட்டு இடத்தைக் காலி செய்ய முயன்றான்.

''நீங்க இங்கேயே இருங்க ஆதி. நாங்க வெளியில போறோம். அதோட ரொம்ப ஃபீல் பண்ணாதீங்க'' என ஆதிரனிடம் சொன்னவள் பிரணவுடன் வெளியேறினாள்.

'அடச்சே! எப்பவுமே நான் சொல்லறதைக் கரெக்ட்டா வந்து கேட்டுடுவா. இதே வேலையாத்தான் அலைஞ்சிட்டு இருப்பாளோ?' என எண்ணிக் கொண்டான் ஆதிரன்.

கிளம்பி வெளியில் வந்தவர்கள் ஒன்றும் பேசாமல் மௌனமாக சிறிது தூரம் நடந்தனர். பிரணவ் தன்

விருப்பத்தைச் சொல்லிவிட்டான். இனி தான் பேச வேண்டும் என உணர்ந்து தன் மௌனத்தைக் கலைத்தாள் வந்திதா.

''பிரணவ், எனக்கு உங்களைப் பிடிக்கும். தெரியாத யாரையோ கல்யாணம் பண்ணிக்கறதைவிட தெரிஞ்ச உங்களைக் கல்யாணம் பண்ணிக்கறது ரொம்ப சந்தோசம் தான்...'' என அவள் இழுப்பதைப் பார்த்துப் பக்கெனச் சிரித்த பிரணவ்,

''உனக்குச் சம்மதமில்லை என்கிறதைச் சொல்லறதுக்கு எவ்வளவு பாலீஷ்டா பேசற வந்திதா'' என்றான்.

''பிரணவ், ப்ளீஸ் நான் பேசி முடிச்சுடுறேனே. எனக்குக் கல்யாணத்துக்கு அப்புறம் இங்க யூ.எஸ்ல இருக்க இஷ்டமில்லை. அதனால ஒரு ரெண்டு வருஷம் இங்கே வேலை பார்த்துட்டு மறுபடியும் இந்தியாக்குத் திரும்பிப் போக நினைக்கிறேன்.

பாட்டிகிட்டே இன்னும் இதைப் பத்திச் சொல்லலை. அவங்க என் கல்யாணத்தைப் பத்திப் பேசினதும், அங்கிள் - ஆன்ட்டி நம்மளை ஒண்ணு சேர்க்க நினைக்கிறாங்க...'' என மேலும் தொடர முடியாமல் நிறுத்தினாள்.

''வந்திதா, சொல்ல வந்ததை முழுசா சொல்லி முடி. நான் என்ன நினைச்சுக்குவேன்னு தயங்காத. நான் எப்பவுமே உன்னோட பிரெண்ட்'' என அவளை ஊக்குவித்தான் பிரணவ்.

''அவ்வளவு சின்ன வயசுல அம்மா - அப்பா இறந்ததுக்கு அப்புறம், கூடப் பிறந்த அக்காவையும் பிரிஞ்சி இருந்தது ரொம்பக் கொடுமையா இருந்தது பிரணவ்.



பாட்டி, பெரியம்மா, பெரியப்பா என எல்லோரும் இருந்தாங்க. ஆனா, ஹாஸ்டல்ல தங்கிப் படிச்சேன்.

ஏன்னா, அழையா விருந்தாளியா பெரியப்பா வீட்ல இருக்க எனக்குப் பிடிக்கலை. என்ன தான் பாட்டி வரச் சொல்லிக் கட்டாயப்படுத்தினாலும் அதுக்கு என்னோட தன்மானம் இடம் கொடுக்கலை. எனக்குத் தன்மானம் ஜாஸ்தி தான்.

அப்பா - அம்மா இறந்து போய் நான் இந்தியாக்குத் திரும்பிப் போறப்போ என் பெரியம்மா போன் பண்ணி இங்கிருந்து அதை வாங்கிட்டு வா இதை வாங்கிட்டு வான்னு ஒரு பெரிய லிஸ்ட்டே கொடுத்தாங்கத் தெரியுமா?

அம்மா - அப்பா இறந்து போய் ரெண்டு வாரம்கூட இருக்காது. அப்போ என்னோட மனசு என்ன பாடு பட்டிருக்கும்ன்னு அவங்களுக்குத் தெரியுமா? எனக்கு அனுசரணையா இல்லைனாலும் பரவாயில்ல இப்படி மனசை ரணப்படுத்தியிருக்க வேண்டாம். அப்பவும் அவங்க கேட்டதை எல்லாம் அக்கா அலைஞ்சித் திரிஞ்சி வாங்கிக் கொடுத்தனுப்பிச்சாங்க.

இந்தியாக்கு அவங்களை ஆசையாப் பார்க்கப் போனா பாட்டியைத் தவிர எல்லோருக்கும் நான் கொண்டு போன பொருட்கள் மேலே தான் பற்றுதல் இருந்தது. மனுஷங்களைவிட 'மெட்டீரியல் திங்க்ஸ்' மேலே அவ்வளவு பற்றுதல் வைக்க முடியும்ன்னு அப்பத்தான் உணர்ந்தேன்.

அத்தோட நிறுத்தலையே. அங்கே போனதுக்கப்புறமும், 'அப்பா எவ்வளவு பணம் சேர்த்து வச்சிருந்தாரு', 'எவ்வளவு இன்சூரன்ஸ் பணம் வந்தது' இப்படித் தான்

கேள்விகள் கேட்டாங்க. எதுக்குத் தெரியுமா? அப்பாக்குச் சேர வேண்டிய சொத்தை எங்களுக்குத் தர வேண்டாம்ன்னு நினைச்சுத்தான்.

எங்களுக்குப் பணம் ஒரு பிரச்சனையா எப்போதும் இருந்தது இல்ல. ஆனா இப்படிப் பணக்கணக்குப் பார்க்கும் அவங்க வீட்ல எனக்கு இருக்கப் பிடிக்கலை. பாட்டி கூட தனி வீடு பார்த்துப் போகலாம்ன்னு சொன்னாங்க.

எனக்காக அவங்க எதுக்குப் பெரியப்பாகிட்டே சண்டைப் போட்டுப் பிரியணும்? அதனால ஈஸியா ஒரு முடிவைச் சொன்னேன். ஹாஸ்டல்ல தங்கிப் படிக்கறதா. பாட்டியைத் தவிர எல்லோரும் சந்தோஷப்பட்டாங்க.

லீவுக்கு மட்டும் அங்க போய் அவங்களோட இருப்பேன். அதுவும் பாட்டிக்காகத்தான். குடும்பத்தோட அங்கே இருந்த அந்த நாட்களை, சந்தோஷமா மனசுக்குள்ள பொக்கிஷமா வச்சிருக்கேன். அப்பப்போ இங்க வந்து உங்களோட இருப்பேன்.

இப்படி மாறி மாறி அல்லாடிட்டு இருந்த எனக்கு நிரந்தரமா ஒரு இடம் வேணும்ன்னு தோணுச்சு. அதுவும் இந்தியாவுல.

கல்யாணத்துக்கு அப்புறம் திகட்டத் திகட்ட அன்பைப் பொழியும் நிறைய சொந்தங்களோட இருக்கணும். நிறையக் குழந்தைகளைத் தத்து எடுத்து வளர்க்க முடியலைன்னாலும் ஒண்ணு ரெண்டு குழந்தைகளைத் தத்து எடுத்து வளர்க்கணும். இப்படி நிறைய ஆசைகள், கனவுகள் இருக்கு.

இங்க இருந்தா கண்டிப்பா இந்த ரெண்டுமே நடக்காது. குழந்தைகளைத் தத்தெடுக்க நிறைய லீகல் இஸ்சூஸ் இருக்கு.



அத்தோட எனக்காக உங்களையும் வற்புறுத்தி அங்கிள் - ஆன்ட்டிகிட்டே இருந்து பிரிச்சி இந்தியாக்குக் கூட்டிட்டுப் போகணும். அது சாத்தியப்படாது. ப்ராக்டிகலா யோசிச்சுப் பாருங்க. உங்களால இந்தியாக்கு வந்து இருக்க முடியுமா? அது வொர்க் அவுட் ஆகுமா?

நான் யூ.எஸ்க்குப் படிக்க வந்தது பாட்டியோட ஆசைக்காக. இப்போ கூட இங்க நான் வேலைக்குச் சேரக் காரணம் எனக்கு நியூயார்க்ல வேலை கிடைச்சதால தான். அப்பா - அம்மா கடைசியா வேலை செஞ்ச இடத்துல இருந்தா மனசுக்கு நிம்மதியா இருக்கும்ன்னு தான் சம்மதிச்சேன்.

நான் தப்பா ஏதாவது சொல்லி உங்களை ஹர்ட் பண்ணியிருந்தா ஐயம் வெரி சாரி'' எனத் தன் மனதில் உள்ளதை மடைதிறந்த வெள்ளமாக பிரணவிடம் கொட்டித் தன் நீண்ட உரையை முடித்து, பிரணவை உறைய வைத்தாள்.

வந்திதா சொல்லாமல் விட்டதும் பிரணவுக்குப் புரிந்தது. சந்திரசேகர், சௌந்திரவல்லியைக் காதலித்துத் தான் கைப்பிடித்திருந்தார். அதுவும் பலத்த எதிர்ப்புகளுக்கிடையே.

அவர்களின் பிறந்த வீட்டினர் தற்சமயம் இவர்களுடன் பேசிக் கொண்டாலும் இன்னுமே ஒட்டாமல் தான் இருந்தனர். அதனால்தான் சந்திரசேகர் அமெரிக்காவை நோக்கி வந்ததும்.

இப்படிச் சொந்த பந்தமே இல்லாமல் இருக்கும் உன்னை எப்படிக் கல்யாணம் செய்து கொள்வது என வந்திதா சொல்லாமல் விட்டாலும் உண்மை அது தான் எனப் புரிந்தது பிரணவுக்கு. வந்திதா தன் முகத்தைப் பார்த்துக்

கொண்டிருக்கிறாள் என உணர்ந்தவன் வாயைத் திறந் தான்.

''வாவ் வந்திதா! முதன் முதலா உன்னோட மனசுல இருக்கிறதை ஒபனா என்கிட்டே சொல்லி இருக்கிற. சாதனாகிட்டே கூட இது மாதிரி நீ பேசினது இல்லைன்னு எனக்குத் தெரியும். உன் மனசுல இப்படி ஒரு ஆசை இருந்தா அதுக்கு நான் மதிப்புக் கொடுத்துத் தான் ஆகணும். ஆல் த பெஸ்ட். பட் நாம எப்பவுமே நல்ல பிரெண்ட்ஸ்'' என மிக இயல்பாகக் கூறி அவள் கைகளைப் பற்றினான்.

''தேங்க்ஸ் பிரணவ் என்னைப் புரிஞ்சுக்கிட்டதுக்கு. அன்னைக்கு நீங்க ஆதிகிட்டே பேசினதைக் கேட்டேன். உங்களுக்கு என்னைப் பிடிக்கும். ஆனா லவ்வான்னு தெரியலை எனச் சொன்னீங்க. அதனால உங்களுக்கு ஏமாற்றமா இல்லை தானே?'' எனக் கேட்டு முறுவலித் தாள்.

''நீ சொன்ன மாதிரி தெரிஞ்ச பொண்ணுன்னா லைஃப் பிரச்சனை இல்லாம இருக்கும்ன்னு நினைச்சேன். அவ் வளவுதான். நோ ஹார்ட் பீலிங்க்ஸ்... ம்ம்ம்.. ஆனா, இப்போ நான் வேற ஆளைத் தேடணுமா...'' என போலியாகச் சலித்துக் கொண்டான்.

''டோன்ட் வொர்ரி. நான் ஹெல்ப் பண்ணறேன்'' எனச் சிரித்தவாறே அவனுக்கு உத்தரவாதம் தந்தாள்.

அவர்கள் உரையாடலை முடித்துக் கொண்டு தங்கி யிருந்த விடுதி அறைக்குக் கையில் ஒரு அட்டைப் பெட்டி யுடன் செல்ல, அதைப் பார்த்த ஆதிரனுக்கு எல்லாமே புரிந்தது.



அதாவது வந்திதா பிரணவிடம் தன் சம்மதத்தைத் தெரிவித்து விட்டாள். அதைக் கொண்டாடத் தான் இருவரும் கேக் வாங்கி வந்திருக்கிறார்கள் என மிகச் சரியாகப்(?) புரிந்து கொண்டான்!

பிரணவ் தங்கள் அறைக்குள் நுழைந்ததும் தான் தாமதம், ''என்னடா, மூஞ்சில பல்ப் எரியுது. வந்திதா சரி சொல்லிட்டாளா?'' எனக் கேட்டான் ஆதிரன்.

''ஆதி! உன்னோட கற்பனைக் குதிரையை ரொம்ப ஓடவிட்டு டயர்ட் ஆக்கிடாதே. அவளுக்கு இதுல விருப்பம் இல்லைன்னுட்டா'' என்றான் பிரணவ்.

''அப்போ இந்த கேக் எதுக்கு?'' என்றான் ஆதிரன், அதுதான் முக்கியம் என்பதைப் போல.

''அடப்பாவி, உன்கிட்டே எவ்வளவு சீரியஸா சொல் லிட்டு இருக்கேன். நீ கேக்கைப் பத்தி விசாரிக்கிற. ரொம்ப நல்ல பிரெண்டுடா நீ'' என பிரணவ் போலி யாகச் சலித்துக் கொள்ள,

''அவளுக்குச் சம்மதமில்லைன்னு தான் எனக்கு முன்னாடியே தெரியும். அதான் எனக்கு ஷாக்கிங்கா இல்லை'' என்றான் ஆதிரன், முன்னுக்குப் பின் முரணாக.

''ஏன்டா இப்போ தான் அவ சம்மதம் சொல்லிட்டா ளான்னு கேட்ட. அதுக்குள்ளே இப்படிப் பிளேட்டை மாத்திப் போடற.''

''அதில்லை பிரணவ், மத்தியானம் போன்ல யாரோ கூட கண்ணான்னு கொஞ்சிட்டு இருந்தா. அவ சம்மதிக்கலைன்னு சொன்னதும், அந்தக் கண்ணன் தான் காரணமா இருப்பான்னு நினைச்சேன்'' எனத் தன் மூளையைக் கசக்கிப் பிழிந்து கண்டு பிடித்ததை நண் பனிடம் விளக்கினான்.

''திரும்ப உன்னோட கற்பனைக் குதிரையை ஓட விட்டுட்டியா? அவ மத்தியானம் போன்ல பேசினது அவ அக்கா பையனோட. அவனைச் செல்லமா கண்ணான்னு கூப்பிடுவா. அதைப் பார்த்து ஏமாந்திட்டியா.

அதோட அவ சின்னக் குழந்தைகளை எப்பவுமே வாங்க போங்கன்னு சொல்லுவா. பெரியவங்க கிட்டே இருந்து தான் குழந்தைங்க கத்துக்குவாங்களாம்'' எனச் சொல்லி நண்பனைப் பார்த்து பலமாகச் சிரித்தான்.

நண்பனின் சிரிப்பைப் பிரதிபலிக்காமல், ''என்னது? அவளுக்கு ஒரு அக்கா இருக்காங்களா?'' என அதிர்ச்சிக் குரலில் வினவினான் ஆதிரன்.

''அதுக்கேன்டா இவ்வளவு ஷாக் ஆகிற?'' என வியந்தான் பிரணவ்.

''இல்ல.. அவளைப் பார்த்தா கூடப் பிறந்தவங்க கூட வளர்ந்த மாதிரித் தெரியலை. தனியா வளர்ந்த முரட்டுப் பிடிவாதக் குழந்தை மாதிரி தெரியுது. தனிக்காட்டு ராஜா.. ஒஹ் இவ ராணியோ... அந்த மாதிரின்னு நினைச்சேன். அதான் கேட்டேன்.''

''அவளுக்கு ஒரு அக்கா இருக்காங்க. ஆனா வந்திதா அவங்ககூட பன்னிரெண்டு வருஷம் தான் இருந்தா. செப்டம்பர் 11ஆம் தேதி நியூயார்க்கில் ட்வின் டவர் விழுந்தப்போ அவளோட அப்பா - அம்மா ரெண்டு பேரும் இறந்துட்டாங்க. அப்போதிலிருந்து வந்திதா தனியாத்தான் இருக்கா.

அக்கா நந்திதா இங்க காலேஜ் ஹாஸ்டல்ல இருந்துப் படிச்சாங்க. அப்புறம் வேலை, கூடப் படிச்சப் பையனோட கல்யாணம் என செட்டில் ஆயிட்டாங்க. அப்போ நந்திதாவுக்கு நல்லது கெட்டது புரியற வயசு.



ஆனா வந்திதா ரொம்பச் சின்னப் பொண்ணு. பாவம் அவ. ஆனா, யாருமே அவளைப் பார்த்து பரிதாபப்பட்டா அவளுக்குப் பிடிக்காது. அதே மாதிரி தன்மானமும் ஜாஸ்தி.''

''ஆனா, அதுக்கும் உன்னைக் கல்யாணம் பண்ணிக்கறதுக்கும் என்ன சம்மந்தம்? உன்னை ஏன் வேண்டாம்ன்னு சொன்னா?'' எனக் கேட்டான் நண்பன் குழப்பத்துடன்.

பிரணவ், வந்திதாவின் ஆசைகளைப் பற்றிக் கூற, ''பொழைக்கத் தெரியாத ஆளா இருக்கா. இங்க நல்ல ஒரு பொண்ணு கிடைப்பாளான்னு நான் தேடிட்டு இருக்கேன். இவ என்னடான்னா இந்தியாக்கு போறாளாம். வெரி ஃபன்னி. ஹ ஹ ஹா...'' எனச் சிரித்தான்.

தொடர்ந்து, ''ஆனா அவளைப் பத்தி ஒரு வார்த்தைக் கேட்டதுக்கு மகாயாணம் (மகாபாரதம் + ராமாயணம்) எழுதி, ப்ளாக் அண்ட் ஒயிட் படத்தையும் எடுத்திட்ட. வெரி ஃபன்னி. சரி அவ மேட்டரை விடு. இந்தக் கேக் எதுக்கு?'' என பிரிக்கப்படாதிருந்த கேக்கிலேயே கண்ணும் கருத்துமாக நிலை கொண்டிருந்தான் ஆதிரன்.

''உனக்கு அடி வேணுன்டா'' என ஆதிரனின் முதுகில் இரண்டு போட்டபின்,

''உனக்கு மறந்துடுச்சா? நாளைக்கு சாதனாக்கு பர்த்டே. அவளுக்கு கிஃப்ட் வாங்கத் தான் வந்திதா பிடிவாதமா ஷாப்பிங் கிளம்பினா. அதோட அவளோட அக்கா பையனுக்கும் ஏதாவது வாங்கிட்டுப் போகணும். இல்லாட்டி, அவன் இவளை வீட்டுக்குள்ளேயே விட மாட்டான்'' என மீண்டும் வந்திதாவிலேயே வந்து நின்றான் பிரணவ்.

''ஓஹ்... அப்படியா? நான் மறந்துட்டேன். நீ ஏன் இதை முன்னாடியே என்கிட்டே சொல்லலை? நானும் சாதனாக்கு கிஃப்ட் வாங்கி இருப்பேன். இரு... நான் போய் வாங்கிட்டு வரேன்'' என பிரணவ் எவ்வளவு தடுத்தும் கேட்காமல் வெளியில் சென்றான் ஆதிரன்.

அன்றிரவு சாதனாவின் பிறந்தநாளை அனைவரும் குதூகலமாகக் கொண்டாட, வந்திதா அவளுக்கு அழகிய கைப்பை ஒன்றைப் பரிசாகத் தந்தாள். ஆதிரன், அவசரமாகச் சென்று வாங்கிய சன் கிளாஸ் ஒன்றைப் பரிசாக அளித்தான். கூடவே வந்திதாவிற்கும் சன் கிளாஸ் ஒன்றை ஆதிரன் கொடுக்க, வந்திதாவோ அதை வாங்க மறுத்து விட்டாள்.

காரணம் இல்லாமல் யாரிடமும் அவள் பரிசை வாங்குவது இல்லை என்றும் அத்தோடு அவள் கண் மருத்துவர் பரிந்துரை செய்த சன் கிளாஸ் மட்டும் தான் அணிகிறாள் என்றும் தன்மையாக பதில் சொன்னாள்!

ஆனால் ஆதிரனோ சும்மா இருக்காமல், ''ஒண்ணு வாங்கினா ஒண்ணு ஃப்ரீன்னு சொன்னாங்க. அதான் வாங்கிட்டு வந்து, போனாப் போகுதுன்னு கொடுத்தா ரொம்பத்தான்'' எனத் தன் செய்கைக்கு விளக்கம் தந்தவன் அத்தோடு விட்டிருந்தால் அவன் ஆதிரன் அல்லவே.

''ம்ம்ம்... கண்ணு ஒண்ணுதான் ஒழுங்கா இருக்குன்னு நினைச்சேன். அதுவும் நொள்ளக் கண்ணா'' எனக் கூறி வந்திதாவின் நெற்றிக் கண்ணைத் திறக்க வைத்தான். பிரணவ் தான் இடையில் புகுந்து அவளைச் சமாதானம் செய்து வைத்தான்.



சாதனாவின் பிறந்த நாள் விழாக் கொண்டாட்டத்தின் முடிவில் மறுநாள் ஹூவர் டேம் செல்லும் நேரத்தை முடிவு செய்து அனைவரும் படுக்கச் சென்றனர். அப்பயணத்தின் இரண்டாவது நாள் இப்படித்தான் கழிந்தது!

---

## இலக்கு: 3261 மைல்கள்...
## ஹூவர் டேம்! (Hoover Dam)

---

அரிசோனா - நெவாடா மாநிலங்களின் எல்லையில், அழகாக நெளிந்து ஓடும் கொலராடோ நதியின் இடையே புவி ஈர்ப்பு விசையின் உதவியுடன் வளைந்து கட்டப்பட்ட அணைக்கட்டு தான் ஹூவர் டேம்.

எழுநூறு அடிக்கும் மேல் உயர்ந்து நிற்கும் இந்த அணைக்கட்டு, கொலராடோ நதியில் இயற்கைச் சீற்றத்தால் நேரும் வெள்ளங்களையும் அதனால் விளையக் கூடிய பெரும் சீரழிவையும் அடக்கி, நதியின் இருபுறமும் இருக்கும் மலையின் அரிப்பையும் தடுத்து, இயற்கை வளத்தைப் பல ஆண்டுகளாகப் பாதுகாத்து வைத்திருக்கிறது.

தற்பொழுது நீர்மின் நிலையமாக மாறிப் பல மாநிலங்களுக்கு மின்சாரத்தை உற்பத்தி செய்து வழங்குகிறது. கரடு முரடான, தரிசு நிலத்தில் கட்டப்பட்ட இந்த அணைக்கட்டு அமெரிக்காவின் பொறியியல் துறையில் ஏழு அதிசயங்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது.

வந்திதா காரை லாஸ் வேகஸிலிருந்து ஓட்டிக்கொண்டு வர, அவள் ஓட்டும் லாவகத்தையும் நேர்த்தியையும்

பார்த்து, 'பரவாயில்ல நல்லா தான் ஓட்டறா' என மனதுக்குள் மெச்சிக் கொண்டான் ஆதிரன்.

இருந்தாலும் அவளைச் சீண்டுவதற்கென, ''பார்த்துப் பார்த்து அங்கே ஒரு காக்கா பறக்குது... அங்கே ஒரு குச்சிக் கிடக்குது'' என அவன் சொல்லிக் கொண்டு வர, ஆதிரன் வேண்டும் என்றே வம்புக்கு இழுக்கிறான் எனப் புரிந்து கொண்ட வந்திதா ஒன்றும் பேசாமல் காரைச் செலுத்த, ஆதிரனுக்குத் தான் புஸ் என்று ஆகிவிட்டது.

இரண்டு நாட்களுக்கு முன்னால் அவன் ஓட்டும் பொழுது வந்திதா ஏதோ ஒன்றைச் சொல்லிச் சொல்லி அவனை டென்ஷன் பட வைத்ததற்காகப் பழி வாங்கு கிறானாம். சரியான வில்லன் தான் போல என நினைத்துக் கொண்டாள் வந்திதா!

அவர்கள் கிளம்பும் பொழுது ஆண்கள் ஒரு அணியாக வும் பெண்கள் ஒரு அணியாகவும் சேர்ந்து கொண்டு பாட்டுக்குப் பாட்டு விளையாடினார்கள். வந்திதா காரை ஓட்டிக் கொண்டிருந்ததினால் கவனத்தை முழுவதும் ரோட்டில் வைத்து அவர்கள் அணி பாடும் பொழுது மட்டும் அவர்கள் எடுத்துக் கொடுத்தப் பாட்டை அவர் களுடன் சேர்ந்துப் பாடினாள்.

அவள் பாடுவதைக் கேட்ட ஆதிரன், ''பிரணவ்! இங்க வைல்ட் அனிமல்ஸ் எதுவும் வராது இல்ல?'' என உண் மையாக விளக்கம் கேட்பதைப் போலக் கேட்டான்.

''இங்க எல்லாம் வராதுடா! உனக்கு எதுக்கு இந்த டவுட் எல்லாம்?'' என பிரணவ் வினவ, ''அப்பாடா தப்பிச் சோம். இங்க ஒருத்தருப் பாடற சத்தத்துல எங்கே நம் மளை அட்டாக் பண்ணிடுமோன்னு பயந்துட்டேன்'' என்றான் வந்திதாவைப் பார்த்தவாறு.



வந்திதா அப்பொழுதும் ஒன்றும் பேசாமல் தன் காரி யத்திலேயே கண்ணாக இருந்தாள்.

'பெரிய கடமை கண்ணாயிரம்... ச்சே ச்சே கடமை கண்ணுலட்சுமி...' என முணுமுணுத்தவன், வந்திதா மீண்டும் பாடுவதைக் கேட்டவுடன், ''கண்ணை ரோட்ல வச்சுட்டு ஓட்டச் சொல்லுங்க. பாட்டுப் பாடிட்டே ஓட் டினா அப்புறம் ஒழுங்கா போய்ச் சேர்ந்த மாதிரிதான்'' என மீண்டும் அவளைச் சீண்ட முயன்றான்.

''கண்ணைத் தானே ரோட்ல வச்சுட்டு ஓட்டணும். வாயை இல்லையே. வாய் தானே பாடுது. அதனால நீங்க பயந்துக்காதீங்க'' என வந்திதா ஆதிரனிடம் பதிலடி கொடுக்க, மற்றவர்கள் உண்மைதானே என ஆதிரனைப் பார்த்துக் கிண்டலாகச் சிரித்தனர்.

ஆதிரன் அசடு வழிய, ''இந்த வாய்க்கு ஒண்ணும் குறைச்சலில்லை'' என சத்தமாக முணுமுணுத்தான். முதல் முறையாக ஆதிரனின் வாயை அடைக்க முடிந்ததை நினைத்து வந்திதாவுக்கு மிகவும் உற்சாகமாக இருந்தது.

அவர்கள் பாடிக் கொண்டே ஹூவர் டேம்முக்கு வந்து சேர்ந்தபொழுது உச்சி வெயில் அவர்களின் உச்சியில் இறங்கியது. இருந்தும் அதைப் பொருட்படுத்தாமல் வண்டியிலிருந்து இறங்கி, அங்கிருந்த பார்வையாளர் மையத்தின் உள்ளே சென்றனர். அப்பொழுது தான் கிளம்பிக் கொண்டிருந்த பயண முகவருடன் டேமைச் சுற்றிப் பார்க்க அவர்களும் இணைந்து கொண்டனர்.

சுற்றிப் பார்க்கும் பொழுது வந்திதா எழுப்பிய, 'கட்டும் போது தண்ணியை எப்படித் திருப்பி விட்டாங்க?', 'எப்படி சிமெண்ட் ஊத்தினாங்க?' 'எவ்வளவு மின்சாரம் உற்பத்தி செய்யறாங்க?'

'வெயில் காலத்துல சிமெண்ட் செட்டாகாதே. அப்புறம் எப்படிப் பாலத்தைக் கட்டினாங்க?' போன்ற கேள்விகளையும், அணைக்கட்டு மற்றும் பாலம் பற்றின அறிவுக் கூர்மையையும் பார்த்து ஆதிரன் வியந்து போனான்.

'இவளுக்கு இத்தனை அறிவு இருக்கா? பரவாயில்லை. நான் கூட என்கிட்டே கோபப்பட மட்டும் தான் மூளையை யூஸ் பண்ணுவான்னு நினைச்சேன்' என மனதுக்குள் பாராட்டினான்.

வெளியில் வந்தவர்கள் மதிய உணவை முடித்துக் கொண்டு, நெவாடாவில் இருந்து கால்நடையாக அரி சேனாவிற்குச் சென்று அங்கிருந்த மணிக்கூண்டின் அருகே புகைப்படம் எடுத்தனர்.

எல்லா இடத்திலும் வந்திதாவைக் கவனித்த ஆதிர னுக்கு ஒன்று மட்டும் புரிந்தது. வந்திதா சற்று உயரமான இடத்தில் இருந்து கொண்டு கீழே பார்ப்பதைத் தவிர்க் கிறாள் என்பது.

'உயரத்தைப் பார்த்து அவ்வளவு பயமா?' என உதட் டைப் பிதுக்கிக் கொண்டான் ஆதிரன்.

ஒரே நேரத்தில் இரு வேறு மாநிலங்களில் இருப்பதை நினைத்து, சின்னப் பெண்கள் இருவரும் சிறு குழந்தை களாக மாறி குதூகலித்தனர். ஆனால் இதைப் போல வருடத்தில் ஐந்து மாதங்கள் தான் இருக்க முடியும்.

காரணம், நேரத்தை மாற்றி வைக்கும்பொழுது அரி சோனா மாநிலத்தில் அதைப் பின்பற்றாததால் ஒரு மணி நேரம் கூடுதலாக இருக்கும். ஒரே இடத்தில் இரண்டு வேளையில் இருப்பதும் வியக்கத்தக்கது என அதைப்



பற்றி சாதனா பேசிக் கொண்டு வர மற்றவர்கள் ஆமோ தித்தனர்.

கொலராடோ நதியைக் கடக்க ஹூவர் டேம்மின் மேல் செல்லாமல் இருக்க, சுமார் இரண்டாயிரம் அடி நீளமுள்ள பாலம் ஒன்றை, இரு மலைகளையும் இணைத்து சமீபத்தில் தான் திறந்தனர். பாலத்தின் மேல் இருந்துப் பார்க்க, வளைந்து வரும் நதியின் திமிரை அடக்கிக் கட்டுக்குள் கொண்டு வந்து அதைப் பல விதங்களில் பயன்படுத்தவும் செய்து, பெருமையுடன் நின்று கொண் டிருந்தது அந்த அணைக்கட்டு.

பாலத்தைக் கடந்து அரிசோனா மாநிலத்தில் தடம் பதித்து கிராண்ட் கேன்யனை அவர்கள் சேரும் பொழுது இரவாகி விட்டது.

---

**அரிசோனா**

**இலக்கு: 3017 மைல்கள்...**

**கிராண்ட் கேன்யன்! (Grand Canyon)**

---

ஆறு மில்லியன் வருடங்களாக கொலராடோ நதியின் கட்டுக்கடங்காத நச்சரிப்பால் கடைந்தெடுத்து செதுக்கப் பட்ட ஒரு சிற்பம் தான் கிராண்ட் கேன்யன். இரவில், கருமையை உடுத்திக் கொண்டு நதியின் தாலாட்டில் உறங்குபவள், அதிகாலையில் சூரியக் கதிர்களின் செல்லத் தீண்டல்களில் கண்முழித்து, பொன் நிறத்தைப் பூசிக் கொண்டு நம்மைக் கிறங்கடிப்பாள்.

மலை அடுக்குகளை ஆசையாக கதிரவன் தொட்டுத் தடவும் காட்சி நம் கண்களுக்குள் பாய்ந்து ஞாபக

இடுக்குகளில் அணிவகுத்து நிற்கும். கேன்யனின் சுவற்றின் மேலே ஆங்காங்கே தலைதூக்கி நிற்கும் சிறு சிறு மலை உச்சிகள் கோவில் கோபுரங்கள் போலக் காட்சியளித்தன. அதனால்தானோ அவற்றுக்கு விஷ்ணு கோவில், புத்தா கோவில் போன்ற பெயர்களும் இடப் பட்டனவோ?

மறுநாள்! அதிகாலையில் கேன்யனைப் பார்க்கச் சென்றவர்கள், பொன் மஞ்சள் வெயிலில் குளித்துக் கொண்டிருந்த கேன்யனை, அந்த ஏகாந்த தருணத்தை மிகவும் ரசித்தனர். வந்திதா தன் நவீன கேமராவைக் கொண்டு அழகானப் புகைப்படங்களை எடுத்துக் கொண்டிருந்தாள்.

வந்திதா கேமராவைக் கையாளும் விதத்தையும் புகைப்படத்தின் நேர்த்தியையும் பார்த்த ஆதிரன், 'இவளுக்கு இவ்வளவு நல்லா போட்டோ எடுக்க வருமா என்ன?' எனப் புருவத்தை உயர்த்தினான். அடுத்துக் கிடைத்த சந்தர்ப்பத்தில் வந்திதாவிடம் அதைப் பற்றிப் பேசவும் செய்தான்.

''வந்து-தா, எப்படி இவ்வளவு நல்லா போட்டோ எடுக்கிற? 'இட்ஸ் ரியல்லி அமேசிங்' எங்காவது கிளாஸ் எடுத்தியா?'' என ஆதிரன் அவளிடம் கேட்க, பிரணவும் சாதனாவும் வாய் பிளந்து பார்த்தனர். ஆதிரன் நல்ல விதமாக வந்திதாவைச் சீண்டாமல் பேசி விட்டானே!

இவர்களின் நிலையே இப்படி என்றால் வந்திதாவின் நிலையோ வேறு மாதிரி இருந்தது. 'ஆஹா.. வில்லனிடம் இருந்து எனக்குப் பாராட்டுக் கிடைக்கிறதா? இந்தக் காலத்தில் நல்லவர்களிடமிருந்து பாராட்டு பெறுவதே கடினமாக இருக்கும்பொழுது இவன் பாராட்டியது கனவு



இல்லையே?' எனத் திகைத்து நின்றாள். அதில் அவன் வந்து-தா என அழைத்ததைக் கூடக் கவனிக்கவில்லை.

சாதனா அவளை உசுப்பிவிடவும் சுயநினைவுக்கு வந்தவள், ''ஓஹ்... தேங்க்ஸ் ஆதி! எனக்கு போட்டோ கிராபில இன்ட்ரஸ்ட். அதனால கிளாஸ் எடுத்தேன்'' என பதில் தந்தாள்.

அதன் பின்னர் ஆதிரனும் வந்திதாவும் மேற்கொண்டு சரளமாக உரையாடத் தடையேதும் இருக்கவில்லை. காரணம் என்னவென்றால் ஆதிரனுக்கும் புகைப்படம் எடுப்பதில் இருந்த ஆர்வம்தான்.

அவர்களுக்குப் பேசக் கிடைத்துவிட்ட சந்தர்ப்பத்தை இருவருமே பயன்படுத்திக் கொண்டனர். புகைப்படம் எடுப்பது பற்றி வந்திதாவிற்குத் தெரியாததை ஆதிரன் செயல்முறையில் விளக்க, அவனுக்குப் புரியாததை வந்திதா சொல்லிப் புரிய வைக்க என அன்று முழுவதும் என்னவோ பல ஆண்டு காலம் பழகிய நண்பர்களைப் போல இருவரும் நடந்து கொண்டனர்.

உலக அதிசயங்களில் ஒன்றான கிராண்ட் கேன்யனில் நின்று கொண்டு, எட்டாவது அதிசயமாக அவர்களைப் பார்த்த பிரணவுக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது.

தனக்குப் பிடித்த முக்கியமான இரண்டு நண்பர்கள் அடிக்கடி சண்டை போட்டுக் கொள்கிறார்களே என தவித்துக் கொண்டிருந்தவனுக்கு இப்பொழுது அவர்களைப் பார்க்க நிம்மதியாகக் கூட இருந்தது.

ஆதிரனும் வந்திதாவும் இயல்பாகப் பேசிக் கொண்டிருந்தது எல்லாம் இரவு உணவு வேளை வரை தான்!

கிராண்ட் கேன்யனின் மேற்கே புதிதாகக் கட்டப்பட்ட 'ஸ்கை வாக்' என்கிற குதிரை லாடம் போன்ற அமைப்பில் கேன்யனின் விளிம்பில் கண்ணாடியினால் கட்டப்பட்டப் பாலம், கண்ணைக் கவரும் வகையில் அமைந்திருந்தது.

அதில் நடந்து சென்று கீழே பார்வையைத் தாழ்த்திப் பார்த்தால் கேன்யனின் ஆழமும் கொலராடோ நதியின் நெளிவும் மிக அழகாகத் தெரியும்.

அங்கு சென்ற நம் குழுவினருக்கு ஸ்கை வாக் மேலே நடக்க டிக்கெட் எடுத்துக் கொண்டு வர பிரணவ் செல்ல, வந்திதா வரவில்லை என்றாள். பிரணவ் அவளைக் கட்டாயப்படுத்தாமல் விட்டுவிட்டான்.

ஆதிரன் தற்போது முளைவிட்டுள்ள மெல்லிய நட்புணர்வு தந்த தைரியத்தில் அவளிடம், ''வந்து-தா! நீ எதுக்கு ஸ்கை வாக்ல நடக்கறதுக்கு வரலைன்னு சொன்ன? பயமா?'' எனத் தான் ஊகித்த காரணத்தைக் கேட்டான்.

''பயம் ஒரு காரணம். அது மேலே நடக்கும்போது கீழே விழுந்துடுவோம்ன்னு பயமா இருக்கு. எனக்குத் தெரியும். அப்படியெல்லாம் ஆகாதுன்னு. இருந்தாலும் என்னோட கால்கள் எனக்கு ஒத்துழைக்காது.

இன்னொரு காரணம், இத்தனை அழகா இருக்கிற இயற்கை ததும்பிய இடத்துல இப்படி எதுக்கு ஆர்டிபிசியலா ஒண்ணைக் கட்டி வைக்கணும்? இதில இருக்கிற இன்ஜினியரிங்கைப் பாராட்டறேன். ஆனா இது தேவையா? அதுக்காக நான் போய் சண்டை எல்லாம் போட முடியாது'' எனத் தான் வராததன் காரணங்களை அடுக்கினாள்.



'ஒஹ்.. இப்படிக் கூட யோசிக்கலாமா?' என ஆதிரன் நினைத்துக் கொண்டான். ஆனால் அதை வெளியில் சொல்லாமல்,

''உனக்காக இதைப் புதுசா கட்டப்போறது இல்லை. ஏற்கனவே கட்டினது மேலே, அதுவும் எப்போவாவது ஒரு தடவை தானே நடக்கப் போற. லைஃப்ல அப்பப்போ ரிஸ்க் எடுக்கணும் வந்து-தா. நீ எதுக்கு இவ்வளவு பயப்படற? அதுல இருக்கிற த்ரில்லே தனி தான். நாங்க எல்லோரும் இருக்கிறோம் இல்ல. வா எங்க கையைப் பிடிச்சுக்கோ'' எனப் பேசிப் பேசியே அவளைக் கரைத்தான்.

புகைப்படம் எடுப்பதைப் பற்றி இருவரும் சற்று நேரம் சரளமாக உரையாடியது கைகொடுக்க, வந்திதா ஆதிரனை வில்லனாக உருவகப்படுத்தியிருந்தவள் அதைச் சற்றுத் தளர்த்தி அவனை நல்லவனாகப் பார்க்க ஆரம்பித்திருந்தாள்.

அதனால் ஆதிரனுக்கும் தனக்கும் இடையில் இருந்த கசப்புணர்வுத் திரையை விலக்கி தைரியமாக அவனுடன் ஸ்கை வாக் மீது நடக்க சம்மதித்தாள் வந்திதா.

ஒரு கையை சாதனாவிடமும் மறுகையை ஆதிரனிடமும் கொடுத்து அவர்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளச் சொன்னவள், அந்தப் பாலத்தின் மேலே கண்ணை இறுக மூடிக் கொண்டு நடந்தாள். அவளைக் கண்ணைத் திறந்து கீழே பார்க்க வைப்பதற்குள் கையைப் பிடித்திருந்த இருவருக்கும் போதும் போதும் என்றாகி விட்டது.

அந்தப் பாலத்தின் மேலே நின்றிருக்கும் போதே ஆதிரனும் சாதனாவும் அவள் கையை விட்டுவிட்டு.

''அப்பாடா! ஒரு வழியா வந்திதாவைக் கூட்டிட்டுப் போயிட்டு வந்தாச்சு. எவ்வளவு பெரிய சாதனை செஞ்சிருக்கோம்'' என ஆதிரன் சொல்ல, கண்ணைத் திறந்து பார்த்தாள் வந்திதா.

''வாவ்! எவ்வளவு அழகா இருக்கு. பென்டாஸ்டிக், மார்வலஸ்...'' என இயற்கை அழகை ரசித்துப் பாராட்டியவள், தான் இன்னும் பாலத்தின் மேலே நின்று கொண்டிருப்பதைத் தாமதமாக உணர்ந்தாள்.

''ஓஹ் மை காட். ப்ளீஸ் யாராவது என் கையைப் பிடிச்சுக்கோங்க'' என அருகில் நின்றிருந்த சாதனாவின் கையைத் தாவிக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள்.

அவளருகில் வந்த ஆதிரன், ''கண்ணை மூடிட்டு இருந்தா இந்த அழகை எப்படி ரசிக்கறது? கொஞ்ச நேரமானாலும் இதை மெய்மறந்து ரசிச்சியே அதுக்கு ஏதாவது ஈடாகுமா, சொல்லு?'' என வந்திதாவிடம் கேட்க, ''உண்மைதான்'' என பயத்துடனே ஒத்துக் கொண்டாள் வந்திதா.

இந்தச் சந்தோஷமான சூழ்நிலை அவர்கள் சாப்பிடச் செல்லும் வரையிலுமே நீடித்தது. இரவு உணவுக்கு பிட்சா சாப்பிடும்பொழுது எதிலும் விளையாட்டுப் பிள்ளையான ஆதிரன் அங்கிருந்த கை துடைக்கும் காகிதத்தை ஒவ்வொன்றாக உருட்டி, பிரணவ் மீது வீசிக் கொண்டிருந்தான்.

அதைப் பார்த்த வந்திதாவுக்கு, 'இவன் ஏன் இப்படிப் பேப்பரை வேஸ்ட் செய்கிறான்' என்றிருந்தது. அவனிடம் அதைச் சொல்ல வாயைத் திறக்க, ஆதிரனின் விளையாட்டைப் பொறுக்க முடியாத பிரணவ் அவனிடமிருந்து காகிதம் அடங்கியப் பெட்டியைப் பிடுங்கி மறைத்து வைத்துக் கொண்டான்.



ஆதிரனோ, ''வச்சுக்கோ, எனக்கு என்ன உன் மேலே வீச வேற எதுவுமே கிடைக்காதா?'' என அருகிலிருந்த, தன் தொப்பி என்று நினைத்து வந்திதாவின் லென்ஸ் அடங்கிய பையைத் தூக்கி வீசும் பொழுதே ஏதோ சரியில்லை என உணர்ந்து, 'ஓஹ்.. நோ' எனக் கூவினான். ஆனால் பை அவன் கையை விட்டுச் சென்றிருந்தது.

பிரணவ் அவன் வீசிய பாதையில் இருந்து விலக அந்தப் பை கீழே விழுந்தது. லென்ஸ் என்னவாகியிருக்கும் என யாரும் சொல்லித்தான் உங்களுக்குத் தெரியுமா என்ன?

அவசரமாக இருக்கையில் இருந்து எழுந்த வந்திதா, பிரணவ் கீழே இருந்து எடுத்துக் கொடுத்த பையை வாங்கிக் கொண்டு உள்ளே ஆராய்ந்தாள்.

ஆராய்ச்சியின் முடிவில் கண்கள் சிவக்கக் கோபத்துடன், ''நீங்க தேவையில்லாம நல்லவனா மாறிப் பேசும் போதே நினைச்சேன், எதுக்கோ அடிப் போடறீங்கன்னு. நல்ல சமயம் பார்த்து என்னோட கேமரா லென்ஸை உடைச்சுட்டீங்களே. ச்சே!

எவ்வளவு நாள் கனவு தெரியுமா? இது மாதிரி ரோடு ட்ரிப் போகும் போது பார்க்கிற இடத்துல எல்லாம் போட்டோ எடுத்து ஒரு புக்கா பப்ளிஷ் செய்யணும்ன்னு. எல்லாம் போச்சு. உங்க கூட இந்த ட்ரிப்புக்கு நான் வரலைன்னு சொன்னா யாராவது கேட்டாங்களா?'' எனப் பொரிந்து விட்டு விடுவிடுவென்று தங்கள் அறையை நோக்கிச் சென்றாள்.

எவ்வளவு சொல்லியும் யாராலும் அவளைச் சமாதானப்படுத்த முடியவில்லை. வாழ்க்கையில் இது போல் ரோட் ட்ரிப் செல்ல எத்தனை தடவை சந்தர்ப்பம் கிடைக்கும்.

அதனால் அவர்களும் ஒரு கட்டத்துக்கு மேல் அவளை விட்டு விட்டனர். எதற்கும் கலங்காத ஆதிரனே வந்திதாவின் சோர்ந்த முகத்தைப் பார்த்து சோர்ந்து விட்டான்.

''வந்திதா, சாரி! உன்னோட லென்ஸ் பேக்ன்னு தெரியாம தூக்கி வீசிட்டேன். என்னை மன்னிச்சுடு. வேணா என்னோட கேமராவை வச்சு போட்டோ எடு'' என்றான் ஆதிரன் சமாதானப்படுத்தும் விதமாக.

அவன் வைத்திருந்ததும் நல்ல விலை உயர்ந்த, தரமான புகைப்படம் எடுக்கப் பயன்படும் கருவி தான். அதனால் தான் அவனும் தன் தவறை உணர்ந்து அதைத் தர முன் வந்தான்.

''தயவு செய்து என்னைத் தனியா விடறீங்களா? நீங்களே வச்சுக்கோங்க உங்க கேமராவை. வாழ்க்கையிலே எப்பவுமே ஜாலியா இருக்க முடியுமா? அப்பப்போ கொஞ்சம் சீரியஸாவும் இருந்து பழகுங்க'' எனச் சொல்லித் தன் படுக்கையில் படுத்து இழுத்துப் போர்த்திக் கொண்டாள்.

பிரணவ், கண்களாலேயே 'இப்போதைக்கு அவளை விட்டுடு' எனச் சொல்லி ஆதிரனை தங்கள் அறைக்கு அழைத்துச் சென்றான்.

தங்கள் அறைக்குச் சென்றதும், ''அவ அப்செட்டா இருக்கும்போது யாரோடவும் பேச மாட்டா. நாளைக்கு அவ சரியாயிடுவா. அப்போ பார்த்துக்கலாம்'' எனக் கூறி நண்பனை உறங்கச் சொன்னான் பிரணவ். இப்படித் தான் தங்கள் பயணத்தின் அடுத்த இரு தினங்களைக் கழித்தனர்!

* * *



ஆதிரனின் சிறுபிள்ளைத்தனமான நடவடிக்கைகளுக்குக் காரணமும் இருந்தது. பெண் குழந்தை வேண்டும் என்கிற ஆசையில், ஆதிரனின் பெற்றோர்கள் மூன்றாவது முத்தாக, இரண்டு அண்ணன்களுக்குத் தங்கையாக ஒரு பெண்ணையும், கூடவே போனஸாக ஒரு தம்பியாக இவனையும் ஈன்றெடுத்து, உலகத்தில் இருக்கும் செல்லத்தை எல்லாம் கொட்டிக் கவிழ்த்து அவனை வளர்த்தனர்.

இல்லையென்றால் பெண் குழந்தைக்குக் கொடுக்கும் முக்கியத்துவத்தை இவனுக்குக் கொடுக்கவில்லை என அவன் போர்க்கொடி தூக்கி அனைவரையும் கலங்கடித்து விடுவானே! போதாததற்கு அண்ணன்களுக்கும் புகுந்த வீட்டுக்கு வந்த அண்ணிகளுக்கும் சிறு பிள்ளையானான்.

சித்தப்பாவாக இருக்க வேண்டியவன் சின்னப் பாப்பாவாக மாறி அவன் அண்ணனின் குழந்தைகளுடன் சரிக்குச் சரி மல்லுக்கு நின்றான். இதுவரைக்கும் அவனை யாரும் கடிந்து ஒரு சொல் சொல்லியதில்லை.

ஓரளவுக்கு வளமான குடும்பத்தில் பிறந்தவனுக்கு எந்தப் பிரச்சனை வந்தாலும் அதை எதிர்கொள்ள இத்தனை நபர்கள் இருக்க, ஆதிரன் தன் வாழ்க்கை முழுவதுமே இப்படித்தான் சந்தோஷமாகவும் கலகலப்பாகவும் எந்தவிதக் கஷ்டமுமில்லாமல் அனுபவித்து வந்தான்.

பார்ப்பவர்கள் எல்லாம் தன்னைப் போலவே ஜாலியாக இருப்பார்கள் என்கிற எண்ணம் அவனுக்கு. அதனால்தான் அவன் வந்திதாவைப் பார்த்தபொழுது அவளும் பதிலுக்குச் சீண்டுவாள் என்ற எதிர்பார்ப்புடன் அவளைச் சீண்டியதும்.

அவன் வாழ்க்கையில் இதுவரைக்கும் சந்தித்த நபர்கள் கூட அவன் அவ்வாறு நினைப்பதற்குக் காரணமாக இருக் கலாம். என்னதான் கடினமான துறையைப் படிப்பதற்குத் தேர்ந்தெடுத்திருந்தாலும் அதனால் எல்லாம் அவனின் அடிப்படைக் குணங்கள் மாறவில்லை.

வந்திதாவை அவன் சீண்டியதும் அவள் தொட்டாச் சிணுங்கியாய் மாறிக் கோபப்படுவதுமாக இருக்க, 'ஏன் தான் இவள் இப்படி நெருப்பைத் தின்றதைப் போல இருக்கிறாளோ? கொஞ்சமாவது ஜாலியா இருந்தா தானே லைஃப் சந்தோஷமாவும் அர்த்தமுள்ளதாகவும் இருக்கும். எப்பவுமே சீரியஸா இருந்தா லைஃப்ல என்ன இருக்கு?' என்றிருந்தது ஆதிரனுக்கு.

வந்திதாவின் நிலையோ வேறு மாதிரி இருந்தது. அவள் வாழ்க்கையில் சிறு வயதில் ஏற்பட்ட இழப்பு களின் விளைவால் எல்லாவற்றையும் இயல்பாக எடுத்துக் கொள்ளாமல் இறுக்கமாகவே இருந்தாள்.

என்ன தான் எல்லோரிடமும் ஓரளவுக்கு நன்றாகப் பேசினாலும் வந்திதா யாருடனும் நெருக்கமாகப் பழகு வதுமில்லை; மனம் திறந்து பேசுவதுமில்லை. சாதனா வின் குடும்பத்தார் மட்டும் தான் விதிவிலக்கு. காரணம், அவர்களின் மீதிருந்த அன்பு அவள் சிறுமியாக இருந்த பொழுதே மலர்ந்ததனால்.

பள்ளிக்கூடத்தில் படிக்கும் பொழுது மற்றவர்களின் பரிதாபத்திற்கு ஆளாகக்கூடாது என நினைத்து தன்னைக் கடினமாக மாற்றிக் கொண்டாள். அவளின் குணம் இளங்கலைப் படித்து முடிக்கும் வரையிலுமே அப்படித் தான் இருந்தது.



மேற்படிப்புப் படிக்கவென கலிபோர்னியாவுக்கு விண்ணப்பிக்க ஆரம்பித்தபொழுது தான் ஓரளவுக்கு மற்றவர்களிடம் பேச ஆரம்பித்தாள். பல்கலைக்கழகம் சென்ற பின் ஏற்பட்ட மனமுதிர்ச்சி காரணமாகத்தான் தன் இறுக்கத்தைச் சற்று தளர்த்தியும் இருந்தாள். ஆனால், முழுவதுமாக மாறிவிடவில்லை.

முதன் முதலாக ஆதிரனைப் பார்த்தபொழுது சகபயணி என்ற முறையில் தான் பேச ஆரம்பித்தாள் அவள். ஆனால் அவனோ இவளைப் பார்த்த பொழுதெல்லாம் வம்புக்கு இழுத்துக் கொண்டே இருக்க, 'இவன் ஏன் இப்படித் தொல்லைப்படுத்தி என்னைச் சினமுற வைக்கிறானோ. கொஞ்சமாவது லைஃப்பை சீரியஸா எடுத்துக்கிறானா?' என்றிருந்தது.

வந்திதாவை இதுவரை யாரும் ஆதிரன் சீண்டியது போலச் சீண்டியது இல்லை. அதுவும் முன்பின் அறியாத ஒருவன்!

இப்படி வாழ்க்கையை இரு வேறு கோணங்களில் எடுத்துக் கொண்டு பயணிக்கும் இவர்கள் இருவரும் ஒன் றாகச் சுற்றுலாப் பயணம் வந்திருக்கிறார்கள். அதனால் தான் அடிக்கடி சின்னச் சின்ன உரசல்கள் அவ்வப்பொழுது அரங்கேறின.

விடுதி அறையில், கட்டிலில் படுத்திருந்த வந்திதா வுக்குத் தூக்கத்தை விடத் துக்கம் தான் மிகுதியாக இருந்தது. அவளுக்கு கேமரா லென்ஸ் உடைந்தது கூடப் பெரிதாகத் தெரியவில்லை.

அவளால் இந்தப் பயணத்தில் இனி அவள் நினைத்த அளவுக்குப் புகைப்படம் எடுக்க முடியாததோடு அவள் கனவு கண்டிருந்த புத்தகம் வெளியிடுவதும் தடைப்படு கிறதே என நினைத்துத் தான் துவண்டு போனாள்.

துக்கப்பட்டு துக்கப்பட்டு, ஒரு கட்டத்தில் தூக்கம் துக்கத்தை வெற்றி கொள்ள கண்ணயர்ந்தாள் வந்திதா.

அடுத்த அறையில் இருந்த ஆதிரனோ நண்பனிடம் புலம்பித் தள்ளி விட்டான். ''பிரணவ்! தெரியாமதான் நடந்தது. நான் வேணும்னே பண்ணின மாதிரி நினைச் சுட்டா. நீயாவது சொல்லுடா'' என நண்பனைச் சிபாரி சுக்கு அழைத்தான்.

''எனக்குத் தெரியும் ஆதி. இன்னைக்கு விட்டுட்டு நாளைக்குப் பேசலாம். அப்போ பிரச்சனை இவ்வளவு பெரிசாத் தெரியாது. வந்திதாவுக்கு யார் கிட்டேயும் கோபத்தை ரொம்ப நேரம் இழுத்துப் பிடிச்சு வச்சுக்கத் தெரியாது. அதனால நாளைக்குச் சரியாயிடுவா'' எனச் சமாதானப்படுத்தினான் நண்பன்.

ஆதிரனுக்கு அது உண்மை தான் என்று தோன்றியது. உதாரணம், அவன் என்ன தான் அவளை வம்புக்கு இழுத்துக் கோபப்பட வைத்தாலும் மீண்டும் மீண்டும் அவனிடம் பேசுகிறாளே. அதனால் நண்பன் சொன்ன சமாதானத்திற்குச் செவி சாய்த்தான்.

மறுநாள்! அதிகாலையிலேயே எழுந்து குளித்து விட்டுச் சாப்பிடச் சென்ற ஆதிரனின் கண்களில் வந்திதா படவேயில்லை. அங்கிருந்த சாதனாவிடம் அவள் எங்கே எனக் கேட்டபொழுது, ''லேட்டா எழுந்திருச்சா. நாங்க கிளம்பும்போது கேட்டப்போ 'பிரேக் பாஸ்ட்'டை ரூமிற்கு வாங்கிட்டு வரச் சொல்லிட்டா'' என பதிலளித் தாள்.

''நான் வேணா போய் கொடுத்துட்டு வரட்டா'' எனப் பறந்த ஆதிரனிடம், ''இல்லைங்க ஆதி! நாங்க கிளம் பினப்போ தான் குளிக்கப் போனா. அதனால நாங்க போறப்போ கொண்டு போனா போதும்'' என்றாள்.



அவளைப் பார்த்து எப்படியாவது மீண்டும் மன்னிப்பை வேண்டி, தன்னிலை விளக்கம் தந்துவிட வேண்டும் என நினைத்துக் கொண்டிருந்தவனுக்கு நிலைகொள்ள வில்லை. என்ன செய்வது? பொறுத்துத்தானே ஆக வேண்டும்.

அவர்கள் அடுத்த இலக்கை நோக்கிக் கிளம்ப, அது வரை ஆதிரனின் கண்ணில் படாமல் இருந்த வந்திதா, ஒன்றும் பேசாமல் காரில் வந்தமர்ந்தாள்.

ஆதிரனின் மன்னிப்பை, 'இட்ஸ் ஓ.கே.' என இரு வார்த் தைகளில் ஏற்றுக்கொண்டு அதை மறந்து விட்டாள்.

---

**யூட்டா...**

**இலக்கு: 2766 மைல்கள்...**

**சயான் தேசியப் பூங்கா! (Zion National Park)**

---

பாறைகளின் மேல் சுழற்றி அடித்த ஆவேச மழைப் பொழிவால் மற்றும் பனிப்புயலால் படைக்கப்பட்ட அதிசயங்கள் இப்பூங்காவில் நிரம்பி இருந்தன. சிகப்பும், டேன் நிறமும் கொண்ட சேண்ட்ஸ்டோன் என்னும் பாறையைக் குடைந்து அமைக்கப்பட்டது இப்பூங்கா.

இப்பூங்காவில் மலைகள், மழைக்கணவாய்கள், நதிகள், இயற்கையிலேயே உருவாக்கப்பட்ட வில் வளைவு போன்ற பாறைகள் எனப் பலதும் உள்ளடங்கி யிருந்தன. இயற்கையின் ததும்பி வழியும் எழிலும்,

பறவைகளின் ரீங்காரமும், மரங்கள் ஒன்றோடு ஒன்று பேசிக் கொள்ளும் மொழியும் நம்மை முற்றிலும் வேறு ஒரு உலகுக்கு அழைத்துச் செல்லும்.

இப்பூங்காவிற்கு மதியம் வந்தடைந்தவர்கள் இங்கு நிலவியிருந்த அழகான அமைதியை, கண்களுக்குக் குளிர்ச்சியான எழிலைப் பார்த்ததும் அவர்களுக்கிடையே காலையில் இருந்த இறுக்கம் காணாமல் போயிருந்தது. அத்தோடு சாதனாவும் தன் தோழியின் மனதை மாற்ற ஓயாமல் பேசிக் கொண்டு வந்ததும் துணை செய்தது. ஆனாலும் வந்திதா, ஆதிரன் கொடுத்த கேமராவை உபயோகிக்கவில்லை.

'நான் அவ்வளவு சொல்லியும் கேட்கலைன்னா நான் ஒண்ணும் பண்ண முடியாது. யாருக்கு நஷ்டம்? எனக்கு ஒண்ணுமில்லையே' என முணுமுணுத்தவாறே ஆதிரன் புகைப்படங்களை எடுத்துத் தள்ளினான்.

ஆதிரன் சும்மாவும் இருக்காமல் பிரணவிடம் பேசு வதைப் போல 'வாவ்! இந்த ஆங்கிள் நல்லா இருக்கு', 'இங்க லைட்டிங் சூப்பரா இருக்கு', 'இந்த இடம் சூப்பரா இருக்கு' என வந்திதாவின் காதுபடக் கூறி அவளை உசுப்பேற்றியும் விட்டான்.

பல்லைக் கடித்துக் கொண்ட வந்திதா அவனை விட்டுத் தூரமாக விலகி இருந்தாள். ஒருத்தர் நினைத் தால் மட்டும் போதுமா? அவளைச் சீண்டவே ஆதிரன் அவள் போகுமிடத்தில் எல்லாம் காட்சியளித்தான், தன் விலை உயர்ந்த கேமராவுடன்!

'இத்தனை நாளா இவனோட கேமராவை என்ன பண் ணினான்? கண்ணிலேயே காட்டாம இப்போ மட்டும் என்னவோ ராமன் வில்லை எப்போதும் சுமந்து



கொண்டுப் போர்க் களத்திற்குப் போய் எல்லோரையும் போட்டுத் தள்ளினத்தைப் போல இவன் எல்லா இடத் துக்கும் தூக்கிட்டுப் போய் போட்டோ எடுத்துத் தள்ள றான்' என வந்திதாவால் நினைக்காமல் இருக்க முடிய வில்லை.

ஆதிரனிடம் இருந்து மனதைப் பிரித்த வந்திதா, கண் களைச் சுற்றிலும் சுழலவிட்டாள். அங்கிருந்த உயர்ந்து நின்ற மலையில் சிலர் ஏறிக் கொண்டிருந்ததைப் பார்த் தவள், ''எப்படித் தான் பயம் இல்லாம இவ்வளவு உயர மான மலைல ஏறுவாங்களோ. கீழே விழுந்தா என்னா கிறது?'' என்றாள் அப்பட்டமான பீதியுடன்.

அதைக் கேட்டுக் கொண்டிருந்த ஆதிரன், ''எல்லாத்து லேயும் ரிஸ்க் இருந்தாத்தான் வாழ்க்கை த்ரில்லிங்கா இருக்கும். எல்லோரையும் போல வந்தோம் பார்த்தோம்னு சொல்லிக்கிறதுல என்ன இருக்கு? அப்போ தான் இதை எல்லாம் மெமரீஸ்ல ஸ்வீட்டா வச்சுக்க முடியும். பயந்தா அதெல்லாம் நடக்குமா'' என்றான்.

வந்திதாவுக்கு அது உண்மை தான் என்று தோன் றியது. 'தான் இதுவரை அப்படி என்ன செய்திருக்கோம்? ஸ்கூல்ல இல்லை காலேஜ்ல கூட ஒரு நாள் கட் அடிச்சது கிடையாது. கருமமே கண்ணாகப் படிச்சிட்டு வந்தோம். எல்லோரும் படிச்சோம் நானும் படிச்சேன்னு இருந்திருக் கேன்.

என்னோட படிச்சவங்கள்ல சிலர் விளையாட்டுத் தனமா இருந்தாலும் கடைசியில பொறுப்பாப் படிச்சி இப்போ நல்ல நிலையில தானே இருக்காங்க. அவங்க லைஃப்பை என்ஜாய் பண்ண வேண்டிய நேரத்துல என்ஜாய் பண்ணியிருக்காங்க. அவங்க லைஃப் புத்

தகத்தைப் புரட்டிப் பார்த்தா இதெல்லாம் இனிமையா அவங்களுக்குத் திரும்பவும் படிக்கக் கிடைக்கும்.

ஆனா எனக்கு? ஒரு சினிமாவுக்குக் கூடப் போன தில்லை. ஒரு ப்ரபசரைக் கூடக் கிண்டல் அடிச்சதில்லை. எவர் கிரீன் மெமரீஸ்ன்னு யோசிச்சுப் பார்த்தா ஒண்ணுமே இல்லை. ஆதி சொன்னதைப் போல வாழ்க்கையில கொஞ்சம் ரிஸ்க் இருந்தா தான் த்ரில்லிங்கா இருக்குமோ' என யோசித்துக் கொண்டிருந்தவளை சாதனாவின் குரல் யோசனையில் இருந்து மீட்டது.

''உண்மைதான். போன வருஷம் கூட 127 அப்படின்னு ஒரு படம் வந்ததே. நம்ம ஏ.ஆர். ரஹ்மான் கூட மியூசிக் போட்டிருந்தாரே அந்தப் படம் தான். அது உண்மைக் கதையை பேஸ் பண்ணி எடுத்தது.

அந்தப் படத்துல வர்ற மாதிரி பயம் இல்லாம அவர் போனதால தானே தனியா மாட்டிகிட்டாலும் கஷ்டப்படுத்த தப்பிச்சு வந்தார். அதைப் படமாவும் எடுக்க முடிஞ்சது. அவர் வாழ்க்கை முழுவதும் இனி அதைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பார்'' என சாதனா சொல்ல,

''ஆனா சாதனா, அவர் திரும்பி வந்ததுனால ஆச்சு. வரலைன்னா என்ன ஆகியிருக்கும்?'' எனக் கேள்வியுடன் நிறுத்தினாள் வந்திதா.

''எல்லாத்தையும் இப்படி நெகடிவ்வா யோசிச்சிப் பயந்துட்டு இருந்தா அப்புறம் வாழ்க்கையில ஒண்ணுமே பண்ண முடியாது வந்து-தா. இது பண்ணினா இப்படி ஆயிடுமோ... அது பண்ணினா இப்படி ஆயிடுமோன்னு யோசிச்சுட்டே இருந்தா வாழ்க்கையை சுவாரசியமா அனுபவிக்க முடியாது.



ஆனாலும் அந்தப் படத்துல வர மாதிரி யார்கிட்டேயும் ஒண்ணும் சொல்லாமல் கிளம்பக் கூடாது. முடிஞ்சவரைக்கும் முன்னேற்பாடு செஞ்சிட்டுத் தான் கிளம்பணும்'' என்றான் ஆதிரன்.

யோசனையில் மூழ்கியிருந்த வந்திதா அவன் சொன்னதற்கு ஒன்றும் சொல்லாமல் விலகி நடக்க, பிரணவும் சாதனாவும் தான் அவன் சொல்வதை ஒத்துக் கொண்டனர்.

மாலையில் மறுபடியும் அறைக்குத் திரும்ப பேருந்துக்குக் காத்திருந்தபொழுது, சந்திரசேகர் வந்திதாவிடம், ''வந்திதா! மறுபடியும் பாட்டிகிட்டே நேத்து நைட் பேசினோம். நீ சொன்னதை அவர்கிட்டேயும் சொன்னோம். அதனால உனக்கு அங்கேயே ஒரு மாப்பிள்ளையைப் பார்க்கப் போறதா சொன்னார். உனக்குச் சம்மதம் தானே?'' என்றார்.

''அங்கிள்! எனக்கு இப்பவே கல்யாணம் எதுக்குன்னு இருக்கு. ஆனா, பாட்டி ரொம்ப நாளா ஆசையா கேட்டுட்டு இருக்காங்க. யோசிச்சுப் பார்த்தா அவங்க ஆசையைப் பூர்த்தி செய்யலாம்ன்னுதான் தோணுது. நானே அவங்ககிட்டே கூப்பிட்டுச் சொல்லறேன். ரொம்ப சந்தோசப்படுவாங்க'' என ஒரு வழியாகத் தன் சம்மதத்தைத் தெரிவித்தாள்.

''நீ எங்க இருந்தாலும் சந்தோஷமா இருக்கணும்டா. அதுதான் எனக்கும் உன் ஆன்டிக்கும் வேணும்'' என அவள் தலையை ஆதுரமாகத் தடவிக் கொடுத்தார் பெரியவர். அவர் தோளில் சாய்ந்து கொண்ட வந்திதா, அவளருகில் வந்த ஒரு பதினாறு வயதுப் பெண்ணைப் பார்த்தாள்.

எப்போதும் புன்னகையுடனும் ஓயாத பேச்சுடனும் நின்றிருந்த, அல்ல, உட்கார்ந்திருந்த சிறு பெண் வந்திதாவின் கவனத்தை வெகுவாக ஈர்த்தாள். காரணம், அந்தச் சிறுமி வீல் சேரில் இருந்தாள். இருந்தாலும் மலர்ச்சியுடனும், கலகலப்புடனும் காணப்பட்டாள்.

மெதுவாக அவளிடம் பேச்சுக் கொடுத்து அறிந்து கொண்ட விஷயங்கள் வந்திதாவை அதிர்ச்சியுறச் செய்தன. அந்தச் சிறுமிக்கு மலைகளின் மீது ஏறுவதற்கு மிகுந்த ஆர்வமாம்.

அப்படி ஒரு தரம் ஏறும்பொழுது, அப்பெண்ணின் தோழி குடித்துவிட்டு எதிர்பாராதவிதமாக செய்த தவறினால் இவள் கீழே விழ நேர்ந்து இப்படிக் காலையும் முறித்துக் கொள்ள வேண்டியதாயிற்று. இனிமேல் மலைகளின் மீது ஏறும் வாய்ப்பும் அவளுக்குக் கிடையாதாம்.

சரி! இனி அதையே நினைத்துத் தன்னை ஏன் வருத்திக் கொள்ள வேண்டுமென முடிவு செய்து, இது போன்ற இடங்களுக்கு வந்தால் உற்சாகமாக மலை ஏறுபவர்களைப் பார்க்கலாம் எனத் தன் பெற்றோர்களுடன் வந்ததாகக் கூறினாள்.

அவள் தோழியின் மீது அவளுக்குக் கோபம் இல்லையா எனக் கேட்டதற்கு, 'கோபப்பட்டு என் கால் மீண்டும் பழைய நிலைக்குத் திரும்பி விடுமா என்ன?' என்றாள் அப்பெண். அதனால் இருக்கும் வரை மனதை உற்சாகத்துடன் வைத்துக் கொள்ள முனைவதாகக் கூறினாள்.

இந்தச் சிறு வயதில் இந்தப் பெண்ணிற்குத் தான் எத்தனை மனமுதிர்ச்சி என நினைத்து வியந்தாள் வந்திதா. அத்தோடு நில்லாமல், ஒரு கேமரா லென்ஸ் உடைந்ததுக்குத் தான் எத்தனை ஆர்ப்பாட்டம் செய்



தோம் என நினைத்து அவளுக்கு வெட்கமாகக் கூட இருந்தது.

லென்ஸ் தானே? மீண்டும் வாங்கிவிடலாம். ஆனால் கால்கள்? அதைப்பற்றிக் கவலைப்படாமல் அந்தப் பெண் எவ்வளவு மகிழ்ச்சியுடன் இருக்கிறாள்!

அந்தப் பெண்ணிற்குத் தன் வாழ்க்கையே கேள்விக் குறியாகி இருக்கும் இந்த சமயத்திலும், மலை ஏறியதனால் கீழே விழுந்த அவள், அச்செயலை வெறுக்காமல் மற்றவர்களைப் பார்த்து சந்தோஷமடைகிறாளே,

அத்தோடு மனதை மற்ற விசயங்களில் செலுத்தி உற்சாகமாக இருப்பதற்கு அப்பெண் முயல்வதை நினைத்துத் தன்னைப் பற்றிய சுய அலசலில் ஈடுபட்டாள் வந்திதா.

'சிறு வயதில் பெற்றோரை இழந்து தான் ஒரு கூட்டுக்குள் ஒடுங்கிக் கொண்டதும் அதன் பின்னர் பெரியப்பாவின் குடும்பத்தினரின் செய்கையினால் தன் மனதைக் கடினப்படுத்திக் கொண்டதும் இயல்பே. ஆனால் உலகத்தில் இருக்கும் கவலைகள் அனைத்தும் ஒட்டு மொத்தமாக என்னிடம் மட்டுமே வந்து சேர்ந்ததைப் போல சோர்ந்து போய் அல்லவா இருந்திருக்கிறேன்.

அதனால் சக மாணவர்களிடம் கூட சரிவரப் பழகாமல் எத்தனை நாட்களை வீணடித்து விட்டேன்! யாருக்குத் தான் கவலையில்லை இந்த உலகத்தில்? அதையும் மீறி அவர்கள், இந்தப் பெண்ணைப் போல் உற்சாகமாக இருக்க முயல்வது இல்லையா? இனிமேல் நானும் அப்படி இருக்கப் பழகிக் கொள்ள வேண்டும்.

ஒருவேளை நான் வளர்ந்த சூழ்நிலைகூட அதற்குக் காரணமாக இருக்கலாம். இனிமேல் ஆதிரன் மேல்

தொட்டதுக்கெல்லாம் கோபம் கொள்ளக்கூடாது' எனத் தன் அறைக்கு வரும் வரையில் சிந்தித்துக் கொண்டு வந்தாள்.

ஆனால், நினைத்ததைக் கடைப்பிடிக்கத்தான் மிகவும் சிரமமாகப் போய்விட்டது. அதுவும் ஆதிரனைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு!

தன் சிந்தனையிலேயே உழன்று கொண்டிருந்த வந்திதா அறைக்கு வந்த பின்னர், பால்கனிக்குச் செல்லும் கதவைத் திறந்து வெளியேற முயல, கதவுக்குப் பின்னால் இருக்கும் வலையினால் ஆன மறைப்பை (Screen) நீக்காமல் அதில் முட்டி அதைப் பிய்த்தும் விட்டாள்.

அதன் மேலே பலமாக இடித்தப் பின்னர் தான் தன் மடத்தனம் புரிந்தது அவளுக்கு. இப்போ புரிந்து என்ன பயன்? ''ஒஹ் காட்... ஏதோ யோசனையிலே கவனிக்கலை. தெரியாம நடந்துடுச்சு'' என்றாள் மிகுதியான வருத்தத்துடன். அதைப் பிய்த்ததுக்கு அவர்கள் தானே விடுதிக்குத் தண்டம் அழ வேண்டும்.

அனைவரும் அவளைச் சமாதானப்படுத்த, ஆதிரனோ, ''நானும் இப்படித் தானே லென்ஸை தெரியாம உடைச்சேன். நான் சொன்னப்போ வேணும்ன்னே செஞ்ச மாதிரி சண்டை போடறது. எல்லாம் கழுத்து வலியும் திருகு வலியும் அவங்கவங்களுக்கு வந்தாத்தான் தெரியும்'' என்றானே பார்க்கலாம்.

மாலையில் வந்திதா முடிவு செய்தது எல்லாம் காற்றில் பறக்க, ''உங்களை மாதிரி ஒரு ஆளை நான் பார்த்ததே கிடையாது. இனிமேலும் வாழ்க்கையில் பார்க்கவும் கூடாது. எப்பவுமே நீங்க செஞ்சதை நியாயப்படுத்தித்



தான் பேசுவீங்களா? நீங்க உங்க விளையாட்டுத் தனத்துனால லென்ஸை உடைச்சீங்க.... தெரிஞ்சுக்கோங்க.

நான் கூட நீங்க தெரியாம உடைச்ச லென்ஸுக்கு உங்ககிட்டே ஓவரா ரியாக்ட் பண்ணிட்டேன். சாரி கேட்கலாம்னு நினைச்சு வந்தா இப்படித்தான் பேசுவீங்களா? ஐ ஜஸ்ட் கான்ட் பீலீவ் இட். உங்ககிட்டே நான் கோபப்பட்டு நடந்துகிட்டது பத்தாது'' எனப் பொரிந்து தள்ளிவிட்டுக் கோபத்துடன் பால்கனியில் போய் நின்றாள்.

ஏற்கனவே அறையில் உள்ள மறைப்புக் கதவைத் தெரியாமல் பிய்த்துவிட்டுக் குற்றக் குறுகுறுப்பில் இருந்தவளிடம் 'பார்த்து வந்திருக்கக் கூடாதா' எனச் சமாதானப்படுத்தியிருக்கலாம். அல்லது, சும்மாவேனும் வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்திருக்கலாம்.

ஆதிரன் லென்ஸை உடைத்ததைக் கூட மன்னிக்க முடிந்த அவளால் அவனின் மனப்போக்கை ஜீரணிக்க முடியவில்லை.

'கடங்காரன்! உடைச்சதும் இல்லாம பெருசா தத்துவம் பேச வந்துட்டான். இனிமேல் அவனிடம் ஒரு டிஸ்டன்ஸ் மெயின்டெயின் பண்ணனும். அவன் வந்து பேசினாலும் பேசக்கூடாது' என முடிவெடுத்தப் பின் தான் அன்றிரவு அவளால் நிம்மதியாக உறங்க முடிந்தது.

ஆதிரனோ, 'நானும் இப்படித் தானே தெரியாமல் உடைச்சிட்டேன். அவளுக்கு ஒரு நியாயம், எனக்கு ஒரு நியாயமா?' எனச் சிறு பிள்ளையென அதிலேயே நின்றான்.

அவனுக்குப் புரியாதது அந்த லென்ஸை வேறு யார் உடைத்திருந்தாலும், வந்திதாவுக்கு வருத்தம் இருந்திருந்

தாலும் கோபப்பட்டிருக்க மாட்டாள். ஆனால் உடைத்தது ஆதிரன் அல்லவா? சும்மாவே அவளைச் சீண்டிக் கொண்டிருந்தவன் இவ்வாறு செய்தால் வேறு என்ன தான் செய்வாள்? அவர்கள் இப்படியாகத் தங்கள் ஐந்தாவது தினத்தைக் கழித்தனர்.

* * *

மறுநாள்! அதிகாலையில் வந்திதா எழுந்தவுடன் சந்திரசேகர், ''மத்தவங்கெல்லாம் குளிச்சு ரெடியாகட்டும். அதுக்குள்ளே ஒரு குட்டி வாக் போறேன். வர்றியா வந்திதா?'' என அவளை அழைத்தார்.

எப்போதும் அதிகாலையில் நடக்க விரும்பும் அவளுக்கு அந்தப் பூங்காவில் நடப்பதற்குக் கசக்குமா என்ன? அவளும் மிகுந்த உற்சாகத்துடன் கிளம்பினாள்.

'நானும் வருகிறேன் அப்பா' எனச் சொல்ல வாய் திறந்த சாதனாவைக் கண்களாலேயே கட்டளையிட்டு அடக்கிவிட்டு வந்திதாவுடன் சென்றார்.

அவர் ஏதோ வந்திதாவுடன் தனியாகப் பேசச் செல்கிறார். அதனால் தான் வாக்கிங் என்ற தூண்டில் போட்டு அவளை இழுத்துச் செல்கிறார் என்பதை உணர்ந்த சாதனா கட்டளைக்குக் கீழ்ப்படிந்தாள்.

வெளியில் வந்த இருவரும் பொதுவான சில விஷயங்களைப் பேசியவாறே சிறிது தூரம் சென்றனர். பின்னர் சாதனாவின் நிச்சயதார்த்த விழாவைப் பற்றி அலசிவிட்டு, ''வந்திதா! நான் கேட்கிறேன்னு தப்பா நினைச்சுக்காதம்மா. உனக்கு என்னாச்சு? ஏன் இப்போவெல்லாம் அடிக்கடி கோபப்படற?'' எனத் தான் பேச நினைத்ததை ஆரம்பித்தார் சந்திரசேகர்.



''எனக்கேத் தெரியலை அங்கிள். ரொம்பக் கோபப்படறேனோ?'' என அவரிடமே திரும்பக் கேள்வி கேட்டாள் இளையவள். அவள் கேட்டதில் மனம் உருகினாலும் முகத்தில் வரவழைத்துக் கொண்ட கடினத்துடன்,

''உனக்கு என்னாச்சு? இப்படித் தொட்டதுக்கெல்லாம் கோபப்பட்டா நீ வேலை செய்யப்போற இடத்துல நல்லாவா இருக்கும்? அதுவும் உன்னோட ஃபீல்ட்ல நீ நிறையப் பேர் கிட்ட பேச வேண்டி இருக்குமே. நீ இப்படி ஷார்ட் டெம்பர்ட்டா இருக்கலாமா?'' எனக் கேட்டார்.

கண்கள் கலங்கியவாறே, ''தெரியலை அங்கிள். கலிபோர்னியா வந்ததுக்கு அப்புறம் என்ன தான் தனியா இருந்தாலும் அடிக்கடி நம்ம வீட்டுக்கு வந்துடுவேன். நீங்க எனக்காக இருக்கறீங்கன்னு தைரியமா இருந்தேன்.

உங்களோட நிழல்ல இருந்து பழகிட்டேன் போல. உங்களை எல்லாம் விட்டு அவ்வளவு தூரம் தனியாப் போய் வேலை பார்க்கப் பயமா இருக்குதோ என்னவோ. ஐ அம் நெர்வஸ் அங்கிள்!'' என்றாள் அச்சிறு பெண்.

அவளின் கண்ணீரில் இவர் மனம் பாகாக உருகி வழிய, ''நோ நோ வந்திதா! கண்டிப்பா நீ நெர்வஸா இருக்கக்கூடாது. அவ்வளவு சின்ன வயசுலேயே வீராப்பாப் போய் தனியா ஹாஸ்டல்ல படிச்ச பொண்ணா நீ?

உன்னோட தைரியம் எல்லாம் எங்கே போச்சு? நாங்க எல்லாம் எங்கே போயிடப்போறோம். சாதனாவும் இனி கல்யாணம் முடிச்சு சிகாகோ போயிடுவா. நீ ஃப்ளைட் பிடிச்சா இங்கே கலிபோர்னியாக்கோ சிகாகோக்கோ போகப் போற.

இப்பவும் எங்களோட நிழல்லதான் உன்னை இருக்கச் சொல்லறோம். ஆனா உனக்கு அதுல இஷ்டம் இல்லை'' என எதார்த்தத்தைப் புரிய வைக்க முயன்று, இறுதியில் பிரணவை திருமணம் செய்ய சம்மதிக்காததைப் பற்றிய மனக்குறையுடன் முடித்தார்.

''அங்கிள்! சாரி அங்கிள். பிரணவ் உங்ககிட்டே சொல்லி இருப்பான்னு நினைக்கிறேன். உங்களுக்கு என் மேலே கோபம் இல்லையே?''

''கோபம் எல்லாம் இல்லை. சின்ன வருத்தம் தான். ஆனா, எனக்கு சாதனா, பிரணவ் போல நீயும் ரொம்ப முக்கியம்'' என்றார் அன்புடன்.

இந்தக் காலத்தில் சொந்தத் தம்பி மகளைப் பார்த்துக் கொள்ளவே கணக்குப் பார்க்கும் உலகத்தில் இப்படியும் ஒருத்தர் இருப்பாரா? அதுவும் நட்புக்காக! இருக்க முடியும் என நிரூபித்தார் சந்திரசேகர்.

அவரின் பரிவில் நெகிழ்ந்து, ''தேங்க்ஸ் அங்கிள்! உங்களுக்காக நான் கோபப்படாம இருக்க ட்ரை பண்ண றேன்'' என வாக்குறுதி தந்தாள் வந்திதா.

''ஆதி பண்ணறது எல்லாம் சரின்னு சொல்லலை. விளையாட்டுக்குப் பண்ணறானோ இல்லை விபரீதமா பண்ணறானோ. அவன் பண்ணறதுக்கெல்லாம் நீ ஏன் கலங்கணும்?'' என சந்திரசேகர் கேட்டு வைக்க,

''உண்மைதான் அங்கிள்! யாரோ என்னமோ பண் ணறதுக்கு நான் ஏன் கலங்கணும்? இனிமேல் அப்படி இருக்க முயற்சி பண்ணறேன்'' என பதிலும் தந்தாள். அவள் மனத்திற்கும் சொல்லிக் கொண்டாளோ?



பிரணவ் குளிக்கச் செல்ல, ஆதிரன் அறையில் சும்மா இருக்கப் பிடிக்காமல் வெளியில் நடக்கச் சென்றான். அவன் நடந்து புகைப்படங்களை எடுத்துத் தள்ளிக் கொண்டிருந்த சமயத்தில் தான் தூரத்தில் வந்திதாவும் சந்திரசேகரும் அவன் கண்ணில் பட்டனர். அவர்களுடன் தன் நடையைத் தொடரலாம் என அவர்களைப் பின் தொடர்ந்தவனின் காதில் இவர்கள் பேசியது விழுந்தது.

ஏதோ முக்கியமாகப் பேசுகிறார்கள், நாம் ஏன் அவர் களைத் தொந்தரவு செய்ய வேண்டும் என நினைத்துத் திரும்ப எண்ணியவனின் காதில் அவர்கள் தன்னைப் பற்றிப் பேசியது விழுந்தது.

'வாட்! பிரணவோட அப்பா நல்லப்பான்னு பார்த்தா வில்லனப்பாவா இருக்கிறாரே. நம்மைப் பத்தி தாறு மாறா நினைச்சதுமில்லாம, அதை வேண்டாதவங்க காதுலேயும் போட்டுக் கொடுக்கிறாரே. இனிமேல் இவர் முன்னாடி நல்ல பையனா நடந்துக்கணும்' என முடிவு செய்துகொண்டு வந்த வழியே திரும்பினான்.

சந்திரசேகருடன் பேசியது கைக்கொடுக்க, உற்சாக மாக அறைக்குத் திரும்பிய வந்திதாவை, ''ஹாய் வந் திதா! (கவனிக்கவும், வந்து-தா வந்திதாவாகி விட்டாள்) வாக்கிங் எப்படி இருந்தது? இங்க வா. உன்கிட்டே இந்த போட்டோஸ் எல்லாம் காண்பிக்கத் தான் வெயிட் பண் ணிட்டு இருந்தேன்'' எனத் தன் மடி கணினியுடன் வர வேற்றான் ஆதிரன்.

மயக்கம் போடாத குறைதான் வந்திதாவிற்கு. 'நேத்து அவ்வளவுத் திட்டியும் மீண்டும் சிரித்த முகத்துடன் வரவேற்கிறானே! இவனை எதால் செய்திருப்பார்கள்?' என வாய் பிளந்து நின்றாள்.

''வந்திதா சீக்கிரமா வா. லேட் ஆச்சு. நாம கிளம்பணும் இல்ல. நீ பார்த்து உனக்கு வேணுங்கற போட்டோஸை உன்னோட புக்குக்கு யூஸ் பண்ணிக்கோ'' என்று வேறு சொல்லி வைத்தான். புகைப்படங்களைப் பார்க்கவென அவனருகில் சென்ற வந்திதா, விழியகல அவன் எடுத்திருந்த புகைப்படங்களை ஒரு ஏக்கத்துடன் பார்த்தாள்.

ஆதிரனோ அவளைப் பார்க்காமல் சந்திரசேகர் தன்னைக் கவனிக்கிறாரா எனப் பார்த்து, அவர் கவனிக்கிறார் என உறுதி செய்து கொண்ட திருப்தியுடன் மேற்கொண்டு பேச்சைத் தொடர்ந்தான்.

''இது நல்லா இருக்காப் பாரு?'' என அவன் கேட்டுக் கொண்டிருக்க, ''ஆதி! உங்க போட்டோஸ் எல்லாம் ரொம்ப அழகா அருமையா இருக்கு. ஆனா என்னோட புக்குக்கு இதை யூஸ் பண்ண முடியாது'' என்றாள் வந்திதா.

''ஏன் வந்திதா, உன்னோட அளவுக்கு நான் எடுக்கலையா?'' என்றான் முகத்தை சோகமாக வைத்துக் கொண்டு.

'இவன் பேசாமல் கிண்டலடித்து தொலைத்தாலே அதை சகித்துக் கொள்ளலாம் போலிருக்குதே. எதுக்கு இப்படி ஒரு ரியாக்ஷன்?' என மனதுக்குள் நினைத்தாலும் அதை வெளிக் காட்டாமல்,

''ஆதி! இதெல்லாம் உங்க போட்டோஸ். நீங்க எடுத்தது. என்னை விடவே ரொம்ப நல்லா எடுத்திருக்கீங்க. அதை எப்படி நான் யூஸ் பண்ண முடியும்?'' என வினவினாள்.



''நோ! நோ! வந்திதா. என்னால தானே நீ போட்டோ எடுக்க முடியாமப் போச்சு. அதுக்குப் பரிகாரம்ன்னு வச்சுக்கோ'' என்றான் நல்லவனாக.

''ஆதி தான் அவ்வளவு சொல்லறானே. இனி நீ எப்போ இங்க வந்து இதை எல்லாம் எடுக்கறது. அதான் பெரிய மனசு பண்ணி ஆதியே போட்டோஸ் எல்லாம் கொடுக்கிறானே. கேளும்மா'' என சந்திரசேகர் அவர்களின் பேச்சில் தலையிட்டார்.

ஆதிரனுக்கோ சந்தோசம் பிடிபடவில்லை. அவனுக்கு வேண்டியதும் அதுதானே. இறுதியில் தன் சம்மதத்தைத் தெரிவித்தாள் வந்திதா. ஆனால், ஆதிரனின் பெயரையும் புத்தகத்தில் இணைக்கப் போவதாகக் கூறினாள்.

ஆதிரனோ, 'அப்பாடி, ஒரு வழியா அங்கிள்கிட்டே நல்லப் பெயர் வாங்கியாச்சு' என நிம்மதியானான்.

ஆதிரனுக்குப் புரியாத விஷயம் என்னவென்றால், ஆதிரனின் இடத்தில் யார் இருந்தாலும் சந்திரசேகர் காலையில் அப்படித் தான் சொல்லியிருப்பார். வந்திதாவை சமாதானப்படுத்துவதற்காகத் தான் அதையும் சொன்னார்.

மற்றபடி அவனின் இயல்பை எல்லாம் அவர் குறை கூறவில்லை. அவனின் நிலையிலிருந்து பார்த்தால் அவன் செய்தது சரி என்று தான் நினைக்கத் தோன்றும். அவன் வளர்ந்த விதம் அப்படி என எடுத்துக் கொண்டார்.

அது மட்டுமல்லாது அனுபவம் கற்றுக் கொடுக்கும் பாடத்தை விடச் சிறந்ததாக வேறு யாரும் சொல்லாலும்

செயலாலும் மற்றவர்களுக்குக் கற்றுக் கொடுக்க இயலாது எனத் தெரிந்து வைத்திருப்பவர்.

அதனால் அவர் ஆதிரனை இதுவரை ஒன்றும் குறை கூறியதில்லை. அவனே இன்னும் கொஞ்ச காலத்தில் வேறு மாதிரி யோசிக்கப் பழகிக் கொள்வான் என நினைத்திருந்தார்.

அனைவரும் சிரித்த முகத்துடனே கிளம்பி சயான் பூங்காவைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பினர். நடப்பதில் ஆர்வம் கொண்ட வந்திதா சளைக்காமல் நிறைய இடங்களுக்கு நடந்து சென்று இயற்கையை ரசித்தாள்.

தற்சமயம் ஹீரோவாக முயற்சித்துக் கொண்டிருந்த ஆதிரன் தன் கேமராவை மறுபடியும் வந்திதாவிடம் தர முயற்சித்தான்.

சந்திரசேகரின் பேச்சினால் சிறிது சிந்திக்க ஆரம்பித்திருந்த வந்திதா, ''அங்கிள் நீங்களாவது சொல்லுங்க அங்கிள்!'' என ஆதிரன் சந்திரசேகரை துணைக்கு அழைக்கவும், உடனே, ''சரி!'' என்றாள். அப்புறம் காலையில் அவர் அவ்வளவு நேரம் பேசியதற்கு என்ன மதிப்பு?

ஆதிரனோ, சந்திரசேகர் கண்ணில் படும்பொழுதெல்லாம் அன்று முழுவதும் வந்திதாவிடமும் மிகவும் நல்ல விதமாகவே நடந்து கொண்டான். அதுவும் சந்திரசேகர் அருகில் இருந்தால் சொல்லவே வேண்டாம்.

வந்திதா கூட, 'இவன் ஏன் இன்னைக்கு ஓவரா சீன் போடறான்' என நினைத்தாள்.

ஒரு கட்டத்தில் இவன் ஏன் இன்னிக்குன்னு பார்த்து இவ்வளவு நல்லவனா இருக்கிறான்? இப்படிக் கூட அவனால் இருக்க முடியுமா? என சந்திரசேகரே புருவத்தை உயர்த்தும் அளவுக்கு ஆதிரன் நல்லப் பிள்ளையாக நடந்து கொண்டான்.



பாவம் அவனுக்கு லென்ஸை உடைச்சது சங்கடமா இருக்கும் போல என அவனுக்காகப் பரிதாபமும் பட்டுக் கொண்டார் சந்திரசேகர்.

வெயில் அதிகமானவுடன் பெரியவர்கள் களைப்பாக இருக்கிறது என ஒரு இடத்தில் அமர்ந்து விட்டனர். வெயில் பட்டுத் தன் முகப்பொலிவு கெட்டுவிடும் என நிச்சயத்துக்குத் தயாராக இருக்கும் பெண்ணும் அவர்களுடன் தங்கி விட்டாள்.

வந்திதா அவளைக் கிண்டல் செய்தாலும் அவள் சொல்வது உண்மையெனக் கூறி அவளை அங்கேயே அவள் பெற்றோர்களுடன் இருக்கச் சொல்லிவிட்டுச் சென்றாள்.

சந்திரசேகர் இல்லாத தைரியத்தில் ஆதிரனின் வால்தனம் மீண்டும் தலைத்தூக்க, வந்திதா அவனைக் கண்டு கொள்ளாமல் அவன் கொடுத்தக் கேமராவை வைத்து விதவிதமாகப் படங்களை எடுத்துத் தள்ளினாள்.

ஆதிரன் கூட ஒரு கட்டத்தில் சோர்ந்து போனான். புகைப்படங்கள் எடுப்பவளைத் தொல்லை செய்யாமல் அவளைத் தனியே விட்டுவிட்டு பிரணவுடன் பேசிக் கொண்டிருந்தான்.

திடீரென்று தன் ஐபோனில் வந்த செய்தியைப் படித்து விட்டு, ''வெரி ஃபன்னி ஹ ஹ ஹா...'' என்றான். தலையும் இல்லாமல் வாலும் இல்லாமல்.

''எதைச் சொல்லற?'' என பிரணவ் கேட்டபின் விஷயத்தைக் கூறினான்.

''என் லேப்ல பி.ஹச்.டி. பண்ணறா இல்ல... மெலிசா. நீ கூடப் பார்த்திருக்கியே. அவ தான் மெசேஜ் அனுப்பி இருக்கிறா. நான் நியூஜெர்சி போறது அவளுக்கு ரொம்பக் கஷ்டமா இருக்காம். நான் ரொம்ப சார்மிங்காம், ஹான்ட் சம்மாம். அவளுக்கு என்னை ரொம்பப் பிடிச்சுப் போச் சாம். அதனால அவளும் கூடிய சீக்கிரமா அங்க வர ட்ரை பண்ணப் போறாளாம்.''

''அப்போ பிரச்சனை முடிஞ்சது. நீயும் இங்க இருக்கிற ஒரு பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் பண்ணி செட்டில் ஆக நினைச்ச. அது கூடிய சீக்கிரம் நடக்கும் போல. என்ன, மெலிசாவோட ஹைட் தான் கொஞ்சம் இடிக்குது. ஆறு அடி இருப்பாளா? உன்னை விட உயரமா தெரி யறா'' என பிரணவ் சொன்னான்.

''வயத்தெரிச்சலைக் கிளப்பாதே. ஹைட் இடிக்குதா உனக்கு? என் அம்மா - அப்பாக்குத் தெரிஞ்சது என்னை இடிச்சு இடியாப்பமா பிழிஞ்சு எடுத்துடுவாங்க. இங்க வரப்பவே சொல்லித் தான் அனுப்பிச்சாங்க. வெள்ளைக் காரப் பொண்ணுங்களைக் கண்ல கூடப் பார்க்கக் கூடாதுன்னு.

அதெல்லாம் நமக்கு சரிப்பட்டு வராது. சும்மா ஒரு பேச்சுக்கு அப்படிச் சொன்னா இப்படி ஏடாகூடமா பேசுவியா? இது மட்டும் அவங்களுக்குத் தெரிஞ்சது கிளம்பி வந்து அவங்கச் செல்லப் பிள்ளையோட செல்லை (Cell) எல்லாம் எண்ணிடுவாங்க'' என்றான் ஆதிரன்.

அவர்கள் பேசிக் கொண்டதைக் கேட்ட வந்திதா. 'நல்ல காலம் அந்த மெலிசா தப்பித்தாள். ம்ம்ம். யார் மாட்டப் போறாங்களோ இவன்கிட்டே?' என நினைத்துக்



கொண்டே, ''ஆனாலும் ஆதி, நீங்க மாலிக்குலர் பயாலஜி படிச்சிருக்கீங்கன்னு இப்படியா நிரூபிக்கணும்'' என்றாள் ஒரு முறுவலுடன்.

ஓரளவுக்குக் கலகலப்பாகப் பேசியடியே அவர்கள் அந்தப் பூங்காவைச் சுற்றிப் பார்த்துவிட்டு மதியம்போல அங்கிருந்து மனநிறைவுடன் கிளம்பினர்.

---

**இலக்கு: 2680 மைல்கள்...**

**ப்ரைஸ் கேன்யன்! (Bryce Canyon)**

---

இதை கேன்யன் என்பதை விட வெட்டவெளியில் உள்ள இயற்கையாக அமைந்த பெரிய அரங்கம் என்றே கூறலாம். மழை, காற்று, பனி ஆகியவற்றால் நிகழ்ந்த போராட்டத்தின் அறிகுறியாக அங்கிருக்கும் மண்ணை எல்லாம் அரித்துக் கொண்டு உருவான இயற்கையின் மற்றுமொரு அதிசயம்.

இங்கு பாறைகள் சிகப்பு, ஆரஞ்சு மற்றும் வெள்ளை நிறங்களைத் தீட்டி, கைதேர்ந்த ஓவியங்கள் ஏதோ ஓவியப் போட்டிக்குத் தயாராகிக் கொண்டிருப்பதைப் போல பல வண்ணங்களில் காட்சியளித்துக் கொண டிருந்தன.

இயற்கை படைத்த அதிசயங்களை அதிசயமாகப் பார்த்தவர்கள், மாலையில் மிகவுமே களைப்படைந் திருந்தனர். அவர்களின் தங்கும் இடத்திற்குச் செல்லும் முன் ஒரு பெட்ரோல் பங்கில் வண்டியை நிறுத்தியிருந்த போது, வந்திதா அங்கிருந்த கடைக்குள் சென்று அனை வருக்கும் குடிப்பதற்குத் தண்ணீர் வாங்கி வந்தாள்.

அவள் வெளியில் வரும்பொழுது அந்தக் கடைக்கு முன் நின்ற ஒரு பெண் அவளிடம் ஏதோ பேச வந்திதா தன்னிடம் இருந்த பணத்தை எடுத்துக் கொடுத்தாள்.

அதைப் பார்த்துக் கொண்டிருந்த ஆதிரன் அவளிடம், ''வந்து-தா. உனக்குத் தெரியும் அந்தப் பொண்ணு ஊர் போய்ச் சேரக் காசு இல்லைன்னு பொய் சொன்னது. அப்புறமும் ஏன் பணத்தைக் கொடுக்கிற?'' என்றான்.

''பல குற்றவாளிங்க தப்பிக்கலாம். ஆனா ஒரு நிரபராதி தண்டிக்கப்படக் கூடாது இல்லையா? அதே பாலிசி தான் இங்கேயும். எனக்குப் பெருசா ஒண்ணும் நஷ்டம் இல்ல. ஆனா, உண்மையிலேயே அந்தப் பொண்ணு ஊர் போய்ச் சேர உதவுச்சுனா எனக்கு அது போதும்'' என்றாள்.

'இவளைப் புரிஞ்சுக்கவே முடியலையே. சில நேரம் சின்னப் பொண்ணு மாதிரி தொட்டதுக்கெல்லாம் சிணுங்கறா. சில நேரம் தத்துவஞானி மாதிரி பேசறா' என பெருமூச்சு விட்டான் ஆதிரன். அவனுக்குப் புரியாதது, வந்திதா தொட்டதுக்கு எல்லாம் சிணுங்குவது அவன் செய்கையால் தான் என்று.

அன்றைக்கு முழுவதும் ஆதிரன் சந்திரசேகரின் முன்னால் நல்லப் பிள்ளையாக இருக்க முயன்றதால் வந்திதாவிடம் ஏதும் வம்பு வளர்க்கவில்லை. அதனால் எப்போதையும் விட அனைவருமே மிகுந்த உற்சாகத்துடன் காணப்பட்டார்கள். இப்படித் தான் பயணத்தின் ஆறாவது நாளைக் கழித்தனர்!



## இலக்கு: 2394 மைல்கள்...
## ஆர்சஸ் தேசியப் பூங்கா! (Arches National Park)

மறுநாள்! இயற்கையிலே வளைவுகள் கொண்ட பாறைகள் நிரம்பிய ஆர்சஸ் தேசியப் பூங்காவிற்குச் சென்றடைந்தனர். இங்கே கண்ணையும் கருத்தையும் கவரும் வகையில் இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட பாறைகள் வளைந்து நெளிந்து அலங்கரித்துக் கொண்டிருந்தன.

இயற்கை கூட ஒருவித ஓவியன் தான் என அதைக் கண்டு அதிசயித்தவர்கள், இன்னும் எத்தனை ஆண்டுகள் இவை எல்லாம் இயற்கையின் சீற்றமான மழை மற்றும் காற்றுக்குத் தாக்குப் பிடிக்கும் எனத் தங்களின் கருத்துக்களையும் பகிர்ந்து கொண்டனர்.

அங்கிருந்த சில உயரமானப் பாறைகளில் பலர் ஏறிக் கொண்டிருந்தனர். அதைப் பார்த்த பிரணவும் ஆதிரனும் தாங்களும் அதன் மேலே ஏறப் போவதாகக் கூறி வந்திதாவையும் சாதனாவையும் அழைத்தனர்.

சாதனா காலை நேரமானதால் அவர்களுடன் உற்சாகமாகக் கிளம்பினாள். வந்திதா தான் அவ்வளவு உயரத்தில் ஏறுவதா எனத் தயங்கிக் கொண்டிருந்தாள்.

மனதில் ஆசை பெருக்கெடுத்தாலும் உயரத்தைக் கண்டு பயந்து தயங்கியவளை, ''இது ஒண்ணும் மலை இல்லை. சும்மா ஒரு பாறை. அதுக்குப் போய் யாராவது பயப்படுவாங்களா? உன்னைவிடச் சின்னப் பொண்ணுங்க எல்லாம் எப்படி ஏறராங்க பாரு'' என சாதனா சீண்ட,

''நாங்கெல்லாம் இருக்கோம். தைரியமா வா'' என பிரணவ் தைரியப்படுத்த,

''நீ கீழே விழும்போது என்னோட கையையும் சேர்த்து இழுத்துட்டுப் போயிடாதே. அப்புறம் எனக்கு பாலன்ஸ் கிடைக்காது'' என ஆதிரன் உசுப்பிவிட, வந்திதா மேலே ஏறச் சம்மதித்தாள்.

மேலே ஏறியதும் அங்கிருந்த அழகை விழி விரித்துப் பார்த்தவள் வாய் திறந்தும் பாராட்டினாள். ''வாவ்! எவ்வளவு அழகா இருக்கு. நான் பயந்துட்டேட. அங்கே கீழே இருந்திருந்தா இந்த அழகை எல்லாம் மிஸ் பண்ணியிருப்பேன். உங்களுக்குத் தான் தேங்க்ஸ் சொல்லணும்'' என மூவரிடமும் தனித் தனியாக நன்றி தெரிவித்தாள்.

''வந்து-தா, நீ நன்றி நவிலல் எல்லாம் கீழே இறங்கினதுக்கு அப்புறம் மேடை போட்டு வச்சுக்கலாம். இப்போதைக்கு போட்டோவை எடுக்கப் பாரு. நல்ல லைட்டிங் போயிடும்'' என வந்திதாவை முடுக்கிய ஆதிரன் தன் கேமராவை வந்திதாவிடம் தந்தான்.

லென்ஸை உடைத்ததற்குப் பரிகாரம் செய்கிறானாம்! சந்திரசேகர் அருகே இல்லாததால் ஆதிரன் எப்போதும் போல இயல்பாக இருந்தான்.

ஆதிரனிடம் இருந்து பெற்றுக் கொண்ட கேமராவை நன்றாக உபயோகப்படுத்திக் கொண்டாள் வந்திதா. சில சமயங்களில் அவள் ஆதிரனிடம் கூட கருத்தைக் கேட்டுக் கொண்டாள். ஆதிரன் நல்லவனாக இருக்க முயல, அவனையும் அறியாமல் அவனின் நல்ல குணங்களும் வெளிவரத் தொடங்கின.





''வந்து-தா, கேட்கிறேன்னு தப்பா நினைக்காதே. நீ எதுக்கு எதைப் பார்த்தாலும் பயப்படற? காரை ஸ்பீடா ஓட்டினா போலீஸ் பிடிச்சுக்குவாங்கன்னு பயப்படற. இல்லை எங்காவது போய் இடிச்சிடுவாங்களோன்னு பயப்படற. ஃபிளைட்ல போனா ஏதாவது ஆயிடுமோன்னு பயப்படற. கேம்பில் (சூதாடுவது) பண்ணா தோத்துடுவோம்னு பயப்படற.

இப்படித் தொட்டதுக்கெல்லாம் பயந்தா வாழ்க்கையிலே எதையுமே ரசிக்க முடியாது. உனக்கு எங்கே வாழ்க்கையில தோத்துடுவோமோங்கிற பயம் நிறைய இருக்குன்னு நினைக்கிறேன். சின்ன வயசுல ஏற்பட்ட இழப்புகள்னால தான் நீ இப்படி இருக்கிற. ஆனா, இது உன்னோட முன்னேற்றத்தை ரொம்பவுமே தடை செய்யும்.

எல்லாத்துலேயும் எல்லோரும் ஜெயிக்க முடியாது. சிலதுல வெற்றி கிடைக்கும்; சிலதுல தோல்வி ஏற்படும். எதுவுமே நிலையானது இல்லை. அது தான் வாழ்க்கை. அதை நீ புரிஞ்சுக்கணும். அதுவும் இப்போ புதுசா வேலைக்குப் போகப் போற. பார்த்து நடந்துக்கோ'' என்றான் ஆதிரன்.

அவன் சொல்வதை மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்த வந்திதா, 'ஆதி சொல்வது உண்மை தானே. எதிலேயாவது தோத்துடுவோமேன்னு பயந்து பயந்தே எதையும் சந்தோசமா செய்யறது இல்லை. இனிமேல் சந்தோஷமா இருக்க முயற்சி செய்யலாம்' எனத் தன்னைப் பற்றி நினைத்துக் கொண்டாள்.

சயான் பூங்காவில் பார்த்த, கால்கள் வலுவிழந்த சின்னப் பெண் வந்திதாவின் மனதில் வாழ்க்கையைப்

பற்றி ஒரு பொறி கிளப்பிவிட்டாள் என்றால் சந்திரசேகர் அதைக் கிளறி விட்டிருந்தார்.

அதனால் தான் ஆதிரன் அவளைப் பற்றின உண்மையைச் சொன்னதும் அவள் வாழ்க்கையை முற்றிலும் வேறு கோணத்தில் வைத்து யோசிக்க ஆரம்பித்தாள்.

தன் சிந்தனையிலே உழன்று கொண்டிருந்தவளைப் பார்த்த ஆதிரன், ''இங்க ஒருத்தன் தொண்டைத் தண்ணி வத்தக் கத்திட்டு இருக்கான். அங்கே ஒருத்தங்க தண்ணி கொடுக்கலைன்னாலும் பரவாயில்லை. தொண்டையில இருக்கிற வார்த்தையையாவது வெளியில கொட்டலாம் இல்ல'' என்றான்.

அவன் சொன்னதைக் கேட்டு புன்னகைத்த வந்திதா, ''நீங்க தானே நன்றி நவிலல் விழாவைக் கீழே போய் வச்சுக்கலாம் எனச் சொன்னீங்க. அதுக்காகத் தான் வெயிட்டிங்'' என்றாள் சிரிப்புடன். அவள் புன்னகையில் அவனும் சேர்ந்து கொண்டான். எல்லாம் நன்றாகத் தான் போய்க் கொண்டிருந்தது!

என்னதான் ஆதிரன் சொற்பொழிவு நடத்தினாலும் வந்திதாவுக்கு அது உண்மை என்று புலப்பட்டாலும் உடனே அவள் குணங்களை அழித்துவிட்டு மாறிவிடுவதற்கு அவள் என்ன கம்ப்யூட்டர் ப்ரோக்ராமா?

வந்திதாவுக்கு உயரத்தில் நிற்பதற்குப் பயம் என்பதால் முடிந்த வரை யாராவது தன் அருகில் இருப்பதைப் போல பார்த்துக் கொண்டாள்.

இயற்கையைக் கண்டு களித்தவர்கள் கீழே இறங்குவதற்கு ஆயத்தமாக, ஆதிரன் வந்திதாவிடம், ''நீ இந்த ஆங்கிள்ல இருந்து போட்டோ எடுத்தியான்னு



தெரியலை. இங்க வா'' என்று அவளைப் பாறையின் விளிம்பிற்கு அழைத்துச் சென்றான்.

பயத்துடனே அங்கே சென்றவள், அதன் அழகைப் பார்த்து பிரமித்து விட்டாள். அவள் பலவிதமான புகைப்படங்களை எடுத்து முடிக்கும் வரை அமைதியாக இருந்த ஆதிரன், தன் கைவரிசையைக் காட்டினான்.

''வந்து-தா. அப்படியே கீழே குனிஞ்சுப் பாரு'' என ஆதிரன் சொல்ல, இப்பொழுதெல்லாம் ஆதிரன் வந்திதாவின் கண்களுக்கு வில்லனாக இல்லாமல் இருப்பதால் அவன் அவ்வாறு கூறியதும் சட்டென்று கீழே பார்த்தாள்.

பார்த்தவளுக்கு தலை சுழல ஆரம்பித்தது. அவர்கள் நின்றிருந்த பாறை முன்னிருந்து பார்க்கச் சின்னதாக இருந்தாலும் பின்னால் ஒரு மலையளவு உயர்ந்து நின்று கொண்டிருந்தது. முன்னமே தெரிந்திருந்தால் அதை எட்டிப் பார்க்க வந்திதாவிற்கு என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது?

வந்திதாவின் பெருங்குரலைக் கேட்டதும், சாதனா அவளை மீட்க வர, ஆதிரன் வந்திதாவைப் பார்த்து, ''ஹ ஹ ஹா.. வெரி ஃபன்னி'' என்றான் குதூகலமாக.

ஆதிரனை ஒரு வெறுப்புப் பார்வை பார்த்த வந்திதா, ''போடா... வியானோ...'' எனச் சொல்லிவிட்டு அங்கிருந்து சாதனாவின் உதவியுடன் கீழே இறங்கினாள்.

அவள் போடா என்று சொன்னதுகூட ஆதிரனுக்குப் பெரிதாகத் தெரியவில்லை. ஆனால், அதற்குப் பின் சொன்ன வார்த்தையின் அர்த்தம் புரியாமல் நெற்றியைச் சுருக்கினான்.

பிரணவிடம் அது என்ன என்று கேட்க அவனுக்கும் விடை தெரியவில்லை. தன் கைப்பேசியைக் குடைந்து கண்டுபிடிக்க முயன்றும் சரியான சிக்கல் இல்லாததால் அவனால் கண்டுபிடிக்க இயலவில்லை.

தங்கள் கார் நிறுத்தியிருந்த இடத்துக்குச் சென்றவன் முதல் வேலையாக சாதனாவிடம் கேட்க, ''அது ஸ்பானிஷ் வார்த்தை. அப்படின்னா வில்லன் என்று அர்த்தம்'' என்றாள் விஷயம் அறியாமல்.

''அடிப்பாவி! அப்போ நான் அங்கிள் முன்னாடி நல்லவனா நடிக்க முயற்சி செஞ்சது எல்லாம் வேஸ்ட்டா'' என உண்மையை உளறினான் ஆதிரன்.

''அடப்பாவி! அப்போ ரெண்டு நாளா நல்லவன் மாதிரி நடிச்சீங்களா? ஆனா, அங்கிள்கிட்டே ஏன் நல்லவன் மாதிரி நடிக்கணும்?'' எனக் கேள்வி கேட்ட வந்தனா, ஏதோ உறுத்த, ''நானும் அங்கிளும் பேசினதை ஒட்டுக் கேட்டீங்களா?'' என்றாள் உக்கிரமாக.

அவன் பதில் சொல்லத் தடுமாற, ''ச்சே! நீங்க இப்படிப் பண்ணுவீங்கன்னு நான் நினைக்கலை ஆதி'' என்றாள் வந்திதா.

தான் விளக்கம் தரும் நிலையில் இருப்பதை உணர்ந்த ஆதிரன், ''இல்ல.. ஒட்டுக் கேட்கலை. வாக்கிங் வந்தப்போ என் காதுல விழுந்தது'' என உண்மையைக் கூற முனைந்தான். அவன் சொல்வதைக் காதில் போட்டுக் கொள்ள வந்திதா அங்கே இருந்தால் தானே?

'ச்சே! சொந்த வாயாலேயே சுடச் சுட சூன்யம் வெச்சுக்கிட்டேனா?' என முணுமுணுத்துக் கொண்டே அவனும் காரினுள் சென்று அமர்ந்தான்.



---

**கொலராடோ...**

**இலக்கு: 2271 மைல்கள்...**

**கிராண்ட் ஜங்ஷன்! (Grand Junction)**

---

இரவு உணவிற்காக அனைவரும் செல்ல, வந்திதா தன் கைப்பேசியை வைத்துவிட்டு வந்ததாகக் கூறி மீண்டும் அறைக்குச் சென்றாள்.

சற்று நேரம் கழித்து உணவகத்திற்குச் சென்றவள் சாப்பிட அவளுக்குப் பிடித்தமான சூப் ஆர்டர் செய்ய, அது அப்பொழுது தான் தீர்ந்தது என்றனர்.

வந்திதா வேறு ஒன்றைக் கொண்டு வருமாறு சொல்லி விட்டுப் பேசிக் கொண்டிருந்த பொழுது, தான் தாமதமாக வந்ததற்கான காரணத்தைச் சொன்னாள்.

ஒரு வயதான தம்பதியர் தங்கள் உடைமைகளைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு விடுதியின் உள்ளே சென்று கொண்டிருந்தனர். அதனால் அவர்களுக்கு அந்த உடைமைகளை வரவேற்பறை வரைக்கும் சென்று கொடுத்துவிட்டு வந்ததாகக் கூறினாள்.

''உனக்கு என்ன வந்தது வந்திதா. பேசாம நேரா வந்திருந்தா உனக்கு நீ கேட்ட சூப் கிடைச்சிருக்கும் இல்ல. தேவையில்லாம உதவி பண்ணப் போய் உனக்குத் தான் நஷ்டம். இந்தக் காலத்துல யாரும் யாருக்கும் உதவி பண்ண மாட்டாங்க'' என்றான் ஆதிரன். அவளிடம் இயல்பாகப் பேச முயல்கிறானாம்.

மதியம் நடந்ததை மறந்துவிட்டாளா அல்லது அதன் தாக்கத்தில் இருந்து விடுபட்டு விட்டாளா என்பது

அவளுக்கே வெளிச்சம். இதுதான் வந்திதா. சண்டைப் போட்டாலும் கோபப்பட்டாலும் அதைச் சற்று நேரம் மௌனமாகக் கொண்டாடிவிட்டு மீண்டும் இயல்பாகப் பேச ஆரம்பித்து விடுவாள். ஆதிரன் அவ்வாறு சொல்ல, வந்திதா வாயைத் திறந்தாள்.

''ஏன் அப்படிச் சொல்லறீங்க ஆதி? இன்னைக்கு நீங்க எனக்கு உதவி பண்ணலையா? பயந்தாங்கொள்ளியான நான் உங்களோட உதவியாலதானே அந்தப் பாறை மேலே ஏறினேன். எனக்கென்னன்னு நீங்க நினைச்சிருந்தா இன்னைக்கு நான் அதை ரசிச்சி சந்தோஷப்பட்டிருப் பேனா இல்ல திருப்தியா போட்டோ தான் எடுத்திருப் பேனா?'' என்றாள்.

'என்னப் பொண்ணு இவ? இப்படியெல்லாம் யோசிக் கறா. அதுவும் நான் அவகிட்டேயே நல்லவனா நடிச் சேன்னு சொன்னதுக்கப்புறமும்' என யோசித்துக் கொண் டிருந்தான் ஆதிரன்.

''என்ன ஆதி, பதிலைக் காணோம். நீங்க நிஜமா ஹெல்ப் பண்ண நினைச்சீங்களா என எனக்குத் தெரியாது'' என மறைமுகமாக ஒரு குட்டை அவன் தலை யில் நங் என்று வைத்துவிட்டு, ''ஆனா, நான் அதனால் பயன் அடைஞ்சேன் என்கிறது உண்மைதானே?

நீங்க ஒரு அட்வர்ட்டைஸ்மென்ட் பார்த்திருப்பீங் களே. 'எ ஹெல்பிங் ஹேன்ட் இஸ் கன்டேஜியஸ் - லிபர்ட்டி முசுவல்'லோடது. ஒருத்தருக்கு உதவி செஞ்சா அந்த உதவியைப் பெற்றவங்க வேற யாருக்காவது உதவுவாங்க. உதவி செய்வது எவ்வளவு உன்னதமானது! அது ஒரு தொத்து நோய்ங்கிறது உண்மைதானே!



நீங்க எனக்கு செஞ்சீங்க. நானும் அந்த தாத்தா - பாட்டிக்கு என்னால முடிஞ்சதைச் செஞ்சேன். அவங் களும் அவங்களால முடிஞ்சதைச் செய்வாங்க. அது தானே மனித இயல்பு?'' எனக் கூறிப் புன்னகைத்தாள் வந்திதா.

அவள் சொல்வதை அனைவரும் வியந்து கேட்டுக் கொண்டிருக்க, ஆதிரனும் இசைவாகத் தலையசைத் தான்.

அவனும் அந்த விளம்பரத்தைப் பல தடவை பார்த் திருக்கிறான். எந்த மனநிலையில் இருந்தாலும் அந்த விளம்பரத்தைப் பார்க்கும் பொழுது மனதில் இனம் புரியா சந்தோசம் குடி கொள்ளும். ஆனால் அதை அப்பொழுதே அவன் மறந்தும் விடுவான்.

இவளானால் அதை மறைக்காமல் தன்னால் முடிந்த மட்டும் கடைப்பிடிக்கிறாளே என நினைத்து வியந் தவன், 'இவளை எந்த லிஸ்ட்ல சேக்கறது' எனத் தன் னிடம் உள்ள பட்டியல்களை மிகவும் தீவிரமாக ஆராய்ந்து கொண்டிருந்தான்.

அவர்களுக்கு அருகில் சில கல்லூரி மாணவர்கள் அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டு அவர்களுக்குள் கலாட்டா செய்து கொண்டிருந்தார்கள். அவர்களின் உற்சாகம் இவர்களையும் தொற்றிக் கொண்டது. பேச்சும் வேறு திசை நோக்கிப் பயணித்தது.

''என்னதான் சொல்லு, காலேஜ் டேஸ் காலேஜ் டேஸ் தான். சுதந்திரப் பறவைகளா பறந்து திரிஞ்சிட்டு இருந் தோம் இல்ல'' என ஆதிரன் கூறினான்.

''அப்புறம் என்ன பிடிச்சுக் கூண்டுல அடைச்சுட்டாங் களா?'' என்றாள் சாதனா சிரிப்புடன்.

''உண்மை தானே. அதுக்கப்புறம் மேலே படிக்கணும், அப்புறம் வேலைக்குப் போகணும், கல்யாணம் பண்ண னும், அப்புறம் கிட்ஸ்... இப்படியே போயிடும் லைப்'' என பிரணவ் சொல்ல,

'ம்ம்ம்க்கும், ஆதியைப் பார்த்தா நாம தான் கூண்டுல போய் அடைஞ்சுக்கணும்' என மனதுக்குள் நினைத்தாள் வந்திதா.

''ஆனா, நம்ம ஆதியைப் பார்த்தா யாரும் அப்படிச் சொல்ல மாட்டாங்க'' என பிரணவ் முடித்தான்.

அதைக் கேட்ட வந்திதாவுக்குச் சிரிப்பு வந்து விட்டது. அவர்களின் கேலிச் சிரிப்பை ஒதுக்கிவிட்டுக் 'கடமை கண்ணாயிரமாக' சாப்பிட்டுக் கொண்டிருந்தான் ஆதிரன்.

பேசிக் கொண்டே சாப்பிட்டவர்களின் உரையாடல் பிரணவும் ஆதிரனும் படிக்கும் பொழுது டீச்சிங் அசிஸ் டென்ட்டாகப் பணிபுரிந்ததன் பக்கம் சென்றது. மாண வர்கள் எங்கிருந்தாலும் ஒரே மாதிரி தான் இருக்கிறார்கள் எனச் சொல்லிக் கொண்டிருந்தான் ஆதிரன்.

''கரெக்ட்டா எக்ஸாமுக்கு முன்னாடி நாள் தான் படிக்கறது. அப்புறம் மார்க் கம்மியாயிடுச்சு, ஃபைனல்ல எப்படியாவது பாஸ் பண்ண வழி சொல்லுங்கன்னு வந்து அழுகறது'' என்றான்.

பிரணவ், ''அதைவிடக் கொடுமை, என்ன எக்ஸாம் எழுதறோம் எனத் தெரியாமப் போய் எழுதறது தான். என் கிளாஸ்ல ரெண்டு ஸ்டுடண்ட்ஸ், எக்ஸாம் ஆரம் பிச்சு ஒரு மணி நேரம் கழிச்சுத் தான் வந்தாங்க. சரி எப்படியோ லேட் ஆயிடுச்சுன்னு விட்டுட்டேன்.



அப்புறம் தான் தெரிஞ்சது அவங்க ரெண்டு பேரும் அதுவரைக்கும் வேறு ஒரு எக்ஸாம் ஹால்ல உட்கார்ந்து வேற ஒரு எக்ஸாமை ஒரு மணி நேரமா எழுதிட்டு இருந்திருக்காங்கன்னு. ஒரு மணி நேரம் ஆயிருக்கு. இது அவங்க கிளாஸ் இல்லைன்னு புரிய. என்னோட பிரெண்ட் வந்து சொன்னான்'' எனச் சொல்லிச் சிரித் தான்.

இவர்கள் பேசிக் கொண்டிருக்க, வந்திதா மீண்டும் சுய அலசலில் இறங்கினாள். தான் இது போல டீச்சிங் அசிஸ்டென்ட்டாக இருந்த பொழுது எதையுமே சுவாரசிய மாகச் செய்யவில்லையே. ஏதோ படித்தோம் அதைப் போய் நடத்தினோம் என இருந்தேன்.

ஆதி சொல்வதைப் போல எல்லாத்துக்குமே பயந்துப் பயந்து வாழ்க்கையோட சுவாரசியங்களை மிஸ் பண் ணிட்டேனோ என யோசித்துக் கொண்டிருந்தாள்.

''அதுவும் இவங்க எக்ஸாம்ல எழுதற ஆன்ஸர்ஸ் இருக்கே, அதுக்கே ஒரு புக் போடலாம். 'ஹார்ட் வாட்டர்'னா (வன்னீர்) என்ன? எக்ஸ்ப்ளைன் பண்ணச் சொன்னா ஒரு ஸ்டுடண்ட் ஐஸ்ன்னு எழுதி இருந்தான்'' என ஆதிரன் சொல்ல மற்றவர்கள் அனைவரும் நகைத் தனர்.

''ஸ்டுடண்ட்ஸ், எந்த ஊருல இருந்தாலும் படிக்கற துல மட்டும் ஒரே மாதிரி தான் யோசிக்கறாங்க.'' எனச் சந்திரசேகர் சொல்லிச் சிரித்தார்.

''ஆமாம் அங்கிள்! ஒருதரம், சோடியம் குளோரைடு மூலக்கூறில், சோடியத்திற்கும் குளோரினுக்கும் இடை யிலே உள்ள பாண்டு (Bond) என்னன்னு கேட்டா,

ஜேம்ஸ் பாண்ட்ன்னு எழுதி வைக்கிறாங்க'' என்றான் ஆதிரன்.

ஆதிரனும் பிரணவும் தங்கள் அனுபவங்களைப் பகிர்ந்து கொள்ள, அன்றிரவு உணவு வேளை மிகவும் ரம்மியமானதாக இருந்தது அனைவருக்கும். இப்படித் தான் தங்கள் பயணத்தின் ஏழாவது நாளைக் கழித்தனர்!

* * *

மறுநாள்! பெரியவர்கள் இருவரும் அன்று விடுதியிலேயே தங்கி ஓய்வு எடுத்துக் கொள்ளப் போவதாகச் சொல்ல, இளையவர்கள் நால்வரும் பக்கத்தில் எங்காவது செல்லலாம் என நினைத்து ஒரு சிறிய காரை வாடகைக்கு எடுத்துக் கொண்டு கிளம்பினர்.

முதலில் அருகில் உள்ள ஒரு காபி கடையினுள் சென்று அனைவரும் காபி வாங்கிக் கொண்டு வெளியில் வர, வந்திதா வைத்திருந்த காபி கப்பின் மூடி சரியாக மூடப்படாததால் கை நழுவி அவன் மேலே சரிந்தது.

அதைப் பார்த்த ஆதிரன் ''ஹா ஹா ஹா வெரி ஃபன்னி'' எனச் சிரித்துத் தொலைத்தான்.

ஏற்கனவே சூடான பானத்தைக் கவிழ்த்ததில் சினமுற்றிருந்தவளுக்கு இப்பொழுது அவமானமாகவும் இருந்தது. அவள் உடை எங்கும் காபி அழகாக வரைந்த நவீன ஓவியத்தால்! அதுவும் ஆதிரனின் முன்னால்!

சும்மாவே அவனுக்குக் கிண்டல் பண்ணச் சொல்லித் தர வேண்டாம்... இதில் இதுவும் சேர்ந்து கொண்டால் சொல்லவா வேண்டும்?



அவள் மனதில் இப்படி எண்ணங்கள் வலம் வந்து கொண்டிருந்த அதே சமயத்தில் ஆதிரனும் வேறு சிரித்து வைக்க, அவள் உடல் மேல் பரவிய எரிச்சலை விட மனதில் தான் எரிச்சல் அதிகமாகப் பரவி மண்டியது.

வந்திதாவின் நிலையைப் பார்த்த பிரணவ், ஆதிரனை அங்கிருந்து இழுத்துக் கொண்டு காபிக் கடையினுள் மீண்டும் சென்றான்.

வந்திதாவுக்கு வேறு காபி சொல்லிவிட்டு, ''ஏன்டா ஆதி! உனக்குக் கொஞ்சம் கூட அறிவே இல்லடா. அவ கஷ்டப்படறதைப் பார்த்து இப்படியா சிரிப்ப?'' எனக் கடிந்து கொண்டான்.

''என்னடா இது வம்பாப் போச்சு? யார் மேலே கொட்டியிருந்தாலும் நான் இப்படித்தான் இருந்திருப்பேன். இவ்வளவு ஏன் என் மேலேயே கொட்டியிருந்தாலும் என்னோட ரியாக்சன் இதுவாத்தான் இருந்திருக்கும்.

ஆனா எனக்கு ஒண்ணும் புரியலை. நீ தான் வந்திதா மேலே யார் பரிதாபப்பட்டாலும் அவளுக்குப் பிடிக்காதுன்னு சொன்னியே. அவளுக்குப் பிடிக்காததை நான் பண்ணலையே. ஆனா, நீ சொல்லறதைப் பார்த்தா பரிதாபப்பட்டிருக்கணும் போல'' என்றான் ஆதிரன்.

எதையும் எதையும் முடிச்சுப் போடுகிறான். இதற்கு பிரணவும் தான் என்ன பதில் சொல்லுவான்?

பிரணவ் மௌனமாக முறைக்க, ஆதிரனே, ''என்னடா பதிலைக் காணோம்? நான் எப்பவும் ஒரே மாதிரி தான் இருக்கேன். நீ தான் மாத்தி மாத்திப் பேசி என்னை ரொம்ப கன்ஃபூஸ் பண்ணற. யூ ஆர் ஃபன்னி'' எனச்

சொல்லிச் சிரித்து, பிரணவை இயல்பு நிலைக்குக் கொண்டு வந்தான்.

இருவரும் கடைக்கு வெளியில் வர, அங்கு சாதனா வந்திதா மேலிருந்த ஓவியத்தைத் துடைக்க உதவிக் கொண்டிருந்தாள். அவர்களிடம் சென்ற பிரணவ், ''வந்திதா! ரூமுக்குப் போய் டிரஸ் மாத்திட்டுப் போகலாமா?'' என்றான் அக்கறையுடன்.

''அதெல்லாம் வேண்டாம் பிரணவ். கொஞ்ச நேரத்துல காஞ்சிடும். ரூமுக்குப் போயிட்டுப் போனா ரொம்ப லேட் ஆயிடும். அப்புறம் ஈவினிங் திரும்ப இருட்டிடும்'' என அழகாக மறுத்துவிட்டு, பிரணவிடமிருந்து ஜாக்கிரதையாகக் காபியை வாங்கிக் கொண்டு காரினுள் சென்றமர்ந்தாள்.

ஆதிரன் காரினுள் அமர்ந்தபடியே, ''அதுவும் சரிதான். இப்போ காபி ப்ளேவர்ட் ஜீன்ஸ் தான் பேஷனுன்னு சொல்லிடலாம். காபி லவ்வர்ஸ்க்கு ரொம்பப் பிடிக்கும்'' எனத் தன் மூளையைக் கசக்கிப் பிழிந்து வந்திதாவை சிரிக்க வைக்க முயன்றான் ஆதிரன்.

அவனின் அறிவுத்திறனுக்கு வந்திதாவிடமிருந்து ஒரு முறைப்பைப் பரிசாகப் பெற்றுக் கொண்டவன், 'வாயை மூடிட்டு இரேன்டா ஆதி' எனத் தனக்குத் தானே சொல்லிக் கொண்டான்.

காலையிலேயே அவர்கள் பேசி வைத்ததைப் போல கிராண்ட் ஜங்ஷனில் இருந்து 550 நெடுஞ்சாலையில், கொலராடோவில் உள்ள சில்வர்டன் என்னும் ஊருக்குக் கிளம்பினர். சற்று தூரம் செல்லும் வரை மக்களின் பரபரப்பும் கார்களின் சலசலப்பும் அடங்கவில்லை.



மில்லியன் டாலர் ஹைவே என்று குறிப்பிடப்படும் 550 நெடுஞ்சாலை, மலைகளின் நடுவே செல்ல ஆரம்பித்ததும், பரபரப்புப் போக்குவரத்தும் குறைய ஆரம்பித்தது. வழியெங்கும் கண்ட இயற்கை ததும்பும் காட்சிகள் அவர்கள் கண்களுக்குத் தெவிட்டவில்லை என்பது விழிகளின் விளிம்பில் பொங்கிய பரவசம் பறைசாற்றியது.

தூரத்தில் வெள்ளைப் பனி படர்ந்து மூடிய மலைகளின் அரசாங்கம், அவற்றிற்குப் பாதுகாவலனாக ஊசி இலைக் காடுகளின் ராஜாங்கம், மலை அடிவாரத்தில் புல்வெளியின் பிரசங்கம் எனக் காணக் கிடைக்காத பேரழகாய் இயற்கை அழகு திரண்டு, ததும்பி வழிந்து கொண்டிருந்தது.

இயற்கை எழிலில் மயங்கிய அனைவரும் ஏகாந்த மனநிலையில் பயணித்துக் கொண்டிருந்தனர். ஆங்காங்கே நிறுத்தி மனதுக்குப் பிடித்த காட்சிகளைப் புகைப்படங்களாகவும் சேமித்துக் கொண்டிருந்தனர்.

சில்வர்டன் போய் சேர்வதற்கு முன்னால், ஔரே (Ouray) என்ற ஊரைக் கடந்துச் செல்ல வேண்டும். அந்த ஊர், ஆரம்பத்தில் சுரங்கத் தொழிலாளர்களால் நிறுவப்பட்டதாகும். ஆயிரம் பேர் மட்டுமே கொண்ட இந்த ஊரை அமெரிக்காவின் சுவிட்சர்லாந்து என அங்கிருப்பவர்கள் அழைத்தனர்.

அதற்குக் காரணமும் இருந்தது. குறுகிய பள்ளத்தாக்குடன் மூன்றரைப் பக்கத்திலும் செங்குத்தான மலைகள் வீற்றிருப்பதால் அதைப் பனிக்காலத்தில் பார்க்க சுவிட்சர்லாந்து போலவே காட்சியளிக்கும்.

இந்த நெடுஞ்சாலை தான் கொலராடோவில் உள்ள மிக அழகான சாலையாகும். அழகிருக்கும் இடத்தில் ஆபத்தும் ஒளிந்து கொண்டிருப்பதற்கு இணங்க மிகவும் ஆபத்தான சாலையும் கூட.

வளைந்து நெளிந்து, கூரான திருப்புமுனைகளுடன் இருப்பதால் அந்தப் பாதையில் கவனமாகத்தான் செல்ல வேண்டும். இதை எல்லாம் அறியாத வந்திதா, பயணியாக அமர்ந்து மிகவும் உற்சாகமாக ஒவ்வொன்றையும் ரசித்து வந்தாள்.

மதிய உணவுக்காக அவர்கள் சில்வர்டனில் நிறுத்த, உற்சாகமாக சாப்பிட்டு முடித்தவர்கள் அங்கேயே சற்று நேரம் சுற்றித் திரிந்தனர். அதில் காலையில் நடந்த சிறு களேபரம் கூட அவர்களின் மனதில் இருந்து வெளியேறிவிட்டது.

என்னவோ வாழ்நாள் முழுமைக்கும் அனைவரும் மகிழ்ச்சியுடன் இருந்ததைப் போல உணர்ந்தனர். இயற்கைக்குத் தான் எத்தனை சக்தி!

சற்று நேரம் கழித்துத் திரும்பும் நோக்குடன் காரில் சென்று அமர்ந்தனர். வரும் பொழுது பிரணவ் காரை ஓட்டிக் கொண்டு வந்ததால் தற்சமயம் ஆதிரனின் கையில் வண்டி சிக்கியது. வந்திதாவின் பொறுமையும் தான்.

''பிரணவ் மணி இப்போ மூணு தானே ஆகுது. இது வரைக்கும் வந்துட்டோம். அப்படியே அடுத்த ஊருக்கும் போய்ப் பார்த்துட்டு வந்திடலாமே. இன்னொரு தடவையா இங்க வரப்போறோம்'' என மெதுவாகத் தூண்டில் போட்டான் ஆதிரன்.



''வேண்டாம் வேண்டாம்! இப்பவே கிளம்பினாத்தான் இருட்டறதுக்குள்ளே திரும்பிப் போக முடியும். அங்கிளும் ஆன்ட்டியும் நமக்காக வெயிட் பண்ணிட்டு இருப்பாங்க'' எனத் தூண்டிலில் சிக்காமல் இருப்பதற்காக அனைவரையும் முந்திக் கொண்டு அவசரமாக பதில் தந்தாள் வந்திதா.

''ஆமாம் ஆதி! லேட் ஆயிடும். வேண்டாம்'' என பிரணவும் தூண்டிலில் மாட்டாமல் அவனிடம் மறுப்பைத் தெரிவித்தான்.

''ஒரு மணி நேரம் தான்டா. போறதுக்கு ஒரு மணி நேரம். வரதுக்கு ஒரு மணி நேரம். இருட்டறதுக்குள்ளே திரும்பிடலாம்'' என ஒருவாறாகப் பேசி பிரணவைக் கரைத்தான். பிரணவ் கரைய மற்றவர்களும் பிரணவுடன் கரைந்து தான் போனார்கள்.

அடுத்த ஊரான டுராங்கோ, கொஞ்சம் பெரிய ஊராகத்தான் இருந்தது. அதைப் பார்த்துவிட்டு வந்த வழியே திரும்பலாம் என அனைவரும் நினைக்க, ஆதிரனோ, ''இவ்வளவு தூரம் வந்துட்டோம். அப்படியே ரவுண்டு அடிச்சிட்டுப் போய் சேர்ந்துடலாம். திரும்பிப் போறதுக்குப் பதிலா புதுசா பார்த்த மாதிரியும் இருக்கும்'' என அடுத்த கட்ட வலையைப் பெரிதாக விரித்தான்.

இம்முறையும் வலையில் யாரும் விழத் தயாராக இல்லை. ஆனால் ஆதிரனோ, ''நான் மேப்ல பார்த்தேன். இந்த ரோடு அப்படியே போய்த் திரும்பவும் நாம காலையில வந்த ரூட்ல சேர்ந்துடும்.

அதனால தைரியமா வாங்க. நான்தானே ஓட்டறேன். ஓட்டற எனக்கே சிரமம் இல்ல. உட்கார்ந்திருக்கிற உங்களுக்கு என்ன வந்தது?'' எனக் காரை அடுத்த

ஊரான பகோஸா ஸ்ப்ரிங்ஸ் (Pagosa Springs) நோக்கிச் செலுத்தினான்.

காரில் அவர்கள் வைத்திருந்த ஜி.பி.எஸ்ஸில் அவர்கள் தங்கியிருந்த இடத்தின் முகவரியைப் போட்டு வைக்க, அந்த வழிகாட்டியோ வந்த வழியில் திரும்பிப் போகச் சொல்லிக் கொண்டிருந்தது.

ஆதிரன் அதைக் காதில் போட்டுக் கொள்ளாமல் அவன் முன் வைத்தக் காலை / காரைப் பின் வைக்கப் போவதில்லை என்று கங்கணம் கட்டிக் கொண்டு அவன் பாதையிலேயே முன்னேறிக் கொண்டிருந்தான், இன்னும் சற்று நேரத்தில் திரும்பி வர நேரும் என்பதை அறியாமல்!

அடுத்த ஊருக்குப் பாதி தூரம் சென்றும் கூட அவர்களின் வழிகாட்டி வந்த வழியே திரும்பச் சொல்லிக் கொண்டிருக்க, ''ஆதி! நல்லாத் தெரியுமா? போற ரூட் கரெக்ட்டா? இன்னுமே ஜி.பி.எஸ். திரும்பிப் போகச் சொல்லிட்டு இருக்குது. பேசாமத் திரும்பிடலாம்'' என்றான் சந்தேகமாக பிரணவ்.

''இல்லே யார்கிட்டேயாவது வழி கேட்கலாம்'' என்றாள் வந்திதா. அவளுக்குப் புரியாதது ஆண்கள் யாரிடமும் வழி கேட்க மாட்டார்கள் என்பது!

''எனக்குத் தெரியும் பிரணவ். நான் போயிட்டிருக்கிறது கரெக்ட்தான். அடுத்த ஊர் போய் சேர்ந்தவுடனே ஜி.பி.எஸ். கரெக்ட்டா சொல்லும். திரும்பிப் போனா இவ்வளவு தூரம் வந்தது வேஸ்ட்'' என இருவரின் வாயையும் அடைத்துவிட்டு மெல்ல முன்னேறி அடுத்த ஊரை அடைந்தான் ஓட்டிக் கொண்டிருந்தவன்.



அங்கு சென்ற பின்னரும் அவர்களின் வழிகாட்டி கிளிப்பிள்ளை சொன்னதைப் போலவே திரும்பிப் போகச் சொல்லிக் கொண்டிருந்தது. அதற்கு மேல் பொறுக்காத வந்திதா காரிலிருந்து இறங்கி அருகில் இருந்த ஒரு கடைக்குள் சென்று விசாரித்து வந்தாள்.

''பிரணவ்! கிராண்ட் ஜங்ஷன் போறதுக்கு ஒரே வழி நாம வந்த வழியிலேயே திரும்பிப் போறதுதான். இங்கிருந்து அங்க போறதுக்கு வேற வழியே இல்லையாம்'' என விசாரித்ததை ஆதிரனைப் பார்த்துக் கொண்டே பிரணவிடம் தெரிவித்தாள்.

பிரணவ் கவலையுடன் ஆதிரனைப் பார்க்க, அப்பவும் அவன் நம்பாமல் காரிலிருந்து இறங்கிச் சென்று மீண்டும் விசாரித்து வந்தான். வந்தவன், ''ஆமாம்டா பிரணவ்! சாரி... திரும்பிப் போயிடலாம்'' என எந்தக் குற்ற உணர்வும் இல்லாமல் காரைத் திருப்பினான்.

வந்திதாவிற்கோ மூக்கின் மேலே கோபம் வந்து விட்டது. அவர்கள் இவ்வளவு தூரம் வந்துவிட்டது. கூட அவளுக்குப் பெரிதாகத் தெரியவில்லை. ஆனால் வந்திதா சென்று வழி விசாரித்துக் கொண்டு வந்து சொன்னதை நம்பாமல் மீண்டும் சென்று, தெளிவு பெற்றுக் கொண்டு வந்ததைத் தான் அவளால் தாங்க முடியவில்லை.

அத்தோடு அவன் செய்த தவறை, 'சாரி' என எளிதாக ஒரு வார்த்தையில் சரி செய்துவிட்டு ஏதும் நடவாததைப் போல காரில் ஏறி உட்கார்ந்து கொண்டானே.

சில தினங்களுக்கு முன்னால் சந்திரசேகர் பேசியது சிறிது கை கொடுக்க வந்த சினத்தைக் கட்டுக்குள்

கொண்டு வந்த வந்திதா, ஆழ்ந்த நீண்ட பெருமூச்சு விட்டு ஒன்றும் பேசாமல் அமைதி காத்தாள்.

அது மட்டுமல்லாது இவள் பாட்டுக்கு எதையாவது பேசி வைக்க, பின்னர் ஆதிரன், 'காரு ஓட்டும் போது கத்தக் கூடாதுன்னு தெரியாதா' என லெக்சர் அடிப்பதை யார் கேட்பது? அதுவும் அவள் இப்பொழுது இருக்கும் சூழ்நிலையிலும், மனநிலையிலும்.

கூடவே இவள் கார் ஓட்டும்பொழுது 'உனக்கு முன்னால காத்துப் போகுது பாரு. சாரல் அடிக்குது பாரு. பாத்து ஓட்டு' எனக் கிடைக்கும் சந்தர்ப்பத்தையும் விடாமல் கிண்டலடிப்பதை யார் சகிப்பது?

முதலில் தங்கும் அறைக்குச் செல்லலாம். பின்னர் இவனை வைத்துக் கொள்ளலாம் என முடிவு செய்து கொண்டாள் வந்திதா. வந்த வழியே திரும்பிக் காரை செலுத்திக் கொண்டிருந்த ஆதிரன் ஒன்றும் பேசாமல் ஓட்டிக் கொண்டிருந்தான்.

மலைகளின் நடுவே செல்லும் முன்னே இருட்டி விட ஆதிரனுக்குமே உள்ளே உதறலாகத் தான் இருந்தது. என்னதான் கார் ஓட்டுவதில் திறமை படைத்திருந் தாலும் அவர்கள் செல்லும் வழி சற்றுக் கடினமாகத்தான் இருந்தது.

காலையில் வந்த பொழுது அழகாகத் தெரிந்த பாதை இருட்டிய பின் பயங்கரமாகத் தோன்றியது. உள்ளே இருக்கும் உதறலை வெளிக்காட்டிக் கொள்ளாமல் வண்டியை ஓட்டியவனைப் பார்த்த பிரணவ், ''ஆதி! நான் வேணா கொஞ்ச நேரம் ஓட்டட்டுமா?'' எனக் கேட்டான்.



இதுவரையில் ஆதிரனை இது மாதிரி அமைதியாகப் பார்க்காத பிரணவுக்கு என்னவோ போல ஆகிவிட்டது. அதனால்தான் கேட்டான்.

''நீ சும்மா தான் கேட்கிறேன்னு தெரியும். இங்கே எங்கேயும் நிறுத்த முடியாது. என்னால தான் இப்படி ஆயிடுச்சு. நானே ஓட்டறேன்'' எனச் சிரித்தவாறே சொல்லி, சூழ்நிலையை இயல்பாக்க முயன்றான் ஆதிரன்.

பிரணவ் மௌனத்தை உடைத்துப் பேசியது ஆதிரனுக்குச் சற்று ஆறுதலாக இருந்தது. ஆனால் அவனுக்கு வேறு ஒரு விஷயம் உறுத்தியது. எதெற்கெடுத்தாலும் சிலிர்த்துக் கொண்டு அவனிடம் சண்டைக்கு நிற்கும் வந்திதா, அன்று ஆதிரன் தப்பு செய்தும் ஒன்றும் பேசாமல் இருந்தது அவனுக்கு ஆறுதலாகவும் இருந்தது; அதே சமயத்தில் அது சுத்தமாகப் பிடிக்கவுமில்லை.

'கார் ஓட்டும்போது கத்தக் கூடாது என ஒன்றிரண்டு தடவை சொன்ன பிறகு இவன் கார் ஓட்டும் பொழுது அவள் வாயைத் திறப்பதே இல்லை. மற்றவர்களுக்கு ஒரு விஷயம் பிடிக்காது என அறிந்ததும் அதைப் பற்றிப் பேசாமல் கடைப்பிடிக்கிறாளே.

இதே நானாக இருந்தால் அவர்களுக்குப் பிடிக்கவில்லை எனத் தெரிந்ததும் மீண்டும் மீண்டும் வம்பு வளர்ப்பேன். என்ன ஒரு வேறுபாடு எங்களுக்குள்!' என எண்ணிக் கொண்டே காரை செலுத்தினான் ஆதிரன்.

ரியர் வியூ மிரரில் வந்திதாவை அடிக்கடி பார்த்த ஆதிரன், மனதில் உள்ள பயத்தை எல்லாம் முகத்தில் பிரதிபலித்து அமர்ந்திருந்தவளைக் கண்டான். இதற்கா

கவே பத்திரமாகச் செல்ல வேண்டும் என நினைத்துக் கொண்டான்.

ஒரு வழியாக மலையில் ஏறி இறங்கியதும் அனைவரும் நிம்மதியாக உணர்ந்தனர். ஆனால் அவர்களின் நிம்மதிக்கு மிகவும் குறைந்த ஆயுளே!

சற்று நேரத்தில் எல்லாம் காரின் என்ஜின், அளவுக்கு அதிகமாக சூடாகி விட்டது. அதற்கு மேல் வண்டியை ஓட்டினால் தீப்பிடிக்கும் அபாயம் இருந்ததால் வண்டியை ஓரம் கட்டினான் ஆதிரன்.

ஒரு வழியாகக் காரை சரி செய்து, முடியவே முடியாதா என பயந்த நீண்ட பயணம் இரவு பதினோரு மணிக்கு முடிவுக்கு வர, தங்கியிருந்த இடதுக்குச் செல்லும்பொழுது அனைவரும் மிகவும் சோர்ந்திருந்தனர். இவை அனைத்தும் போதாதென்று சந்திரசேகரிடம் வாங்கியும் கட்டிக் கொண்டனர்.

''பிரணவ் உங்களுக்கு எல்லாம் கொஞ்சமாவது பொறுப்பு வேண்டாம். இருட்டினதுக்கு அப்புறம் வண்டி ஓட்டறது இல்ல என முன்னாடியே முடிவு பண்ணிட்டுத் தானே இந்த ட்ரிப்பை ஆரம்பிச்சோம். இப்போ மணி பாருங்க பதினாண்ணு ஆச்சு.

இப்படியா கொஞ்சம் கூடப் பொறுப்பில்லாம இருக்கிறது. அதுவும் இன்னும் கொஞ்ச நாளில் நிச்சயம் ஆகப் போகும் சாதனாவையும கூட வச்சுக்கிட்டு'' எனத் தன் மனக்குறையைப் பொறுப்பானவன் எனக் கருதிய மகனிடம் கொட்டினார் பெரியவர்.

பதிலளிக்க யோசித்துக் கொண்டிருந்தான் பிரணவ். பாவம் அவனும் தான் என்ன சொல்லுவான்? ஆனால்,



பிரணவ் பதிலளிக்கும் முன் ஆதிரனே வாயைத் திறந்து பிரணவுக்கு விடுதலை தந்தான்.

''அங்கிள் என்னால தான் இப்படி ஆயிடுச்சு. சாரி அங்கிள்! இவங்க எல்லாம் சொல்லியும் நான் தான் கேட்கலை. இனிமேல் இப்படி நடக்காம பார்த்துக்கறேன்'' என அவரிடம் மன்னிப்பை வேண்டியவன்,

''சாரிடா!'' என நண்பனிடமும் கேட்டுக் கொண்டு தங்கள் அறைக்குச் சென்று விட்டான் ஆதிரன்.

முதல் முறையாக, தன் விளையாட்டுத் தனத்தால் தன் நண்பன் துன்பப்பட்டு விட்டான் என்ற கலக்கத்துடன் தன் கட்டிலில் போய் முடங்கினான் ஆதிரன்.

சும்மாவே சந்திரசேகரின் முன்னால் நல்லவனாக நடக்க அரும்பாடு பட்டுக் கொண்டிருந்த ஆதிரனுக்கு இந்தத் தலையிறக்கம் சிறிதும் பிடிக்கவில்லை. இப்படித் தான் தங்கள் எட்டாவது நாளைக் கழித்தனர்!

* * *

மறுநாள்! அனைவரும் அசதி தீரத் தூங்கி எழுந்ததால் புத்துணர்வுடன் காணப்பட்டனர். ஆதிரனுக்கு மட்டும் இன்னும் மனதில் ஒரு கல்லை வைத்திருந்ததைப் போல பாரமாகத் தான் இருந்து. அவன் கிளம்பி சந்திரசேகர் மற்றும் வந்திதா தங்கி இருந்த அறைக்குள் சென்றதும் மனமும் லேசாகி விட்டது.

அடுத்த அறைக்குள் சென்றதும் சௌந்தரவல்லி குளித்துக் கொண்டிருக்க, வந்திதா தான் எடுத்த புகைப் படங்களைப் பெருமையுடன் சந்திரசேகரிடம் காட்டிக் கொண்டிருந்தாள். அவள் பேச்சில் சிறு கசப்புணர்வு கூடத் தெரியவில்லை.

புகைப்படங்களைப் பார்த்துக் கொண்டிருந்த சந்திர சேகர் கூட 'இவள் எடுத்ததால் அந்த இடம் அழகாகத் தெரிகிறதா அல்லது அந்த இடம் அழகாக இருந்ததால் இவளால் அழகாக எடுக்க முடிந்ததா?' என ஆராய்ச்சியில் ஈடுபட்டார்.

என்ன தான் இருந்தாலும் தன் பெண்ணைப் போல நினைத்திருக்கும் வந்திதாவை விட்டுக் கொடுக்க விரும்பாமல் இயற்கையை விட்டுக் கொடுத்தார்.

''வந்திதா! எல்லாப் படங்களையும் பிரமாதமா எடுத்திருக்கம்மா. நேர்ல போய் பார்த்த மாதிரியே இருக்கு. பேசாம இப்படியே ஊருக்குத் திரும்பிப் போயிடறேன். நீயே எல்லா இடங்களையும் போட்டோ எடுத்து அனுப்பி வச்சிடு. எனக்கும் அலைச்சல் மிச்சமாகும்'' என்றார்.

''சும்மா கிண்டல் பண்ணாதீங்க அங்கிள். நீங்க நேர்ல பார்த்திருந்தீங்க அசந்துப் போயிருப்பீங்க. விட்டுட்டு வர மனசே இல்ல'' என்றாள் வந்திதா.

''நீ சொல்றதைப் பார்த்தா வந்திருக்கலாம்ன்னு தான் தோணுது. ஆனா என்னப் பண்ணறது வயசாகுது இல்ல'' என்றார் சந்திரசேகர்.

''உங்களுக்கா வயசாகுது? பார்க்க பிரணவுக்கு அண்ணன் மாதிரி இருக்கறீங்க. சும்மா சொல்லாதீங்க அங்கிள்'' என வந்திதா சொல்ல, அந்த சமயத்தில் குளித்துவிட்டு வெளியே வந்த சௌந்திரவல்லியின் செவிகளிலும் வந்திதா சொன்னது விழுந்தது.

அவர் ஒரு புன்னகையுடன் ஏதோ சொல்ல வாயைத் திறக்க, ''இதெல்லாம் டூ மச் வது. இன்னிக்கு அப்பாவுக்கு எதுக்கு இவ்வளவு ஐஸ் வைக்கிற?'' என சாதனா முந்திக் கொண்டாள்.



அவளின் தந்தையோ, ''வயசாகுதுன்னு என்னைச் சொல்லலை. என்னோட வைஃப்புக்கு வயசாகுதுன்னு சொன்னேன்'' என்றார் பரிகாசமாக, பார்வையை அவரின் துணைவியின் மீது வைத்துக் கொண்டே.

''எனக்கு வயசாகுதுன்னா உங்களுக்கு மட்டும் குறையுதாக்கும். கிளம்பற வழியைப் பாருங்க'' எனச் சிரிப்புடன் தன் கணவனை முடுக்கினார் மனைவி. கலகலப்பாகப் பேசியவாறே நேற்று இரவு நடந்ததை மறந்தவர்களாக அனைவரும் உற்சாகமாகக் கிளம்பினர்.

அனைவரும் அவ்வாறு கலகலப்பாகப் பேசியதற்குக் காரணமும் இருந்தது. ஆதிரனை அறிந்த நாளிலிருந்து அவனைத் துவண்டு போய் பார்க்காத பிரணவுக்கு சங்கடமாக இருந்தது. ஆதிரன் என்ன தான் வம்பு செய்தாலும் கிண்டல் பண்ணினாலும் பிரணவுக்கு அவனை மிகவும் பிடிக்கும்.

பல வருடங்களாகத் தொடரும் நட்பு அல்லவா! அனைவரையும் கலகலப்பாக வைத்திருக்கும் நண்பன் திடீரென்று இப்படித் தூங்கு மூஞ்சி மரம் போல தூங்கி வழிந்தால் பிடிக்குமா என்ன?

நண்பனைப் பார்க்கப் பாவமாக இருந்ததால் தன் பெற்றோர்களிடமும் தங்கையிடமும் நேற்று நடந்ததைப் பற்றி எதுவும் பேச வேண்டாம் என பிரணவ் கூறியிருந்தான். அதனால் தான் அவர்கள் கலகலப்பாக இருக்க முயன்றனர்.

ஆதிரனும் ஓரளவு சமனப்பட்டுக் கொண்டு அவர்களின் பேச்சில் கலந்து கொண்டான்.

## இலக்கு: 2062 மைல்கள்...
## ராக்கி மௌண்டன் தேசியப் பூங்கா!
## (Rocky Mountain)

ராக்கி மௌண்டன் தேசியப் பூங்காவிற்குச் செல்லும் வழியில் ஐசன்ஹோவர் - ஜான்சன் சுரங்க வழிப் பாதையைக் கடந்தனர். அந்தப் பாதை மலைகளைக் குடைந்து, நான்கு தடங்களைக் கொண்டு அமைக்கப் பட்டதாகும்.

மேற்கே செல்லும் பாதை 2.72 கி. மீட்டரும், கிழக்கே போகும் பாதை 2.73 கி.மீட்டரும் கொண்ட இந்த வழி மலைகளிலேயே குடைந்தெடுத்துக் கட்டப்பட்ட நீளமான சுரங்க வழியாகும். இருட்டாக இருக்கும் இந்த சுரங்கத்தில் மின்சாரத்தின் உதவியுடன் ஒளியேற்றி வைத்து வாகனங்களுக்கு எந்த இடையூறும் இல்லாமல் பராமரிக்கப்பட்டிருந்தது.

காரிலிருந்து மட்டுமே அதன் அழகைப் பருக முடியும். வழியில் எங்கும் வண்டியை நிறுத்த முடியாத தால் வியக்கத்தக்க வகையில் கட்டப்பட்ட இந்தப் பாதையை அதிசயமாகப் பார்த்துப் புகழ்ந்த வண்ணம் பூங்காவை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தனர்.

இடையில் சாதனா தன்னிடம் உள்ள பாடல்கள் எல்லாம் கேட்டு சலித்து விட்டதாகக் கூறி வந்தனா விடம் அவள் ஐ.பாடைக் (iPod) கேட்டாள். வந்தனா அவளிடம் தந்தவுடன் அதிலிருந்து ஒன்றைத் தேர்ந் தெடுத்துப் பாடவிட்டாள் சாதனா.



காரிலுள்ள ஸ்பீக்கரில் இசை கசிந்து வழிய மற்றவர் களுக்கு எப்படி இருந்ததோ ஆதிரனுக்கு மயிலிறகைக் கொண்டு வருடியதைப் போல இருந்தது.

பாடிக் கொண்டிருந்தது 'சான்' எனப்படும் ஒருவகை கியூபன் இசை. ஆதிரன் அப்படி உணர்ந்ததற்குக் காரணம் அவனும் பலவகையான இசையை விரும்பிக் கேட்பான். அப்பொழுது பாடிக் கொண்டிருந்தது அவனுக்கு மிகவும் பிடித்த தொகுப்பிலிருந்து ஒரு பாடல்.

இசையில்லாமல் அவனால் இருக்க முடியாது. இசையும் அவனும் ஒட்டிப் பிறந்ததைப் போல இல்லாத 'பில்ட் அப்' தருவான். அதற்காக அவனுக்கு நன்றாகப் பாடத் தெரியும் எனத் தப்புக் கணக்குப் போட்டு விடா தீர்கள். பாடுவதைக் கேட்க தெரியும்! ரசனைமிக்கவன்!

வந்திதாவின் ஐ.பாடிலிருந்து வந்த இசையை ரசித்த வனுக்கு வந்திதாவைப் பார்க்க வியப்பாக இருந்தது. 'சுனாமியைப் பினாமியா வச்சு ஆளை சுருட்டிட்டுப் போற இவளுக்குள்ளே இப்படியொரு ரசனையா? இண்டரஸ்டிங்' என மெச்சிக் கொண்டான்.

''வந்திதா உனக்கு இவங்களோட பாட்டெல்லாம் பிடிக்குமா? எனக்கும் ரொம்பப் பிடிக்கும். இந்த இசைக் குழுவை ரொம்பக் காலத்துக்கு அப்புறம் தான் கண்டு பிடிச்சாங்க. அப்புறம் தான் இவங்க ரொம்ப பாப்புலர் ஆனாங்க. இதுல இருக்கிற ஒண்ணு ரெண்டு பேரு இப்போ இறந்துகூட போயிட்டாங்க. அவ்வளவு வய சானவங்க'' என வந்திதாவிடம் பேச்சை வளர்த்தான்.

''ஆமாங்க ஆதி! ஆனா, கடைசியிலே வெளிக் கொண்டு வரப்பட்டாங்களே. யோசிச்சுப் பார்த்தா நம்ம

இந்தியாவிலேயும் இது மாதிரி எத்தனையோ இசைக் கலைஞர்கள் இருக்கிறாங்க. அவங்க எல்லாம் கண்டு பிடிக்கப் படாமலேயே போயிடறாங்க. எல்லாத்துலேயும் சினிமா மற்றும் சினிமா சார்ந்த இசை மட்டும் தான் பிரபலமாக்கப்படுது'' என ஆதங்கத்துடன் தெரிவித்தாள்.

ஆதிரனுக்கு அதிசயமாக இருந்தது. அவனும் இது மாதிரிதான் யோசித்திருந்தான். அவன் நினைத்ததையே வந்திதா கூறவும் அவளை விழி அகலாமல் பார்த்திருந் தான். ஆனால் வாய் மட்டும் அவளுக்குப் பதில் சொல லிக் கொண்டிருந்தது.

''உண்மை தான் வந்திதா. நம்ம ஊர்லேயும் இப்படிக் கண்டு பிடிச்சா ரொம்ப நல்லா இருக்கும்'' என அவளின் ஆதங்கத்திற்குப் பதில் சொன்னான்.

பேசியவாறே ராக்கி மௌண்டின் தேசியப் பூங்காவை அடைந்தவர்கள் அங்கிருக்கும் இயற்கை வளமிக்க மலைகளையும், ஏரிகளையும் கண்டு இன்புற்றனர்.

இந்தப் பூங்காவில் தான் அமெரிக்கக் கண்டத்தை இரண்டாகப் பிரிக்கும் எல்லையும் (Continental divide) இருக்கிறது. அதாவது நீர்நிலைகள் தன் பயணத்தை முடித்து இளைப்பாறும் இடத்தைப் பொறுத்து இயற் கையே ஒரு எல்லைக் கோடு வகுத்து கண்டத்தைப் பிரித்து வைத்திருந்தது.

எல்லைக்கு மேற்கே உள்ள நீர்நிலைகள் பசிபிக் கடலிலும் கிழக்கே உள்ளவை அட்லாண்டிக் மற்றும் கல்ப் ஆப் மெக்ஸிகோவிலும் கலக்கும். அறிவிப்பு பலகையின் முன் நின்று புகைப்படம் எடுத்துக் கொண்டு அங்கிருந்து நகர்ந்தனர்.



விலங்கினங்களும் இவர்களின் பார்வைக்கு விருந்து படைக்க, கேமராவின் வயிற்றை நிரப்பிக் கொண்டு விரைவிலேயே அங்கிருந்து கிளம்பி போர்ட் காலின்ஸ் என்னும் ஊரைச் சென்றடைந்தனர்.

---

**இலக்கு: 1974 மைல்கள்...**
**போர்ட் காலின்ஸ்! (Fort Collins)**

---

இரவு உணவின்போது சந்திரசேகரிடம் காலையில் இருந்து கேட்க வேண்டும் என எண்ணியதைக் கேட் டான் ஆதிரன்.

''உங்களுக்கு எல்லாம் என் மேலே கோபம் இல்லையா அங்கிள்? நேத்து நீங்க அவ்வளவு சொல்லியும் நான் கேட்காம அப்படிப் பண்ணினதுனால தானே ரொம்ப லேட் ஆயிடுச்சு'' என்றான் ஆதிரன் தர்ம சங்கடத்துடன்.

''ச்சே ச்சே! எதுக்குக் கோபம்? நீங்க அவ்வளவு நேரம் கழிச்சு வந்தது கொஞ்சம் பதட்டமா இருந்தது எங்களுக்கு. செல்போன்ல வேற சிக்னல் இல்லை. அவ்வளவு தான். விவரம் தெரிஞ்ச பசங்க நீங்க. உங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. பொறுப்பை உணர்ந்து இனிமேல் பார்த்து நடந்துக்கோ'' என்றார் பெரியவர்.

விவரம், பொறுப்பு போன்ற வார்த்தைகளை உப யோகப்படுத்தி, ஆதிரனைப் பெரியவனாக்கி விட்டிருந் தார் சந்திரசேகர். தன் தந்தையின் செயலை நினைத்து மனதுக்குள் மெச்சிக் கொண்டான் பிரணவ்.

''எங்க மேலேயும் தப்பிருக்கு இல்ல. நீ கேட்டப் போவே நாங்களும் உறுதியா மறுத்திருந்தா நீயும்

கேட்டிருப்பியே. எங்களுக்கும் மத்த இடங்களைப் பார்க்க ஆசையா இருந்ததுனால தானே அப்படிச் செய்யலை. உன்னை மட்டும் குற்றம் சொல்லி நாங்க தப்பிச்சுக்கக் கூடாது'' என்றான் பிரணவ் சிரித்தவாறே.

''ஆனா, நாங்க சொல்லறதைக் கேட்கலைன்னாலும் பரவாயில்லை இனிமேல் ஜி.பி.எஸ். சொல்லறதைக் கண்டிப்பா கேட்கணும் சொல்லிட்டேன்'' என்றான் தொடர்ந்து, போலியாக மிரட்டியவாறு. அத்துடன் அந்தப் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்தனர்.

அன்றிரவு அங்கே தங்கி மறுநாள் நெப்ராஸ்கோ வழியாக சிகாகோ செல்லக் கிளம்பினர்.

---

**நெப்ராஸ்கா...**

**ஐ-80 சாலை...**

---

இத்தனை நாட்களும் பாலைவனச் சூழல், பெரிய அகன்ற மலைகள், வானுயர்ந்த மரங்கள் என பார்த்த தற்கு நேர்மாறாக நெப்ராஸ்கா மாகாணம் முழுவதும் சமதளமாக இருந்தது. இந்தக் கோடியில் நின்று கொண்டு பார்த்தால் மறு கோடியில் இருப்பவை அனைத்தும் கண் களுக்குப் புலனாகும். உலகம் உருண்டை என்ற உண் மையும் விளங்கும்.

இங்கே விவசாயம் மற்றும் கால்நடை வளர்ப்புத் தான் முதன்மைத் தொழில். நம்மவர்கள் சாலையில் செல்லும் போது மேற்சொன்ன அனைத்தையும் கண்கூடாகக் கண்டு வியந்தனர்.

இன்னும் இரு தினங்களில் சாதனாவின் நிச்சயதார்த் தத்தை வைத்துக் கொண்டு வீணாக அலைய வேண் டாம் என்ற எண்ணத்தில் அன்றைய பொழுதை



சுலபமாகக் கழித்துவிட்டு, நெப்ராஸ்காவில் சுற்றிப் பார்க்காமல் சிகாகோ செல்ல முடிவு செய்திருந்தனர்.

அவர்கள் செல்லும் வழியில் திடீரென்று இருட்டிக் கொண்டு, தடதடவென்று ஆலங்கட்டி மழை பொழிந் தது. அனைவரும் சிறிது அச்சத்துடன் பார்த்துக் கொண் டிருக்க வண்டியை ஓட்டிக் கொண்டிருந்த பிரணவ் வண்டியை ஒரு பாலத்தின் அடியில் ஓரங்கட்டினான்.

அவன் ஓரம் கட்டியது தான் தாமதம் ஆதிரன் வண்டி யில் இருந்து இறங்கி ஆலங்கட்டி மழையில் நனைய முயன்றான். அதைப் பார்த்து சினந்த வந்திதா அவன் கையை இறுக்கமாகப் பிடித்துக் கொண்டு அவனை வெளியில் விட மறுத்தாள்.

''விளையாடாதீங்க ஆதி! எனக்குப் பயமா இருக்கு'' எனச் சொன்ன வந்திதாவின் கண்களில் சினத்தையும் மீறி பயரேகை தெரிய, அவள் வாயிலிருந்து வந்த சொல் லுக்குக் கட்டுப்பட்டானோ இல்லையோ அவள் கண்கள் தேக்கி வைத்திருந்த பயத்துக்கு வெகுவாகக் கட்டுப் பட்டு அமர்ந்திருந்தான்.

அத்தோடு சந்திரசேகர் வேறு நேற்று தான் 'இனிமேல் பார்த்து நடந்துக்கோ' என்று கூறிப் பந்தை அவன் பக்கமே திருப்பி விட்டிருந்தார். அவனுக்கும் அந்தப் பொறுப்புணர்வு மிகவும் பிடித்திருந்தது. அதனால் வந்த பந்தை லாவகமாக எடுத்துக் கையாண்டான்.

சிலரைத் திட்டினால் கேட்பார்கள். சிலரை தட்டிக் கொடுத்துச் சொன்னால் கேட்பார்கள். அதில் ஆதிரன் இரண்டாவது ரகம்! சந்திரசேகர் அதை உணர்ந்து கொண்டு அவனைத் தட்டிக் கொடுத்தார். அவனும்

அதிசயமாக பொறுப்புள்ள பிள்ளையாகப் பொறுமை யாக அமர்ந்திருந்தான்!

அவனைப் புரிந்து கொண்டு அவனிடம் பேசினால் அவனைப் போல நல்லவன் உலகில் யாரும் இல்லை என எண்ணும் அளவிற்கு உயிராக இருப்பான். அதே அவனைத் தட்டிக் கொடுத்து பேசாமல் திட்டிப் பேசி னால் அவனும் எகிறுவான்.

ஆதிரன் தண்ணீரைப் போல. அந்தந்தப் பாத்திரத் துக்குத் தகுந்த மாதிரி உருமாறுபவன். அதனால் தான் வந்திதா இரண்டு வருடங்களுக்கு முன்னால் அவனிடம் பேசவும் அவனும் நல்லவனாக இருந்தான்.

அதே வந்திதா ஆதிரன் சீண்டியதும் கோபப்பட, 'சீண்டலை ரசிக்காமல் எரிமலையாக வெடிக்கிறாளே' என அவனும் தன் கைவரிசையை அவளிடம் காட்டி னான். இன்று வரையிலுமே அது தொடர்கிறது.

ஆலங்கட்டி மழைப் பொழிந்து ஓய்ந்ததும் வண்டியை மீண்டும் கிளப்பிக் கொண்டு பிரணவ் செல்ல, ''தேங்க்ஸ் ஆதி!'' என்றாள் வந்திதா மெல்லிய குரலில்.

''நல்ல சான்ஸை மிஸ் பண்ண வச்சுட்டியே. இனி மேல் எங்கே இப்படிப் பார்க்கப் போறேன்'' என சலித்துக் கொண்டவனிடம்,

''அந்தக் கட்டி உங்க மேலே பட்டா எவ்வளவு வலிக் கும்னு உங்களுக்குத் தெரியாதா? நம்மூர்ல லாரியைத் திறந்தா கொட்டி வச்ச கல்லெல்லாம் பொலபொலன்னு வருமே அது மாதிரி வந்துட்டு இருக்கு. நீங்க என்ன டான்னா அதுல போய் நிக்கறேன்னு சொல்லறீங் களே?



நீங்க என்ன சினிமால வர ஹீரோவா? எத்தனை பேரு அடிச்சாலும் ஒரு கீறல் கூடப் படாம தப்பிக்கறதுக்கு'' என வந்திதா கிண்டல் செய்தாள்.

அவள் சொல்வதில் இருந்த உண்மை அவனைச் சுட்ட போதும் வந்திதாவைச் சீண்டாமல் அவனால் இருக்க முடியவில்லை.

''வந்து-தா! மனசுக்குள்ள நீ என்ன பயம் உற்பத்தி பண்ணற ஃபாக்டரி ஏதாவது வச்சிருக்கியா என்ன? இப்படி சரக்கு ரயில்ல ஏத்தற அளவுக்குத் தினமும் பயத்தை வெளிக்கொண்டு வர - ரொம்ப சரக்கு ஏத்திட்டயோ'' எனக் கிண்டலடித்தான்.

''நக்கலு? உங்களை அந்த ஆலங்கட்டி மழையிலே தள்ளிவிட்டு வேடிக்கைப் பார்த்திருக்கணும்'' என மீண்டும் கடுப்பானாள்.

''அடடா! வந்து-தா, நீ என்னைத் திரும்பவும் தப்பா நினைச்சுட்ட போல. நிறைய சரக்கு, ரயில்ல ஏத்திட்டி யான்னு கேட்டா, நீ ஏத்தியிட்டேன்னா நினைச்சுக் கிட்ட?'' என அப்பாவியாய் முகத்தை வைத்துக் கொண்டு கேட்டான் ஆதிரன்.

அவன் எதைக் கேட்டான் என வந்திதாவுக்கா தெரி யாது? மௌனமாக அவனை முறைத்தவளிடம்,

''அதில்ல... உள்ளே இருந்து பார்த்ததுக்கே எவ்வளவு ஜாலியா இருந்தது! இன்னும் வெளிய போயிருந்தா... ம்ம்ம்ஹ்ஹ்'' என அவன் நீளமாக பெருமூச்சு ஒன்றை உதிர்த்தான்.

''உங்களுக்கு அதைப் பார்க்க ஜாலியா இருந்ததா? ஆலங்கட்டியினால விவசாயிங்க எவ்வளவு பாதிப்படைய

றாங்க தெரியுமா ஆதி! அது வர ஸ்பீடுக்கு செடியில இருக்கிற பூ, காய் இலைன்னு எல்லாத்தையும் பிச்சிப் போட்டுடும். உங்களுக்கு அதுல நிக்க முடியலைன்னு வருத்தம். அவங்கவங்க கவலை அவங்களுக்கு'' என்றாள் வந்திதா.

''எந்த ஊர்ல இருந்தாலும் விவசாயிங்க அடி வாங்கிட்டுத் தான் இருக்காங்க'' எனச் சந்திரசேகர் இடைப்புக, பேச்சு விவசாயிகளைப் பற்றித் திசை திரும்பியது.

மதியம் சாப்பிட்ட பின் வண்டியை ஆதிரன் ஓட்டினான். பல நாள் திருடன் ஒருநாள் அகப்படுவான் என்பதற்கு இணங்க காவலரிடம் மாட்டியும் கொண்டான். காரணம் விமானத்தை விட மிகவும் வேகமாக வண்டியை ஓட்ட முயன்றதால்!

காவலர் அவனிடம் அபராதம் கட்டுவதற்கான ரசீதைக் கொடுத்துவிட்டுச் சென்ற பின்னர் வந்திதாவைக் கண்ணாடியின் வழியே நோட்டம் விட்டான் ஆதிரன்.

வந்திதாவின் முகத்தில், 'நான் அப்பவே சொன்னேன் இல்ல... நீ கேட்டியா? இப்போ அனுபவி' என்ற ஒரு ஏளன முறுவலை எதிர்பார்த்தவனுக்கு ஏமாற்றமே மிஞ்சி இருந்தது.

அடுத்துக் கிடைத்த சந்தர்ப்பத்தில் பொறுக்க முடியாமல் அதைப் பற்றி அவளிடமே கேட்டும்விட்டான் ஆதிரன்.

''நான் காப்கிட்டே (போலீஸ்) மாட்டிக்கிட்டது உனக்கு இப்போ ரொம்ப சந்தோஷமா இருக்குமே வந்திதா. உள்ளுக்குள்ளே இருக்கிற சந்தோஷத்தை நல்லா சிரிச்சுக் கொண்டாடு. நான் ஒண்ணும் தப்பா நினைச்சுக்க மாட்டேன்'' என உசுப்பிவிட முயன்றான்.



அவளோ ஒரு தீர்க்கமான பார்வை பார்த்தவாறே, ''அதுதான் ஆதி நீங்க. உங்க இயல்பு அப்படி. என்னால அப்படி இருக்க முடியாது. ஸ்பீடா ஓட்டினா காப்கிட்டே மாட்டி ஃபைன் கட்டணும்ன்னு நினைக்கிறதைவிட அதனால எவ்வளவு அபாயம் என உணர்ந்து நீங்க ஸ்பீடை கம்மி செஞ்சா எனக்கு அதுவே போதும்'' என்றாள் பிசிறில்லாத குரலில்.

வந்திதா சொன்னதைக் கேட்டு, 'இவ சொல்றா மாதிரி நானா இருந்தா இந்நேரம் கிடைச்சது சான்ஸ்ன்னு கிண்டல் பண்ணியே அவங்களை ஒரு வழி பண்ணியிருப்பேன். ஆனா, வந்திதா அப்படிச் செய்யலையே. மீண்டும் எனக்கும் அவளுக்கும் எவ்வளவு வேறுபாடு?

ஆனா, வந்திதா கொஞ்சம் நல்ல பொண்ணு மாதிரி தான் தெரியறா' என ஓமாஹா என்னும் ஊர் போய்ச் சேரும் வரையில் அவளைப் பற்றி ஓயாது அசை போட்டுக் கொண்டிருந்தான் ஆதிரன்.

---

## இலக்கு: 1435 மைல்கள்...

## ஓமாஹா! (Omaha)

---

அன்றிரவு அனைவரும் ஓமாஹா நகரில் தங்கி தங்கள் களைப்பைக் களைந்தனர். இப்படித் தான் தங்கள் பயணத்தின் அடுத்த இரு தினங்களைக் கழித்தனர்.

மறுநாள்! ஓமஹாவில் இருந்து கிளம்பிச் சாப்பிடவும், இயற்கை அழைப்புகளுக்காகவும் மட்டும் ஆங்காங்கே வண்டியை நிறுத்தியவர்கள் சிகாகோ போய்ச் சேர்ந்த பொழுது மாலையாகி விட்டது.

---

**இலினாய்...**

**இலக்கு: 965 மைல்கள்...**

**சிகாகோ! (Chicago)**

---

வந்திதாவின் அக்கா நந்திதா வீட்டுக்கு அவர்கள் செல்ல, நந்திதா, அவள் கணவன் தீபக் மற்றும் அவர்களின் செல்வன் நிதிஷ் அவர்களை ஆரவாரத்துடன் வரவேற்றனர்.

''வாங்க வாங்க! எல்லோரும் ரொம்ப டயர்டா இருப்பீங்க. எப்படி இருந்தது உங்க ரோட் ட்ரிப்?'' என வரவேற்றான் தீபக். தந்தை சொன்னதை அப்படியே சொல்லி அனைவரையும் சிரிக்க வைத்தான் மகன் நிதிஷ்.

வந்திதாவைப் பார்த்தவுடன் அவளிடம் துள்ளிக் குதித்து ஓடினவன், ''வந்து-தா சித்தி!'' - என ஆசையாக அவள் கழுத்தைக் கட்டிக் கொண்டான்.

நிதிஷ் அவளைப் பெயர் சொல்லி சித்தி என அழைப்பதற்குக் காரணம், தீபக்கின் தம்பியும் திருமணம் முடிந்து சிகாகோவில் தான் இருந்தான். அவன் மனைவியையும், சித்தி என்று தானே அழைக்க வேண்டும். அதனால்தான் சித்திக்கு முன்னால் பெயரையும் சேர்த்துக் கொண்டு அழைத்தான் அந்தப் பொடியன்.

ஆதிரனோ, 'அடடா.. நமக்கு இங்க ஒரு ஆள் கூட்டணி போடக் கிடைச்சுட்டாரே. குழந்தை நட்சத்திரமா அறிமுகப்படுத்திடலாம்' என நினைத்து உல்லாசமாக விசிலடித்துக் கொண்டிருந்தான்.



ஆதிரன் பார்க்கிறானா என நோட்டம் விட்ட வந்திதா, அவன் இங்கு கவனிப்பது மட்டுமல்லாது உல்லாசமாக விசிலடித்து வேறு தன்னை வெறுப்பேற்றுகிறானே எனப் பல்லைக் கடித்தவள், ''கண்ணா உங்ககிட்டே எத்தனை தடவை சொல்லி இருக்கேன். வந்திதா சித்தி சொல்லச் சொல்லி'' என நிதிஷைத் திருத்த முனைந்தாள்.

''என்க்கு அப்டித் தா வந்து-தா சித்தி வர்து'' என்றான் மீண்டும் தன் மழலைக் குரலில்.

அவன் பதிலில் ஆதிரன் சிரிக்க, வந்திதா அவனைக் கவனிக்காமல் நிதிஷை இழுத்துக் கொண்டு அங்கிருந்து நகர்ந்து விட்டாள்.

மற்றவர்கள் அனைவரும் அசதி தீரக் குளித்துவிட்டு இரவு உணவையும் ஒரு கை பார்த்தனர். பல நாட்களாக வீட்டு உணவைச் சாப்பிடாமல் இருந்தவர்களுக்கு நந்திதா பரிமாறிய உணவு தேவாமிர்தமாக இருந்தது. சாப்பிட்டவர்கள் மனமார அதைப் பாராட்டவும் செய்தனர்.

வந்திதா குளித்துவிட்டுச் சாப்பிட வரும் இடைவெளியில் நிதிஷைத் தன் பக்கமாக கவர்ந்து விட்டிருந்தான் ஆதிரன். பாதிப் பேச்சிலும் மீதி மிட்டாய் மற்றும் விளையாட்டுப் பொருட்களாலும் அந்த சிறு பாலகனை இந்தப் பெரும் பாலகன் இழுத்துக் கொண்டான்.

அதுவும் தன் அண்ணன்களின் பிள்ளைகளுடன் இருந்தவனுக்குச் சிறு குழந்தைகளின் மனதை எவ்வாறு வசியம் செய்ய வேண்டும் என்ற கலை தெரியாதா என்ன?

வந்திதா சாப்பிட அமர, நாளை மறுநாள் நடக்க விருக்கும் சாதனாவின் நிச்சயதார்த்தம் பற்றிப் பேச ஆரம்பித்தனர்.

சிகாகோவில் உள்ள ஒரு மண்டபத்தில் (Banquet Hall) நிச்சயதார்த்தம் நடத்த முடிவு செய்யப்பட் டிருந்தது. அதனால் முதலில் சந்திரசேகர் குடும்பத்தினர், வந்திதா மற்றும் ஆதிரன் அங்கே செல்வதாகவும், நந்திதா குடும்பத்தினர் சற்று நேரம் கழித்து வருவதாக வும் ஆண்கள் பேசிக் கொண்டனர்.

சாதனா கலிபோர்னியாவிலேயே நிச்சயத்துக்குத் தேவை யானதை ஓரளவுக்கு வாங்கி மூட்டை கட்டிக் கொண்டு தான் வந்திருந்தாள்.

மீதம் வேண்டியவற்றை இந்தியப் பொருட்கள் கிடைக்கும் டேவான் அவென்யூவுக்கு மறுநாள் சென்று வாங்கிவிட்டு, அழகு நிலையம் சென்று வரலாம் என வந்திதா, நந்திதா மற்றும் சாதனா திட்டமிட்டுக் கொண் டனர்.

இவர்களின் பேச்சின் நடுவில் குறுக்கிட்ட சாதனா வின் பெற்றோர்கள் அவர்களுக்கு வேறு வேலையிருப்ப தால் அதை கவனிக்கச் செல்ல வேண்டும் என்றனர்.

ஆதிரனும் பிரணவும் அவர்களுடன் செல்வதாக முடிவு செய்ய, தீபக் வேலைக்குச் செல்ல வேண்டி இருந்ததால் எப்போதும் போல் நிதிஷ் தன் பாட்டியுடன் (தீபக்கின் தாய்) இருப்பதாக முடிவு செய்து கொண்டனர்.

அன்றிரவு அனைவரும் படுக்கச் செல்ல, அக்கா - தங்கை இருவர் மட்டும் உறங்காமல் வெகு நாட்களுக்



குப் பிறகு பார்ப்பதால், வாய் ஓயாமல் பேசிக் கொண் டிருந்தனர்.

''வது! பாட்டிகிட்டே பேசினேன். உனக்கு இந்தியாவி லேயே மாப்பிள்ளை பார்க்கிறதாச் சொன்னாங்க. ம்ம்ம்... நீயும் இங்கேயே செட்டில் ஆயிடுவேன்னு நினைச்சேன். அடிக்கடிப் பார்த்துக்கலாமே...'' எனத் தமக்கை ஆதங்கப்பட்டுக் கொண்டாள்.

''இப்ப மட்டும் என்னக்கா? நீங்க என்னை இந்தியாக்கு வந்து பாருங்க. நமக்கு அப்புறம் நம்ம பூர்வீகம் மறைஞ் சுப் போகாது அக்கா. நீங்க எப்படியும் இந்தியாக்கு வந்து தானே ஆகணும். தீபக் மாமாவோட அம்மா இன்னும் அங்க தானே இருக்காங்க'' என்றாள் இளையவள்.

''என்ன இருந்தாலும்...'' என பெரியவள் மீண்டும் இழுக்க,

''அக்கா! இங்க இருந்தாலும் கண்டிப்பா இதே ஊர்ல இருப்பனான்னு தெரியாது. அதனால அதைப் பத்திப் பேசி டைம் வேஸ்ட் பண்ணறதை விட்டுட்டு இப்போ உங்களோட இருக்கிற டைமை என்ஜாய் பண்ணுவோமா? ரொம்ப நாள் கழிச்சு வந்திருக்கேன். இதுதான் நீங்க என்னைக் கவனிக்கற அழகா?'' என உடன் பிறந்தவளை விரட்டினாள் தங்கை.

அவளைவிட ஆறு வயது பெரியவளான நந்திதா அதன்பிறகு வந்திதாவைக் கவனித்த கவனிப்பில், அவளைத் தாங்கின தாங்கலில் மற்றவர்கள் எப்படி உணர்ந்தார்களோ ஒருவனுக்கு மட்டும் புகைச்சலாகவே இருந்தது!

மறுநாள்! எல்லாம் திட்டமிட்டபடி கிளம்ப, ஆதிரனும் கிளம்ப முயலும்போது, ஏற்கனவே தன் அம்மாவும் சித்தியும் அவனிடம் சொல்லாமல் சென்று விட்டனர் என்ற கடுப்பில் இருந்த நிதிஷ் அழத் தொடங்கினான்.

தனக்கு அடுத்துப் பிடித்தவனான ஆதிரனும் கிளம்ப எத்தனிக்க, அடம் பிடித்து அழுது புரண்டு, விழுந்து உருண்டு எனத் தன்னால் முடிந்த தந்திரங்களை அவிழ்த்து விட்டு அவனை வெளியில் போகவிடாமல் செய்துவிட்டான் நிதிஷ்.

ஆதிரனும் வீட்டிலேயே தங்கி நிதிஷுடன் விளையாடிக் கொண்டிருந்தான். எல்லாம் மதியம் வரை நன்றாகப் போய்க் கொண்டிருந்தது!

திடீரென்று தொலைபேசியின் ஓசையில் கண் விழித்த ஆதிரன், அப்பொழுது தான் உணர்ந்தான் நிதிஷுடன் விளையாடியவன், சாப்பிட்டு விட்டு சோபாவிலேயே அமர்ந்து கண்ணயர்ந்ததை.

தொலைபேசி அடித்து ஓய்ந்தது. சற்று நேரத்தில் வீட்டின் மணியோசை கேட்க தீபக்கின் அன்னை போய் கதவைத் திறந்தார். வெளியே இரண்டு காவலர்கள் நின்று கொண்டிருக்க, அவரால் பதில் கூற இயலாமல் ஆதிரனை அழைத்தார்.

ஆதிரன் என்னவென்று கேட்க, அதற்குள் நிதிஷ் தன் பாட்டியின் பின்னே மறைந்து கொண்டு ''என்னை போலீஸ் பிதுச்சித்துப் போயிதுவாங்களா?'' என அழ ஆரம்பித்தான்.

''உன்னை எதுக்குப் போலீஸ் பிடிச்சிட்டுப் போறாங்க? நீ என்னத் தப்பு பண்ணின?'' எனப் பாட்டி வினவ, ''நா



தா 911 கூப்ட்டேன். கூப்ட்டா வதுவாங்களான்னு செக் பண்ணினேன்'' என்றான் மழலை மொழியில்.

ஆதிரன் நிதிஷை அழைத்துக் காவலர்களிடம் பேச வைத்தான். நிதிஷின் வாயாலேயே சொல்கிற வரையில் காவலர்கள் நம்பப் போவதில்லை என உணர்ந்து ஆதிரன் ஒன்றும் பேசவில்லை.

வந்தவர்கள் நிதிஷுக்கு ஒன்றும் பிரச்சனை இல்லை என உறுதிப் படுத்திக் கொண்டு, ஆபத்து சமயத்தில் மட்டும் தான் அந்த எண்ணிற்கு அழைக்க வேண்டும் என அறிவுறுத்திவிட்டுச் சென்றனர்.

மாலையில் வெளியில் சென்றவர்கள் அனைவரும் திரும்பி வந்தவுடன் தீபக்கின் அன்னை, வந்தவர்களிடம் நிதிஷ் செய்ததைப் பற்றித் தெரிவிக்க, நந்திதாவும் தீபக்கும் அவனை அழைத்துக் கண்டித்தனர். இனிமேல் அவ்வாறு செய்யக் கூடாது என வலியுறுத்தினர்.

மிரண்டு போய் இருந்த நிதிஷைத் தான் பார்த்துக் கொள்வதாகக் கூறி, தன் அக்காவிடமிருந்து அழைத்துச் சென்று அவனை சகஜ நிலைக்குக் கொண்டுவர முயன்றாள் வந்திதா.

''கண்ணா! திடீர்னு போலீஸுக்கு போன் பண்ண உங்களுக்கு எப்படி ஐடியா கிடைச்சது?'' என விவரம் அறிய முயன்றாள்.

சற்று நேரம் யோசித்து, ''வந்து-தா சித்தி, ஆதி அங்கிள் சொன்னார், 911 கூப்ட்டா போலீஸ் நம்க்கு ஹெல்ப் பண்ணுவாங்க. அதா பண்ணினேன்'' என்றான் குட்டிப் பையன்.

வந்திதாவுக்கு எரிச்சல் வந்தது. 'இவன் தன் வேலையை இந்தச் சின்னப் பையனிடமும் காட்டி விட்டானா? இவனை வச்சுட்டு என்ன பண்ணறது? இவன் தொல்லை தாங்காமத் தான் இவன் குடும்பம் இவனை அமெரிக்காக் குத் துரத்தி விட்டுட்டாங்க போல. இங்க வந்து நம்ம உயிரை வாங்கறான்' என மனத்திற்குள் ஆதிரனுக்கு அர்ச்சனை செய்து பாலாபிசேகம் நடத்தினாள்.

'நீ சொல்வது உண்மையா என்ன?' என மனதின் ஓரத்தில் எழுந்தக் கேள்வியை அங்கேயே புதைத்து விட்டு, தன் அக்கா பையனிடம் இனிமேல் அவ்வாறு செய்யக் கூடாது எனக் கூறி அப்படிச் செய்தால் போலீஸ் அவன் அம்மா அப்பாவைத் தான் திட்டுவார்கள் அத் தோடு அதற்கு அபராதமும் கட்ட நேரிடும் என விளக்கி னாள்.

இது ஆபத்தில் இருப்பவர்களுக்காகச் செய்யும் உதவி என்பதால் இது மாதிரி விளையாடினால் பின்பு ஆபத்தில் இருப்பவர்களைக் காப்பாற்றச் செல்லத் தாமதம் ஏற் படும் என ஒருவழியாக அவனுக்குப் புரிய வைத்தாள் வந்திதா.

பாதி வேலையைச் சிரமமில்லாமல் முடிக்க வந்த வந்திதாவால் மீதி வேலையை முடிக்க நினைத்த போது மலைப்பாக இருந்தது. அதுதான், ஆதிரனுக்குப் புரிய வைப்பது. பிரணவிடம் பேசிக் கொண்டிருந்த ஆதிரனைக் கண்டு பிடித்து முதலில் திட்டி முடித்தாள்.

''ஆதி, நீங்க எதையுமே சீரியஸா எடுத்துக்க மாட்டீங் கன்னு தெரியும். அதுக்காக இப்படியா. அதுவும் ஒரு சின்னப் பையன்கிட்டே?'' என்றாள்.



''நான் என்ன பண்ணினேன்?'' எனப் புரியாமல் வினவ, ''911க்கு கூப்பிடச் சொல்லி எதுக்குச் சொன் னீங்க?'' என்றாள்.

''ஒஹ்... அதுவா... வெரி ஃபன்னி... ஹ ஹ ஹா...'' எனச் சிரித்தவன், ''911க்கு ஆபத்து டைம்ல கூப்பிட்டா அவங்க வந்து ஹெல்ப் பண்ணுவாங்கன்னு சொன் னேன். அது தப்பா? இந்நேரம் அது அவனுக்கே தெரிஞ் சிருக்குமே'' எனத் தான் செய்தது ஒரு பெரிய விஷய மில்லை என்பதைப் போலக் கூறினான் ஆதிரன்.

''பண்ணறதையும் பண்ணிட்டுக் கேள்வி வேற கேட்கறீங்களா? நீங்க செஞ்சது பெரிய விஷயமில் லையா? உங்களாலதான் நிதிஷ் போலீசுக்குக் கூப் பிட்டான்'' என ஆதிரனைக் குற்றம் சாட்டினாள் வந்திதா.

''வந்திதா நீயே யோசிச்சுப் பாரு. உன் அக்காவும் மாமாவும் வேலைக்குப் போயிட்டா தீபக்கோட அம்மா வுடன் தானே நிதிஷ் தனியா இருக்கான். அவங்களுக்கு இங்கிலீஷ் தெரியாது.

ஏதாவது ஆபத்து சமயத்துல என்ன பண்ணறதுன்னு தெரியாம இருக்கறதைவிட 911க்கு கூப்பிட்டா உதவி கிடைக்கும் என நிதிஷ் தெரிஞ்சு வச்சிருக்கறது நல்லது தானே. அதான் சொல்லிக் கொடுத்தேன்'' என்றான் விளக்கமாக.

ஆதிரன் சொல்வதில் உண்மை இருந்த போதிலும், 'இவன் யார் என் அக்கா பையனுக்கு சொல்லிக் கொடுக்க' என்ற கடுப்பில் அதை ஒத்துக் கொள்ள மனமில்லாமல்,

''சொன்னது சரி. ஆனா, சும்மா கூப்பிட்டா என்ன ஆகுங்கறதையும் விளக்கிச் சொல்லியிருக்கணும்.

எதையுமே அரை குறையா விடக்கூடாது. கொஞ்ச மாவது பொறுப்பு வேணாம்'' என நறுக்கென சொல் லால் அவனைக் கொட்டிவிட்டுச் சென்றாள் வந்திதா.

போகும்போது, 'யாருக்கு வேணும் இவனுடைய விளக்கெண்ணெய் விளக்கம்' என முணுமுணுத்துக் கொண்டே சென்றாள்.

''ம்ம்ம்ஹ்ஹ்ஹ்...'' எனப் பெருமூச்சு விட்டவன் செய்து கொண்டிருந்த வேலையைத் தொடரச் சென் றான். அதான், பிரணவிடம் பேசும் வேலையை!

அன்றிரவு, வந்திதா நிச்சயதார்த்த விழாவுக்கென சாதனாவின் கையில் மெஹந்தி போட்டு அவளைத் தயார்படுத்தினாள். வீடே திருவிழாக் கோலம் பூண்ட ததைப் போல கோலாகலமாக இருந்ததை நிதிஷ் மிக வுமே விரும்பினான்.

அனைவரும் பேச்சும் சிரிப்புமாக இருக்க, அந்த மாலைப் பொழுது இனிமையாகக் கழிந்தது. இப்படித் தான் அவர்கள் அடுத்த இரு தினங்களைக் கழித்தனர்.

* * *

மறுநாள்! காலையில் இருந்தே சாதனா பரபரப்புடன் இயங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்த வந்திதா அவளைக் கிண்டல் செய்து ஒரு வழி பண்ணிவிட்டாள்.

சாதனாவோ, ''வது! உனக்கும் கல்யாணம் நடக்கும் இல்ல... அப்போ வச்சுக்கிறேன். இதுக்காகவே கண்டிப்பா இந்தியா வருவேன்'' என அவளை பயமுறுத்த முயன் றாள். அப்படியாவது வந்திதா அவளைக் கிண்டல் செய் யாமல் இருப்பாள் என்ற நோக்கத்தில்.



''ஓஹ்... அது நடக்கறப்போ பார்த்துக்கலாம் சது. இப்போதைக்கு எனக்கு இதுதான் முக்கியம்'' என்றாள் வந்திதா.

என்னதான் தோழியைக் கிண்டல் செய்தாலும், அவளுக்கு அனைத்து விதத்திலும் உதவியாக இருந்து சாதனாவின் பதற்றத்தை வெகுவாகக் குறைக்க முயன் றாள் வந்திதா.

நந்திதா, வேலைக்குச் சென்ற தன் கணவன் வந்தவுடன் விழா நடக்கும் நேரம் அங்கு வருவதாகக் கூற, சாதனாவின் குடும்பத்தார், வந்திதா மற்றும் ஆதிரன் சீக்கிரமாகவே விழா நடக்கும் இடத்துக்குக் கிளம்பி விட்டனர்.

விழா நடக்கும் அரங்கில் செய்ய வேண்டிய வேலை களில் பிரணவுக்கு உதவியாக இருந்த வந்திதா, வேலை முடிந்தவுடன் அங்கிருந்த ஒரு அறைக்குச் சென்று புடவையில் கிளம்பி வந்தவள் தேவதையாக மிளிர்ந் தாள்.

ஆனால் அவளை ராட்சசி ஆக்கியே தீருவேன் எனக் கங்கணம் கட்டிக் கொண்டு ஆதிரன் அலைந்தால் பாவம் அவளும் தான் என்ன செய்வாள்?

ஆதிரன் குடித்துக் கொண்டிருந்த பழரசம் தரையில் சிந்திவிட, இன்னும் கூட்டம்தான் கூடவில்லையே அதற்குள் துடைத்துவிடலாம் என எண்ணி அந்த இடத்தை அம்போவென விட்டுவிட்டுத் துடைப்பதற்குத் துணி எடுக்கச் சென்று விட்டான்.

அவன் அந்தப் பக்கம் சென்ற அதே சமயத்தில் தன் சேலை மடிப்புகளை நீவிவிட்டுக் கொண்டே அங்கே

வந்த வந்திதா, சிந்திய பழரசத்தைக் கவனிக்காமல் அதன் மேலே காலை வைத்து வழுக்கி விழத் தெரிந்தாள்.

ஆனால், யாரோ ஒருவர் தங்கள் பலத்தை எல்லாம் திரட்டி அவளை இறுக்கிப் பிடித்து அவள் கீழே விழாமல் காப்பாற்றி விட்டார்.

சுதாகரித்து நின்றவள், அங்கே ஒரு புதியவன் அழகான புன்னகையுடன் நின்று கொண்டிருப்பதைப் பார்த்து, ''தேங்க்ஸ்! இங்கே யாரோ ஏதோ கொட்டிட்டாங்கப் போல. அதான், நல்லவேளை நீங்க வந்தீங்க'' என்றாள் நன்றிப் பெருக்குடன்.

அந்த நேரம் பார்த்துத் தான் ஆதிரன் அங்கு வந்தான், கீழே சிந்தியதைத் துடைக்கவென்று! ''இங்கே ஜூஸ் கொட்டிடுச்சு. பார்த்துக் கால் வையுங்க. இல்லைன்னா வழுக்கிடும்'' என்று வேறு சொல்லி வந்திதாவின் எரிச்சலைக் கூட்டினான்.

சற்று நகர்ந்து நிற்க முயன்ற பொழுது தான் வந்திதா கவனித்தாள் அவளின் அழகான செருப்பு, அவள் தடுமாறியதில் தன் பிடிமானத்தை விட்டதை.

அங்கு நின்றிருந்த புதியவன், ''ஒஹ்... நீங்க ரொம்ப லேட். இவங்க அதுல கால் வச்சு வழுக்கி விழத் தெரிஞ்சாங்க'' என்றான் ஆதிரனிடம் வந்திதாவைச் சுட்டிக் காட்டியவாறே.

''ஒஹ்... வெ...'' என ஆரம்பித்து ஆதிரன் எப்பொழுதும் சொல்லும் 'வெரி ஃபன்னி' எனச் சொல்ல வந்தவன், வந்திதாவின் முகத்தைப் பார்த்து அதில் குடிகொண்டிருந்த கடுப்பில், ''வெரி சாரி'' என மாற்றி விட்டான்.



''இட்ஸ் ஓகே'' என ஆதிரனிடம் சொன்னவள், நினைவு வந்தவளாக, ''ஐ அம் வந்திதா! நீங்க?'' என்றாள் அந்தப் புதியவனிடம்.

''ஐ அம் நிஷாந்த், விஷாக்கோட (சாதனாவின் வருங்கால கணவன்) சித்தி பையன்'' என அவன் அறிமுகப் படுத்திக் கொண்டான்.

சற்று நேரம் அங்கு நின்று வந்திதாவிடம் பேசிய ஆதிரனுக்கும் நிஷாந்துக்கும் வந்திதாவின் செருப்பு அறுந்தது தெரிய வந்தது.

வந்திதாவுக்கு என்னவென்றால் ஆதிரனால் தானே தன் செருப்பு அறுந்தது அதனால் அவன் அவளைப் பக்கத்தில் இருக்கும் கடைக்கு அழைத்துச் செல்வதாகக் கூறுவான் என எதிர்பார்த்தாள். ஆதிரனோ மிகச் சுலபமாக ஒரு வழியைக் கண்டு பிடித்தான். அதுவும் ஒரு ஆகாவழியை!

ஆலோசனை என்ற பெயரில், ''வரும்போது போட்டுட்டு வந்திருப்பியே அதைப் போட்டுக்கோ'' என வந்திதாவுக்கு இலவசமாக வழங்கினான் ஆதிரன்.

''வரும்போது ஷூ போட்டுட்டு வந்தேன். அதை சாரீக்குப் போட்டா எப்படி இருக்கும்?'' என அவனிடம் கடுப்புடன் கேட்டாள்.

வந்திதாவின் பதிலைக் கேட்டு அவளைப் புடவையில் ஷூ காலுடன் கற்பனை செய்து பார்த்த ஆதிரனுக்குச் சிரிப்புச் சிரிப்பாக வந்தது. ஆனால் வந்திதாவின் முகத்தில் இருந்த எரிச்சலைப் பார்த்து, வந்த சிரிப்பை புல் மீல்ஸ் சாப்பிடுவதைப் போல சாப்பிட்டு ஏப்பம் விட்டவன் ஏதோ சொல்ல வாயைத் திறந்தான்.

அதற்குள் அருகில் நின்று கொண்டிருந்த நிஷாந்த் முந்திக் கொண்டு, ''வந்திதா! நீங்க வாங்க என்னோட இங்கப் பக்கத்துல ஒரு செருப்புக் கடை இருக்கு. போய் உங்களுக்கு வேண்டியதை வாங்கிட்டு பங்ஷன் ஆரம்பிக்கறதுக்குள்ளே சீக்கிரமா வந்திடலாம்'' என்றான்.

''உங்களுக்கு எதுக்குச் சிரமம்? நான் பிரணவ்கிட்டே கேட்கிறேன்...'' என வந்திதா சொல்லும் பொழுதே கடைசி வார்த்தைகள் உள்ளே சென்று விட்டிருந்தன.

பிரணவ் தன் தங்கையின் நிச்சயதார்த்த விழாவுக்கு செய்யும் வேலைகளைச் செய்வானா இல்லை வந்திதாவுக்குச் செருப்பு வாங்க உதவி புரிவானா? என யோசித்த தன் பலனாகத் தான் அவள் குரல் உள்ளே சென்று விட்டிருந்தது.

''அவர் பிஸியா இருப்பார். பேசி டைமை வேஸ்ட் பண்ணாதீங்க'' என நிஷாந்த் வந்திதா நினைத்ததையே கூறினான்.

தன் அக்காவின் கணவனைக் கூப்பிடலாம் என்றால் அவர்கள் இப்போது தான் கிளம்பியிருப்பார்கள். இனி அவர்கள் வந்த பின் போய் வாங்கி வருவது இயலாது எனத் தனக்குள் யோசித்துக் கொண்டிருந்தவளை,

''இப்படியே யோசிச்சு டைமை வேஸ்ட் பண்ணாதீங்க வந்திதா. வாங்க போகலாம்'' என அவளைத் துரிதப்படுத்தினான் நிஷாந்த்.

ஆதிரன் மேலிருந்த கடுப்பில் உடனே சரி என்று வாயிலை நோக்கி நொண்டியபடி அகன்றாள் வந்திதா.

அதுவரை அவர்கள் இருவரையும் சுவாரசியமாகப் பார்த்துக் கொண்டிருந்த ஆதிரனிடம், ''ரொம்பத் தேங்க்ஸ்!'' எனக் கூறி அவன் கையைப் பற்றி விடுவித்த நிஷாந்த், ''அப்புறம் மீட் பண்ணலாம்'' என வந்திதாவைப் பின் தொடர்ந்து ஓடினான்.



'இவன் எதுக்கு நமக்குத் தேங்க்ஸ் சொல்லிட்டுப் போறான்?' என மண்டையைப் போட்டு உடைத்துக் கொண்டிருந்தவனுக்கு மூளைக்குள் மின்னல் வெட்டியது.

'ஒஹ்... கதை அப்படிப் போகுதா..? தலைவருக்கு வந்திதா மேலே ஒரு கண்ணா? போகும் போது 'பூவ பூவ பூவ பூவே' என பாடிட்டுப் போறான். திரும்பி வரும் போது 'பூ ஒன்று புயலானது' எனப் பாடிட்டு வரப் போறான். ஹ ஹ ஹா வெரி ஃபன்னி' எனத் தன் கற்பனைக் குதிரையை நன்றாக ஓடவிட்டுச் சிரித்துக் கொண்டிருந்தான் ஆதிரன்.

'பரவாயில்லை நிஷாந்த் பார்க்க ஆளு நல்லா களையாத் தான் இருக்கான். நல்ல உயரம், நல்ல பெர்சனாலிடி. ஸ்மார்ட்டா வேற தெரியறான்.

நம்ம (?!) வந்திதாக்கு மட்டும் என்ன குறைச்சல்? நல்ல உயரமா, அழகா இருக்கா. மீன் மாதிரி கண்கள், சிப்பி மாதிரி இமைகள், பிறை மாதிரி புருவங்கள். பார்க்கப் பார்க்கத் தூண்டும் கன்னத்துக் குழி, ஆரஞ்சு மாதிரி உதடுகள்.

எந்த டிரஸ் போட்டாலும் அதை உடுத்தும் பாங்கு என எல்லாமே அழகு தான். இன்னைக்கு 'சாரி' கட்டிக் கொஞ்சம் மேக்கப் போட்டதால அப்படியே அள்ளுது.

ம்ம்ம்ஹ்ஹ்ஹ்... ஷி இஸ் வெரி செக்ஸி' என நீண்ட பெருமூச்சுடன் தன் வர்ணனையை நிறுத்தியவனுக்குத்

தான் வாசலையே வெறித்துக் கொண்டிருப்பது ஞாப கத்திற்கு வந்தது.

'ச்சே! இது என்ன நினைப்பு? அதுவும் வந்திதாவைப் பத்தி' எனத் தறிகெட்டு ஓடும் எண்ணத்திற்கு தலையை உதறி முற்றுப்புள்ளி வைத்து, யாரேனும் பார்க்கிறார்களா என சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு நிம்மதியாக உள்ளே சென்றான்.

வந்திதாவும் நிஷாந்தும் கிளம்பிச் சென்ற பின்னர் அவர்கள் திரும்பி வருவதற்கு நேரம் கூடிக் கொண்டே போக ஆதிரனுக்கு இருப்புக் கொள்ளவில்லை. அடிக் கடித் தன் கைக்கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டிருந் தான்.

ஒரு செருப்பு வாங்க இவ்வளவு நேரமா? அதுவும் மிகவும் பரிச்சயம் இல்லாத ஆடவனுடன் சென்றது ஆதிரனுக்கு உறுத்தலாகவே இருந்தது. நேரம் ஆக ஆகத் தான் தன் மடத்தனம் புரிந்தது.

'ச்சே! பேசாமே நானே கூட்டிட்டுப் போயிருக்கணும். இப்படித் தெரியாத ஒருத்தனோட அனுப்பிச்சது தப்போ? அடிக்கடி என்னோட பிரைன் ஃபிரீஸ் ஆயிடும் போல' என நொந்து கொண்டான் ஆதிரன்.

ஆனால் விழாத் தொடங்கும் முன்னர் ஆதிரன் பதட டப்பட்டதெல்லாம் வீண் என நினைக்கும் அளவிற்கு மலர்ச்சியுடன் தான் வந்தாள் வந்திதா.

'அடச்சே! நான் தான் வீணா டென்சன் ஆயிட் டேனோ. வர்றா பாரு என்னமோ புன்னகை மன்னின்னு பட்டம் கொடுத்த மாதிரி' என மனதுக்குள் திட்டித் தீர்த்தான் ஆதிரன்.



விழா இனிதாக நடந்தேற கூடியிருந்தவர்களின் முகங்கள் மலர்ந்தன, அகங்கள் குளிர்ந்தன, ஒருவனைத் தவிர.

நிஷாந்த், 'பூ ஒன்று புயலானது' எனப் பாடிக் கொண்டு வருவான் என்று எதிர்பார்த்த ஆதிரனுக்கு, அவன் மலரை மொய்க்கும் வண்டாக மாறி வந்திதா வையே சுற்றி வந்தது மனதை எரிய வைத்தது.

அது எப்படி வந்திதா வேறு ஒரு அந்நியனிடம் நல்ல பெயர் வாங்கலாம் என்ற நல்ல எண்ணத்தில் தான். அது மட்டும் தான் காரணமா? அல்லவே!

கிடைக்கும் சந்தர்ப்பத்தில் எல்லாம் வந்திதா எனும் மலரை ரீங்காரமிட்டுக் கொண்டிருந்த நிஷாந்த் எனும் வண்டைப் பார்க்கும் போர்வையில் வந்திதாவை நோட்டம் விட்டுக் கொண்டிருந்தான் ஆதிரன்.

வந்திதாவும் நிஷாந்துடன் சுவாரசியமாகப் பேசிக் கொண்டிருந்தாள். அதைப் பார்க்கப் பார்க்க ஆதிர னுக்குப் பற்றிக் கொண்டு வந்தது.

இத்தனை நாட்களில் ஆதிரன் வந்திதாவைப் பார்க் கும் பொழுதெல்லாம் அவளை மட்டம் தட்டி, அவளைச் சீண்டி அழ வைத்ததைப் போல நிஷாந்த் செய்யாமல் அவளுக்காக உருகினான். ஆதிரனுக்கோ அவன் உருகும் ஓசை பேரிரைச்சலாக மாறி உள்ளத்தை உரசிச் சீண்டியது. பொறாமையும் கொள்ள வைத்தது.

'என்கிட்டே எப்போதாவது இப்படிச் சிரிச்சுப் பேசி இருக்காளா? அவளுக்கு பல்லு இருக்கான்னே எனக்கு ரொம்ப நாளா டவுட்டா இருந்தது.

இப்போ அதைத் தெளிவுபடுத்தற மாதிரி முப்பத் திரண்டு பல்லையும் காட்டறா பாரு. இங்க என்ன ரேத்

பேஸ்ட் விளம்பரமா எடுக்கறாங்க?' என பொருமினான் ஆதிரன்.

கடைசியாக அவன் காதில் விழுந்தது நாளை விஷாக்கின் வீட்டில் சந்திரசேகர் குடும்பத்தார்க்கு விருந்து என்பதால் வந்திதா சிகாகோ நகரைத் தனியே சுற்றிப் பார்க்கப் போகிறாள் என்பதே. நிஷாந்தும் அவளுடன் சேர்ந்து சிகாகோவை சுற்றிப் பார்க்கப் போகிறானாம்.

அதைக் கேட்ட ஆதிரன், 'போடா...ங்க... ரொம்ப முக்கியம்' எனச் சலித்துக் கொண்டான்.

சாப்பிடும்பொழுதும் வந்திதா-நிஷாந்தின் உரையாடல் தொடர, ஆதிரனால் அதற்கு மேல் பொறுக்க முடியவில்லை.

உணவு அவரவர்களே போட்டுச் சாப்பிடும் பப்பெஃ (Buffet) முறை என்பதால் அவனுக்கு வேண்டியதை எடுத்துக் கொண்டு வந்திதா-நிஷாந்த் இருந்த இடத்துக்குச் சென்றான் ஆதிரன்.

அவன் அங்கே சென்ற அதே சமயத்தில், ஒரு தம்பதியை நிஷாந்த் வந்திதாவுக்கு அறிமுகம் செய்து வைத்தான். அவன் அறிமுகம் செய்து வைத்ததைக் கேட்ட ஆதிரனுக்குப் பகீரென்றது. ஏனெனில் நிஷாந்த் அறிமுகம் செய்து வைத்தது அவன் பெற்றோர்களை.

'இந்த நிஷாந்த் பயங்கர ஸ்பீடா இருக்கிறான். இது எல்லாம் நல்லதுக்கு இல்லை' என நினைத்தவாறே அவர்களின் அருகில் இருந்த டேபிளில் ஒருவருக்கும் சந்தேகம் வராதவாறு அமர்ந்து, காதைக் கூர்மையாக்கினான்.



நிஷாந்தின் தந்தை ஈஸ்வரன், ''அம்மா-அப்பா பத்திக் கேள்விபட்டேன். ரொம்பச் சங்கடமாப் போயிடுச்சு. ஆனா, கல்யாணம் முடிஞ்சதுக்கு அப்புறம் இந்தியா போகணும்ன்னு சொன்னியாமே.

பேசாம உன் அக்கா மாதிரி கல்யாணம் கட்டிட்டு இங்கேயே இருக்கிற வழியைப் பாரு. எங்க பையனுக்கு உன்னை ரொம்பப் பிடிச்சிருக்காம். யார்கிட்டே இதைப் பத்தி பேசட்டும்?'' என அதிகாரத் தொனியில் பேசினார், அல்ல, மிரட்டினார்.

அவர் சொன்னதைக் கேட்டதும் வந்திதா மௌனமாக இருக்க, நிஷாந்தின் பெற்றோர்களுக்கு கொண்டாட்டமாகிவிட்டது போலும். எது சொன்னாலும் இவள் கேட்டுக் கொள்வாள் எனத் தமக்குத் தாமே முடிவு செய்து கொண்டார்கள்.

நிஷாந்த் தான் நெளிந்து கொண்டிருந்தான். தன் பெற்றோர்களின் அதிகாரத் தொனி பற்றித் தெரிந்தும் இவளிடம் பேச வைத்தது தவறோ என நினைத்தான்.

அவன் எண்ண வலையில் இருந்து அறுபட வைத்தது அவன் அன்னை மங்கையின் குரல். ''நாங்க சொல்லறதை யோசிச்சுப் பாரு... உனக்கே புரியும். இந்தியால இருக்கறதை விட இங்கே எந்த பிக்கலும் பிடுங்கலும் இல்லாம வசதியா இருக்கலாம். சரி, உன் பங்குக்கு வந்த பணத்தை இந்தியாக்கு ட்ரான்ஸ்பர் பண்ணிடலையே?'' எனக் கேட்டார். மீண்டும் அதிகாரத் தொனி!

இல்லை என்ற பதிலை வந்திதாவிடம் இருந்து பெற்றவர் முகமெல்லாம் பூரிப்புடன், ''அப்படின்னா, உனக்கும் இங்க இருக்கிறதுக்கு விருப்பம் இருக்கு

தானே. அதான் எல்லாப் பணத்தையும் இங்கே விட்டு வச்சிருக்க. நல்லவேளை திரும்பி இங்க ட்ரான்ஸ்பர் பண்ண வேண்டாம். பிரச்சனை முடிஞ்சது'' என நாசுக்காக எடுத்துச் சொல்வதாக நினைத்துக் கொண்டு வந்திதாவின் மனத்தைக் காயப்படுத்தினார் அந்த அம்மையார்.

'என்ன பிரச்சனை முடிஞ்சது?' என்ற கேள்வி வந்திதாவுக்குள் எழுந்தது. காயம் ஏற்படுத்திய வலியை மறைத்துக் கொண்டு, ''நீங்க பெரியவங்களாப் போயிட்டீங்க. அதனால நானும் மரியாதையாகவே சொல்லிடறேன். எனக்கு இந்தக் கல்யாணத்துல விருப்பம் இல்லை. பேசின கொஞ்ச நேரத்துல ஒரு தடவை கூட என் விருப்பத்தைப் பத்தி நீங்க யோசிக்கவேயில்லை.

நீங்க சொல்லறதுக்குக் கட்டுப்பட்டு நடக்கணும் என்கிற அதிகாரம் தான் உங்க பேச்சிலே தெரிஞ்சது. நான் அன்புக்குக் கட்டுப்படுவேன். ஆனா, அதிகாரத்துக்கு கண்டிப்பா மாட்டேன். இத்தோட இந்தப் பேச்சை விட்டுடுங்க'' என்றாள் வந்திதா மெல்லிய ஆனால் தீர்மானமான குரலில்.

''அம்மா! என்னமா இப்படியெல்லாம் பேசிட்டு இருக்கீங்க?'' என நிஷாந்த் பதறித் தன் அன்னையைக் கேள்வி கேட்க, 'ஊ லலலா... ஊ லலலா...' என்ற பாட்டு ஆதிரனின் மனக்கச்சேரியில் களை கட்டியது.

''நான் என்னடா தப்பாக் கேட்டுட்டேன். உன்னைப் படிக்க வச்சு இங்க வெளிநாட்டுக்கு அனுப்பிச்சது திரும்ப இந்தியாவுக்குப் போறதுக்கா? எங்களோட கௌரவம் என்னாகிறது?



விஷாக்குக்கு இங்கேயே பொண்ணு பார்த்துக் கல்யாணம் பண்ணற மாதிரி உனக்கும் இங்கேயே இருக்கிற ஒரு பொண்ணைக் கல்யாணம் பண்ணினாத் தானே நமக்கு மரியாதை.

அதுவும் வசதியான இடத்துல. விஷாக் கல்யாணம் பண்ணற இடத்தை விட உனக்கு வசதியா அமைய நான் எல்லாம் விசாரிச்சிட்டு வந்துதான் இவகிட்டே பேசினேன்'' என்றார்.

அதற்கு மேல் பொறுக்க மாட்டாமல், ''சாரி! உங்களுக்கும் எனக்கும் ஒத்து வராது. நான் கிளம்பறேன்'' என அங்கிருந்து அகன்றாள் வந்திதா.

'அப்பாடா! இப்போ தான் வந்திதா தன் சுயரூபத்தைக் காட்டினா. நானே பயந்துட்டேன். எங்கே சாந்தசொரூபியா மாறிட்டாளோன்னு' என நிம்மதியாக மூச்சுவிட்ட ஆதிரனுக்குச் சினமும் மேலோங்கி இருந்தது. அது நிஷாந்தின் பெற்றோர்கள் மேல்.

பணத்துக்காகத் திருமணம் செய்யத் தகுதியானவள் வந்திதா என அவளைப் பற்றி எடை போட்டு அதையும் அவளிடமே கூறுவது எவ்விதத்திலும் சரி இல்லை; நியாயமும் இல்லை.

ஆதிரன் மெதுவாக அங்கிருந்து நகர்ந்து வந்திதா இருந்த இடத்தை நோக்கி முன்னேறினான். வந்திதா தன் அக்கா மற்றும் நிதிஷுடன் அமர்ந்திருந்தாள். அவளின் முகத்தில் இருந்து எல்லாவற்றையும் தன் தமக்கையிடம் சொல்லிவிட்டாள் எனக் கணித்துக் கொண்டான்.

நிதிஷ் ஐஸ்கிரீம் சாப்பிட்டுக் கொண்டிருக்க, ஆதிரன் மெல்ல அவனிடம் பேச்சை வளர்த்தவாறு அவனருகில்

அமர்ந்தான். நந்திதா உணவை எடுத்துக் கொண்டு வரச் செல்ல, நிதிஷ் அவன் கிண்ணத்தைக் காலி செய்து விட்டு வந்திதாவின் ஐஸ்கிரீம் கிண்ணத்தைக் கையில் எடுத்துக் கொண்டான்.

வந்திதா அவனிடம், ''போதும் கண்ணா! நீங்க நிறைய சாப்பிட்டுட்டீங்க'' என அவனைக் கண்டித்தாள்.

''ப்ளீஸ்ஸ்ஸ் வந்து-தா சித்தி. இன்னும் கொஞ்சம் சாப்பித்துக்கறேன்'' எனச் சிணுங்கலுடன் அடம்பிடிக்க, சித்தியானவளின் உள்ளம் அந்தச் சிணுங்கலில் சிக்கிக் கொண்டது.

''சரிங்க கண்ணா! இன்னும் ரெண்டு ஸ்பூன் சாப் பிட்டுட்டு மிச்சத்தைக் கொடுங்க.. நான் சாப்பிட்டுக் கறேன்'' எனச் சொன்னது தான் தாமதம், முதல் ஸ்பூனில் அரைக் கிண்ணம் காலியாக அடுத்த ஸ்பூனில் மீதம் இருந்தது அவன் வயிற்றுக்குள் புலம் பெயர்ந்தது.

அதைப் பார்த்துக் கொண்டிருந்த ஆதிரன் விழுந்து விழுந்து சிரிக்க, அத்தனை நேரம் இறுக்கத்துடன் இருந்த வந்திதாவும் புன்னகையை முகத்தில் தவழவிட்டாள். குழந்தைகள் தான் எதையும் மாற்றும் வல்லமை படைத் தவர்கள் ஆயிற்றே!

அதன் பின்னர் வந்திதாவின் கவனம் நிதிஷ் மேல் பதிய, ஆதிரனும் அவளிடம் தன் அண்ணன்களின் செல்வங்கள் மற்றும் தங்கையின் மழலைகள் செய்யும் ரகளைகளைப் பற்றிக் கூறினான்.

அத்தோடு அவனும் அவர்களுக்கு இணையாகச் செய்யும் சேட்டைகளையும் பற்றிப் பேசிக் கொண்டிருந் தான். அப்படியே பேச்சும் அவன் குடும்பத்துக்குத் தாவியது.



வந்திதா, ஆதிரன் பேசுவதைக் கேட்டவாறே, 'ஹி இஸ் வெரி லக்கி. என்ன மாதிரியான குடும்பம் கிடைச் சிருக்கு இவனுக்கு' எனப் பெருமூச்சுவிட்டுக் கொண் டாள்.

முதன் முதலாக ஆதிரன் தன் குடும்பத்தைப் பற்றி வந்திதாவிடம் பேசியது அவளுக்குப் பிடித்திருந்தது. அதுவும் நிஷாந்தின் பெற்றோர்கள் செய்த ரகளையில் புண்பட்டிருந்த மனதுக்கு இதமாகவும் இருந்தது.

இத்தனை நாட்களாக இல்லாமல் ஆதிரனும் ஏன் அவன் குடும்பத்தைப் பற்றி இன்று வந்திதாவிடம் இவ்வளவு விரிவாகச் சொன்னான் என்று அவனுக்குமே விளங்கவில்லை.

சொல்லணும் என்று நினைத்துச் சொல்லவில்லை. பேச்சு தன் அண்ணன் குழந்தைகளிடமிருந்து அப்படியே குடும்பத்திடம் தாவிவிட்டது என மனதைச் சமாதானப் படுத்திக் கொண்டான்.

விழா முடியும் தருவாயில் நிஷாந்த் வந்திதாவிடம் ஓடிவந்து தன் கைப்பேசி எண்ணைக் கொடுத்து, ''நாளைக்கு நாம் ஏற்கனவே போட்ட பிளான் படி சிகாகோ சிட்டிக்குப் போறோம். ப்ளீஸ் வந்திதா! என்னைப் பெத்த வங்க மேலே இருக்கிற கோபத்துல என்னைத் தண் டிச்சுடாதீங்க'' எனக் கூறி விடைபெற்றான்.

இயல்புக்கு வந்திருந்த வந்திதா, லேசாக முறுவலித்து, ''சுயர்! நான் நாளைக்கு வரேன். அப்போ தெளிவாப் பேசலாம்'' எனக் கூறி கையசைத்தாள்.

நிஷாந்த் சொன்னதைக் கேட்ட ஆதிரனோ, 'கவிதைச் சொல்லறதா இவனுக்கு நினைப்பு' எனப் பழித்துக்

கொண்டான். இப்படித் தான் அவர்கள் தங்கள் பதின்மூன்றாவது நாளைக் கழித்தார்கள்!

* * *

மறுநாள்! விழாவிற்கென அலைந்ததில் அனைவருக் குமே மிகவும் அசதியாகத் தான் இருந்தது. அதனால் நேரம் கழித்துத் தான் எழுந்தனர். அதுவும் சோம்பலு டனே. காலைப் பொழுதைப் பேசியபடியே நெட்டித் தள்ளிக் கொண்டிருந்தனர்.

விழா முடிந்து நந்திதா தன் குடும்பத்துடன் விரைவி லேயே வீடு திரும்பிவிட்டாள். அதனால் அவள் மட்டும் தான் சுறுசுறுப்பாகத் திரிந்தாள்.

வந்திதா தான் கடைசிவரை சாதனாவுடன் இருந்து அனைத்து வேலைகளையும் கவனித்து வந்தாள். அதனால் மிகவும் களைப்படைந்திருந்தாள். எப்பொழு துமே சீக்கிரமாகவே எழும் வந்திதா அன்று வெகுநேரம் வரை சோம்பலுடனே படுக்கையில் கிடந்தாள்.

பக்கத்து அறையில் இருந்த ஆதிரன், வந்திதாவுக்கு முன்னால் எழுந்து ஓசைப்படாமல் வந்திதா உபயோகிக் கும் அதே குளியலறையை உபயோகித்தான்.

ஜாக் அண்ட் ஜில் என அழைக்கப்படும் அந்தக் குளியலறைக்கு வந்திதா படுத்திருந்த அறைக்குள் இருந்தும் செல்லலாம், ஆதிரன் படுத்திருந்த அறைக்குள் இருந்தும் செல்லலாம் என்பதைப் போல அமைந் திருந்தது.

ஆதிரன் ஓசையில்லாமல் பாடுவதாக நினைத்துச் சத்தமாகப் பாடி வந்திதா மற்றும் சாதனாவின் தூக்கத்தை ஓட ஓட விரட்டினான்.



அங்கு வந்த நிதிஷ் கூட வந்திதாவிடம், ''வந்து-தா சித்தி! ஆதி அங்கிளுக்கு நல்லாப் பாதத் தெதியல'' எனத் தன் கருத்தைக் கருத்துடன் தெரிவித்தான்.

அவன் குறும்பை ரசித்தவாறே எழுந்த இரு பெண் களும் அவன் கருத்தை அங்கீகாரம் செய்தனர். அதில் குஷியாகிவிட்டவன் அவனுக்கு நன்றாகப் பாடத் தெரி யும் என ஆதிரனுக்குப் போட்டியாக ஒரு கச்சேரியைத் தன் மழலைக் குரலில் நடத்தினான்.

பாடி முடித்துக் களைப்பான நிதிஷிடம் வேறு விஷயங் களைப் பற்றி சாதனா பேச ஆரம்பிக்க, படுக்கையில் இருந்து நீங்காத சோம்பலுடன் எழுந்த வந்திதா குளிய லறைக்குள் புகுந்தாள்.

தூக்கக் கலக்கத்துடனே எப்பொழுதும் இருக்கும் இடத்தில் இருந்து பேஸ்ட்டை எடுத்து பிரஷ்ஷில் வைத்து வாய்க்குள் இரண்டு இழு இழுத்தாள். அவ்வளவுதான்! அவள் முகம் அஷ்டகோணலாகியது.

அவள் பேஸ்ட் என நினைத்து வாயில் வைத்தது பேஸ்ட்டை அல்ல. ஆண்கள் பயன்படுத்தும் ஷேவிங் கிரீமை. யாரோ பேஸ்ட் வைக்கும் இடத்தில் ஷேவிங் கிரீமை வைத்துவிட்டுப் பேஸ்ட்டை சுவடு இல்லாமல் நாடு கடத்தியிருந்தார்கள்.

யார் இந்த வேலையைச் செய்திருப்பார்கள் என்று விசாரித்து தான் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற அவசியமில்லாமல் உண்மை புலனானது வந்திதா வுக்கு.

வாயைக் கழுவிக் கொண்டு வெளியே வந்த வந்திதா, உண்மையை உறுதிபடுத்திக் கொள்ள தனக்கு முன்னால்

குளியலறையை யார் உபயோகப்படுத்தினார்கள் எனக் கேட்டாள்.

ஆதிரன், ''நான் தான்'' எனப் புன்னகை மன்னனாக மாறி பதிலளிக்க, ''நீங்க இதை வச்சுத் தான் பல்லைத் தேய்ப்பீங்களா?'' என அவன் முன் ஷேவிங் கிரீமை நீட்டினாள்.

''ஓஹ் மாத்தி எடுத்துட்டேனா. சாரி! நீ ஒண்ணும் இதை வச்சு விளக்கலையே'' எனத் தெரிந்து கொள்வ தற்குக் கேட்க, அவன் ஆர்வமாகக் கேட்கிறான் என நினைத்துக் கொண்டாள் வந்திதா.

முறைப்பைப் பதிலாகப் பெற்றவனுக்கு அதில் பொதிந்திருந்த உண்மையும் விளங்கியது. பேசாமல் சென்று பற்பசையை எடுத்துக் கொடுத்தான்.

ஒரு வழியாகப் பல் துலக்கியவள் குளிக்க ஆயத்த மானாள். வந்திதாவிற்குப் பட்டும் புத்தி வராமல் ஷவரின் கீழே நின்று கொண்டு குழாயைத் திருப்ப, குளிர்ந்த நீர் நேரே அவள் மேனியில் பட்டது.

குழாயை நன்கு திறந்து, சிறிது நேரம் கழித்து வெந்நீர் வந்த பின்பு தான் ஷவரை திறப்பது வழக்கம். குளித்து முடித்ததும் ஷவருக்கு செல்லும் தண்ணீரை நிறுத்தி விடுவதும் வழக்கம். இல்லையெனில் குளிர்ந்த நீர் தான் மேனியில் படும். ஆதிரன் கவனக்குறைவாக அவ்வாறு செய்யாமல் சென்றுவிட்டான்.

வந்திதாவின் மேனியில் குளிர்ந்த நீர் பட்டதும் உள்ளம் எரிந்தது. 'ஆதி! குளிச்சிட்டு வரேன்டா!' எனப் பல்லைக் கடித்துக் கொண்டாள்.

சிகாகோவின் சீதோஷண நிலைக்குக் குளிர்ந்த நீரை நினைத்தாலே உடலும் உள்ளமும் நடுங்கும். இதில் உடல் மீது பட்டால் எப்படி இருக்கும் என்பதை நீங்களே கற்பனை செய்து கொள்ளுங்கள்.



குளித்து முடிக்கும் வரை ஆதிரனுக்கு அர்ச்சனை செய்தவள், குளித்து முடித்து வெளி வந்ததும் அவனைத் தேடிச் சென்று, ''நானும் பொறுமையா இருக்க ட்ரை பண்ணறேன். ஆனா நீங்க ரொம்பவுமே என்னோட பொறுமையை சோதிக்கறீங்க ஆதி!'' என வெடித்தாள்.

இப்பொழுது என்ன என்ற கேள்வியுடன் அவளைப் பார்க்க, ''ஷவரை ஒழுங்கா க்ளோஸ் பண்ணிட்டு வரதுக்கு என்ன?'' என்றாள்.

அவளிடம் மன்னிப்புக் கேட்கவில்லை என்றாலும் பரவாயில்லை, ''ஓஹ்... பச்சைத் தண்ணி மேலே விழுந்திடுச்சா! வெரி ஃபன்னி ஹ ஹ ஹா..'' எனச் சிரித்து வைத்தான் ஆதிரன்.

மேனியில் பட்ட குளிர்ந்த நீரின் குளிர்ச்சியைத் தன் கோபத்தினால் வெப்பமாக்கி, ''ஸ்டாப் இட் ஆதி! யூ ஆர் எ நியூசென்ஸ். உங்களை யாரு இங்க வரச் சொல்லிக் கூப்பிட்டது? தானா வந்ததுமில்லாம இப்படித் தேவை யில்லாம இம்சைப் படுத்தறீங்க'' என சிடுசிடுத்தாள்.

வந்திதாவின் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த நந்திதா, ''வது! என்ன இது.. ஒரு சின்ன விஷயத்துக்குப் போய் இப்படிப் பண்ணற? அவர் நம்ம வீட்டுக்கு வந்த கெஸ்ட். இப்படித் தான் அவரை ட்ரீட் பண்ணறதா?'' எனக் கடிந்து கொண்டாள்.

நந்திதாவிற்கு என்னவென்றால் இப்படித் தன் வீட் டிற்கு வந்த ஒருத்தரைத் தங்கை அவமானப்படுத்துவது தவறு என்று நினைத்தாள்.

அத்தோடு ஆதிரனும் தான் என்ன நினைப்பான்? இப்படிச் சின்ன விஷயத்துக்கு எல்லாம் பொங்கி எழும் இவள் எப்போதும் குடுமிப்பிடிச் சண்டைக்கு அலைவாள் போல எனத் தன் தங்கையைப் பற்றித் தவறாக எண்ணிக் கொண்டால்?

தன் தங்கை அப்படி அல்லவே. அதனால் தான் தங்கையை அதட்டினாள். என்ன தான் நந்திதா தங் கையைக் கடிந்து கொண்டாலும் தங்கையை வேறு ஒரு வரும் குறை சொல்லிவிடக்கூடாது என்பதில் முனைப் பாக இருந்தாள்.

தமக்கையின் காரமான பேச்சில் புரையேற, ''சாரி ஆதி! நான் அப்படிச் சொல்லி இருக்கக் கூடாது'' என் றாள் தங்கை உண்மையை உணர்ந்து தணிந்தவளாக. தமக்கைக்கோ பெருமிதம். அவள் சொல்லித் தங்கை கேட்டுக் கொண்டாளே என்று.

ஆதிரனும், ''ஓஹ்! நானும் கொஞ்சம் ஜாக்கிரதையா இருந்திருக்கணும். இனிமே பார்த்து நடந்துக்கறேன்'' என்று பணிந்து போனான்.

வந்திதாவுக்கு ஆதிரனின் செய்கை வியப்பாக இருந்தது. இவள் எகிறினால் அவனும் எகிறுகிறான். இவள் பணிந்து போனால் அவன் பனித்துளி ஆகி றானே.

'இதைத் தான் பாடற மாட்டைப் பாடிக் கறக்கணும். ஆடற மாட்டை ஆடிக் கறக்கணும்ன்னு சொல்லுவாங் களோ?' என நினைத்தவள், ஆதிரவன் மாட்டுத் தலை யுடன் பாடி, ஆடுவதைப் போல கற்பனை செய்துப் பார்த்தவள், ஒரு முறுவலை வெளியேற்றினாள்.



''என்னன்னு சொன்னா நானும் சிரிப்பேனே'' என்ற ஆதிரனின் குரலால் கற்பனையில் இருந்து வெளிவந் தவள் ஒன்றும் இல்லை எனக் கூறி ஏளன முறுவலுடன் அங்கிருந்து நகர்ந்தாள்.

விஷாக் வீட்டுக்கு சந்திரசேகர் குடும்பம் கிளம்ப ஆயத்தமாக, ஆதிரன் இங்கிதம் அறிந்து வரவில்லை என்று கூறிவிட்டான்.

வந்திதாவும் தான் வருவது நாகரிகமில்லை என ஒதுங்கிக் கொண்டாள். அத்தோடு வந்திதா சிகாகோ நகருக்குத் தன் பிரெண்டைப் பார்க்கப் போக வேண்டும் எனக் கூறினாள்.

வந்திதா நிஷாந்தைத் தான் பார்க்கப் போகிறாள் என்று அறிந்த ஆதிரனுக்கு எரிச்சல் வந்தது. 'உண் மையை எப்படி மறைக்கிறாள் பார் பொய் புளுகினி, பிராட்!' என்று பொருமி முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு, சிறிதும் கஞ்சத்தனம் இல்லாமல் சில பட் டங்களை வாரி வழங்கினான் அந்தப் பாரி வள்ளல்.

முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டிருந்த ஆதிரனை கவனித்த பிரணவ் அவனிடம் விசாரிக்க, அவனுக்கு சிகாகோவைச் சுற்றிப் பார்க்க வேண்டும் என்றும் அதற்காகத் தானே இந்தப் பயணம் மேற்கொண்டதும் எனக் கூறி, தானும் வந்திதாவுடன் செல்ல வேண்டும் என்றான்.

பிரணவ் வந்திதாவிடம் கேட்க, காலையில் அவள் நடந்து கொண்டதற்கு ஈடு செய்யும் விதமாக ஆதி ரனையும் தன்னுடன் அழைத்துச் செலல சம்மதித்தாள்.

வந்திதா - ஆதிரன் இருவரும் கிளம்ப, வந்திதாவுக்கு ஏற்கனவே பழக்கமான ஊர் என்பதால் வழிநெடுக

அவளுக்குத் தெரிந்த அனைத்தையும் ஆதிரனுக்கு விளக்கினாள்.

ஆதிரனும் அதை ரசனையோடு கேட்டுக் கொண்டிருந்தான். சிகாகோ நகரை அடைந்தவுடன் அவள் நிஷாந்தைக் கண்டுபிடித்து அவனிடம் சென்றாள்.

பிரணவின் குடும்பம் செல்லும் விருந்துக்கு இங்கிதம் அறிந்து ஒதுங்கிக் கொண்ட ஆதிரனால் மருந்துக்குக் கூட நிஷாந்த்-வந்திதாவுக்குத் தனித்திருக்க இடம் கொடுத்து ஒதுங்க முடியவில்லை. அவர்களுக்கு இடையில் சட்டமாக அமர்ந்திருந்தான்.

ஆதிரனின் செய்கையில் மனம் புழுங்கிய நிஷாந்த், 'இவனுக்குப் போய் தேங்க்ஸ் சொன்னோமே. இப்படி ரெண்டு பேருக்கு நடுவுல நான்-ஸ்டாப் ட்ரெயின் ஓட விட்டுட்டு இருக்கானே. இவனுக்கு லவ் லைஃப் நல்லாவே அமையக்கூடாது' என மானசீகமாக ஆதிரனுக்கு சாபமிட்டுக் கொண்டிருந்தான்.

ஒரு வழியாக வந்திதாவே நிஷாந்தின் நிலைமையைப் புரிந்து, ஆதிரனிடம் தங்களுக்குச் சிறிது தனிமை வேண்டும் எனக் கூறினாள்.

''பசங்க தான் பிகரைப் பார்த்தா பிரெண்ட்ஸைக் கழட்டி விடுவாங்க. இங்க எல்லாமே தலைகீழா இருக்கு'' எனப் புலம்பி, அவனை அவள் நட்பு வலையில் இணைத்துக் கொண்டான் ஆதிரன்.

''பிரெண்டைப் பார்க்கப் போறதா சொன்னனா இல்லையா? நீங்க தான் வம்படியா என்னோட வர்றதா ஒத்தைக் கால்ல நின்னீங்க. இப்பவும் அதே மாதிரி ஒத்தைக் கால்ல நின்னுட்டு இருங்க. நான் அவரோட பேசிட்டுச் சீக்கிரமா வரேன்'' என நிஷாந்திடம் பேசச் சென்றாள்.



அவள் சென்ற பின் முகத்தை உர்ரென்று வைத்துக் கொண்டிருந்தான் ஆதிரன். கால்கள் அங்கும் இங்கும் நடந்தாலும், கைகள் கைப்பேசியைக் குடைந்தாலும், செவிகள் எதையெதையோ கேட்டாலும் கண்கள் மட்டும் ஒரே இடத்தில் நிலைத்திருந்தன. வேறு எங்கே? எல்லாம் வந்திதா-நிஷாந்தின் மேல் தான்.

மேகமூட்டத்தைப் பார்த்து மழை வருமா வராதா என வானிலை நிபுணர்கள் துல்லியமாகக் கணிப்பதைப் போல அவர்களின் முக பாவங்களை வைத்து அவர்கள் சந்தோஷமாக இருக்கிறார்களா இல்லையா என கணிக்க முயன்றான் ஆதிரன்!

'வந்திதா யாரைக் கல்யாணம் செய்து கொண்டால் என்ன. நாம் ஏன் இத்தனை மெனக் கெடுகிறோம்?' என அவன் மனம் கேள்வி கேள்வியாய்க் கேட்டது.

நிஷாந்தின் பெற்றோர்களைச் சுத்தமாக ஆதிரனுக்குப் பிடிக்கவில்லை. தனக்குத் தெரிந்த பெண்ணான வந்திதா அவர்களிடம் மாட்டிக் கொள்ளக் கூடாது என்ற நல்ல எண்ணத்தில் தான் இப்படி அல்லாடுவதாக அவன் மனம் கேட்ட கேள்விக்கு அதே மனம் தயாராக ஒரு பதிலையும் தயாரித்தது.

''என்னோட அம்மா-அப்பா அப்படிப் பேசினதுக்காக நான் உங்ககிட்டே மன்னிப்புக் கேட்டுக்கிறேன் வந்திதா! அவங்க ஏதோ தெரியாம சொல்லிட்டாங்க. எனக்கு உங்க சம்மதம் தான் முக்கியம்'' என நிஷாந்த் வந்திதாவிடம் மன்னிப்புக் கோரினான்.

''நான் அதை நேத்தே மறந்துட்டேன் நிஷாந்த். எனக்கு ஒரு வருத்தமும் இல்லை. அவங்களோட கருத்தைப் பகிர்ந்துகிட்டாங்க. உங்க அம்மா - அப்பாவைக் பகைச்சுக்கிட்டு எல்லாம் எதுவும் பண்ணிடாதீங்க. பெத்தவங்க அருமை இல்லாதவங்களுக்குத் தான் புரியும்.

எனக்கு அது ரொம்பவுமே நல்லா தெரியும். அவங்க உங்க அம்மா-அப்பா நிஷாந்த். உங்க நல்லதுக்குத் தான் சொல்வாங்க. அவங்க என்னைப் பெத்தவங்க இல்லையே அதனால என்னோட நலனைப் பத்தி யோசிக்க மாட்டாங்க'' என்றாள் வந்திதா.

''வந்திதா! அவங்களுக்கு நான் இங்க இருக்கணும்ன்னு தான் ஆசை. அதனால கல்யாணம் முடிஞ்சு கொஞ்ச நாள் இங்க இருந்துட்டு அப்புறம் இந்தியாக்குப் போயிடலாம். அவங்களையும் கன்வின்ஸ் பண்ணின மாதிரி ஆச்சு... உனக்கும் இந்தியா போன மாதிரி ஆச்சு. ப்ளீஸ் வந்திதா! சம்மதம் சொல்லு'' என உருகி வழிந்து ஒரு யோசனையைச் சொன்னான்.

மேலும் சற்று நேரம் நிஷாந்துடன் பேசித் தன் முடிவை தெரிவித்துவிட்டு ஆதிரனிடம் வந்தாள். அவள் வருவதற்காகக் காத்திருந்ததை அவள் அறிந்துவிடக் கூடாது என முடிவு செய்து அத்தனை நேரம் அங்கும் இங்கும் அலையாமல் வைத்திருந்தப் பார்வையை இப்போது ஒலிம்பிக்ஸில் ஓடுவதைப் போல ஓடவிட்டான் ஆதிரன்.

வந்திதா அருகில் வந்தவுடன் ஆச்சர்யத்தை முகத்தில் தேக்கி வைத்துக் கொண்டு, ''இவ்வளவு சீக்கிரம்



வந்துட்ட. பேசி முடிச்சாச்சா உன்னோட புது பிரெண்ட் கிட்டே'' என்றான், உலகத்தில் உள்ள சிறந்த நடிகர்கள் எல்லோரையும் தோற்கடிப்பதைப் போல.

''ஆதி! நான் போய் ஒரு மணி நேரத்துக்கு மேலே ஆச்சு. போர் அடிச்சதா? என்ன பண்ணிட்டு இருந்தீங்க?'' என்றாள் அக்கறையுடன் வந்திதா.

அவள் கேட்டதற்காக அவன் செய்ததைக் கூற முடியுமா என்ன? ஏதேதோ கதை அளந்து கொண்டிருந்தான் ஆதிரன். அவன் அளந்த கதையை உண்மை என நம்பி திருப்தியுற்ற வந்திதா, ''சாரி ஆதி! தவிர்க்க முடியலை'' என்றாள்.

''இட்ஸ் ஓ.கே'' எனப் பெரிய மனதுடன் அவள் மன்னிப்பை ஏற்றுக் கொண்டவன், கேட்க வேண்டிய விஷயத்தைப் போனால் போகிறது என்கிற ரீதியில் கேட்டான். ''சரி! என்ன சொன்னார் உன்னோட அவர்?''

''என்னோட அவரா? சும்மா பிரெண்ட்லியா பேசினாலே இப்படித் தான் நினைப்பீங்களா ஆதி?'' எனக் கண்டனக் குரலில் கேட்க, ''நிஷாந்த் உருகின உருகல் எனக்குத் தெரியாதுன்னு நினைச்சியா? சும்மா கதை விடாதே'' என்றான்.

''எனக்கு நிஷாந்தைப் பார்த்தா எந்த கெமிஸ்ட்ரியும் வேலை செய்யலை. அதனால வேற பொண்ணைப் பார்த்துக்கச் சொல்லிட்டேன். கடைசி வரைக்கும் நாங்க பிரெண்ட்ஸா இருப்போம்'' என்றவளின் பேச்சில் நிம்மதியுற்றான் ஆதிரன்.

''அடடா! கணக்குப் பண்ண நினைச்ச கணக்கு வாத்தியார் நிஷாந்துகிட்டே போய் கெமிஸ்ட்ரி வேலை

செய்யலைன்னு சொல்லறியே. டூ பாட்'' என மனதி லிருந்த நிம்மதியை முகத்தில் பிரதிபலிக்காமல் தன் இயல்பு நிலைக்குத் தாவி கிண்டலடித்தான்.

மனமோ, 'அப்பாடா! நல்லவேளை நிஷாந்தோட அம்மா - அப்பாகிட்டே இருந்து தப்பிச்சிட்டா' என ஆசுவாசமடைந்தது.

ஏனெனில், நிஷாந்தின் அன்னை மங்கை நேற்று விழாவுக்கு வந்தவர்களிடம் எல்லாம் 'அந்தப் பொண் ணுக்கு அம்மா-அப்பா இல்லாட்டியும் திமிர் ரொம்பத் தான் ஜாஸ்தி. என்னையே எடுத்தெறிந்து பேசினான்னா பார்த்துக்கோங்க.

இப்போது புரியுது, கடவுள் ஆட்டுக்கு வாலை ஏன் அளந்து வச்சிருக்கான்' என டமாரம் அடிக்காத குறை யாகத் தம்பட்டம் அடித்துக் கொண்டிருந்தார். பேச்சு வாக்கில் ஆதிரனின் செவிகளிலும் இவை விழுந்தன. அதனால் தான் வந்திதாவின் பதிலில் நிம்மதியடைந் தான்.

''வந்து-தா! உன்னைக் கல்யாணம் பண்ணிக்கப் போறவர் பத்தின கற்பனை ஏதாவது இருக்கா?'' என்றான் திடீரென்று.

''அப்படிப் பெருசா ஒண்ணும் இல்லை ஆதி. நல்ல பெரிய குடும்பத்தில இருந்து வரணும். என்னையும் அவங்க குடும்பத்துல ஒருத்தரா நினைச்சு சொட்ட சொட்ட அன்பைப் பொழியணும். ஆள் கொஞ்சம் கல கலப்பா இருக்கணும்...'' என அவள் மேலும் தொடரும் முன்னர்,

''அதாவது என்னை மாதிரி கலகலப்பான்னு சொல்லு'' என இடையிட்டான்.



''நான் இன்னும் முடிக்கலை ஆதி! என்னைச் சீண்டலாம். ஆனா மத்தவங்க முன்னாடி சீண்டக்கூடாது. என்னோட சண்டை போடலாம். ஆனா, மத்தவங்ககிட்டே விட்டுக் கொடுக்கக் கூடாது.

நிஷாந்தைப் பார்த்துப் பழகினதுல கொஞ்சம் கல கலகலப்பானவராத்தான் தெரியுது. ஆனா, எனக்கு இது சரி வரும்ன்னு தோணலை'' என முடிக்காமல் வந்திதா இழுக்க,

''சரி! சிகாகோவை சுத்திக் காட்டறேன்னு சொல் லிட்டு இப்படியே மசமசன்னு நின்னுட்டு இருந்தா எப்படி? முதல்ல போய் சாப்பிடலாம். அப்புறம் போய் சுத்தலாம்'' என ஆதிரன் அவளை முடுக்கி, நிஷாந்தின் அத்தியாயத்துக்கு முற்றுப்புள்ளி வைத்தான். அப்படித் தான் நினைத்தான்.

மதிய உணவை முடித்துக் கொண்டபின் வந்திதா சிகாகோவில் உள்ள இடங்களை ஆதிரனுக்குச் சுற்றிக் காண்பித்தாள்.

முதலில் அவர்கள் சென்றது மில்லேனியம் பார்க்! இங்கு க்ரௌன் பௌண்டைன் என்றழைக்கப்படும் நீரூற்று இருந்தது. அதில் சிகாகோவில் உள்ள சராசரி மனிதர்களின் முகங்கள் மாறி மாறி பெரிய திரையில் மற்றவர்களின் பார்வைக்குக் காட்சியளித்தது. அந்த முகங்களின் வாயில் இருந்து நீர் வெளியேறுவதைப் போல வடிவமைத்திருந்த நீரூற்று ரசிக்கத்தக்கதாக இருந்தது.

தண்ணீரைப் பார்த்தால் எந்தக் குழந்தைக்குத் தான் ஆசை வராது. அந்த நீரூற்றில் இருந்து வாய் வழியே

வெளியேறும் தண்ணீரில் நனைந்து குதுகலித்துக் கொண்டிருந்தனர் பல குழந்தைகள். அதை ரசித்த வண்ணம் அங்கிருந்த க்லௌட் கேட் (cloud gate) என்று அழைக்கப்படும் சிற்பத்தைப் பார்க்கச் சென்றனர்.

அவரைக் கொட்டை வடிவத்தில் அமைந்திருந்த இந்தச் சிற்பம் அனீஸ் கபூர் என்ற இந்திய வம்சா வழியில் வந்த இங்கிலாந்து கலைஞரால் வடிவமைக்கப் பட்டது. இந்தச் சிற்பத்தில் வானம் மற்றும் சிகாகோ நகரின் கட்டடங்கள் அனைத்தும் கண்ணாடி போல பிரதிபலிக்கும். பார்ப்பதற்கு அரிய காட்சியைப் படம் பிடித்துக் காட்டிக் கொண்டு சாது போல நின்றிருந்தது அந்தச் சிற்பம்.

பாதரசத்தை மனதில் கொண்டு வடிவமைக்கப்பட்ட தினால் அதே வண்ணத்துடன் உருண்டு திரண்டு நின்று கொண்டிருந்தது. ஆதிரன் அதைப் பார்த்து வியந்தவாறே பலப் புகைப்படங்களை எடுத்துத் தள்ளினான்.

அங்கிருந்து இரண்டரை ஏக்கரில் அமைந்த லூரிப் பூங்காவில் இருவரும் நடந்தவாறே நேரம் ஆவதை அறியாமல் பேசிக் கொண்டிருந்தனர்.

வந்திதாவும் ஆதிரனும் இவ்வாறு தனித்திருப்பது இதுவே முதல் தடவை. விமானத்தில் இருவரும் அரு கருகே அமர்ந்திருந்தார்கள் தான். ஆனால் அப்பொழுது இருவருக்கும் ஒருவரைப் பற்றி மற்றவருக்குத் தெரி யாது.

இப்பொழுது நிலைமையே வேறு. வந்திதா சில நாட்களாக ஆதிரனுடன் நீண்ட நேரம் செலவழிப்பதால் ஆதிரன் இப்படித் தான் என ஓரளவுக்குத் தெரிந்து



கொண்டாள். அதனால் தான் அவனின் சீண்டல் முன் போல அடிக்கடி அவளைக் கோபம் கொள்ள வைக்க வில்லை.

அதுமட்டுமல்லாது காலையில் நடந்து கொண்ட தற்குப் பரிகாரமாக வந்திதா ஆதிரனுடன் நன்றாகவே பேசினாள்.

ஆதிரனும் வந்திதாவின் குணத்தைப் பற்றி ஓரள வுக்குப் புரிந்து கொண்டான். அத்தோடு நிஷாந்தை மறக்கடிக்க நல்ல விதமாகவே நடந்து கொண்டான்.

வந்திதாவுக்குப் பிடித்த விஷயங்கள் படிப்பு, விளை யாட்டு, பொழுதுபோக்கு, உணவு என ஆதிரன் அறிந்து கொள்ள, அவனுக்குப் பிடித்த விஷயங்களைப் பற்றி அவள் தெரிந்து கொண்டாள்.

இருவருக்கும் ஒரு சிலதைத் தவிர மற்ற அனைத் திலும் வெவ்வேறு ரசனைகள் இருப்பதை இருவரும் உணர்ந்து கொண்டார்கள்.

இருவரும் பேசிக் கொண்டே உயரமான கட்டிடமாகத் திகழும் வில்லிஸ் டவரின் அருகே வந்தார்கள். நூற்றி யெட்டு தளங்கள் கொண்ட அந்தக் கட்டிடம் தான் அமெரிக்காவிலேயே உயர்ந்து நிற்கும் கட்டிடம்.

அதைப் பற்றி விளக்கி விட்டு, ''நீங்க வேணா உள்ளே போய் பார்த்துட்டு வாங்க ஆதி. நான் இங்கே இருக்கிற காபி ஷாப்ல வெயிட் பண்ணறேன்'' என்றாள் வந்திதா.

''ஏன் வந்து-தா! நீயும் வா'' என அவளை அழைக்க, வர முடியாது என மறுத்தாள். அப்பொழுது தான் அவளுக்கு உயரத்தைக் கண்டு பயம் என்பதை உணர்ந்து.

''வந்து-தா நீ என்ன தெனாலி கமலஹாசனா? எல்லாத்துக்கும் இப்படி பயப்படற. மலை மேலே ஏற பயம்... ஒத்துக்கறேன். அங்கு நீ விழுந்தா உன்னைத் தாங்கிப் பிடிக்க நாலு பக்கமும் சுவர் இல்லை. ஆனா இங்க தான் நாலு பக்கமும் சுவர் இருக்கே. வெளிலே எட்டிப் பார்க்காம வந்துடு'' என்றான்.

வந்திதா அதற்கு மசியாமல் போக, ''நான் தெரியாமத் தான் கேட்கிறேன். நீ நியூயார்க்ல வேலைக்குப் போற ஆபீஸ் எத்தனையாவது ப்ளோர்ல இருக்குது?'' எனக் கேட்டான்.

''பத்தாவது.''

''பத்தாவதைத் தாண்ட மாட்டேன்னு அடம்பிடிக் கிறியே. நீ என்ன மக்கா?'' என அவளை வம்புக்கு இழுக்க, வந்திதா அவனின் கேலியில் இதழ் விரித்தாள்.

''அது இவ்வளவு பெரிய பில்டிங் இல்லை. இங்க நீங்கப் போகப் போறது நூத்தி மூணாவது ஃப்ளோர்...'' என்றாள்.

''ப்பூ... இவ்வளவு தானா?'' என்றவன், ''உனக்கு ஏன் உயரத்தைப் பார்த்தா பயமா இருக்கு? உனக்கு அக்ரோ போபியாவா? (உயரத்தைக் கண்டு பயம்)'' எனக் கேட் டான்.

''எனக்குத் தெரியலை ஆதி! அப்பா-அம்மா இது மாதிரி ஒரு பில்டிங்ல தானே வேலை செஞ்சாங்க. உயர மான பில்டிங்கா இருந்ததுனால தானே அவங்களால தப்பிக்க முடியலை. அப்போ இருந்து தான் உயரத்தை நினைச்சா, பயந்து நெர்வஸ் ஆயிடறேன்'' என்றாள் கலக்கத்துடன் வந்திதா.



'ஓஹ்... இவ மனசளவுல பாதிக்கப்பட்டிருக்கா. கொஞ்சம் கொஞ்சமா தான் மாத்தணும்' என எண்ணி யவன்,

''வந்து-தா! 'சந்தோசம் சந்தோஷம் வாழ்க்கையின் பாதி பலம்' என்கிற பாட்டை கேட்டிருக்க தானே? எப் போதும் சந்தோஷமாவே இரு வந்திதா. முடிஞ்சவரைக் கும் உன்னோட மனசை உற்சாகமா வச்சுக்க முயற்சி செய்.

தொலைஞ்சதை நினைச்சுக் கஷ்டப்படறதை விட இருக்கிறதைத் தொலைக்காம வச்சு சந்தோசப்படு. உனக் காக நாங்க (?!) எல்லாம் இல்லையா? அப்படி இருந்தா தனிமையை உணர மாட்டே. அதே மாதிரி இவ்வளவு சென்சிடிவா இருக்கவும் மாட்ட.

மரணம் வாழ்க்கையில தவிர்க்க முடியாதது. அதைப் பத்தியே நினைச்சுக் கவலைப்பட்டுட்டு இருந்தா என்ன ஆகப்போகுது? உன்னால அதைத் தடுக்க முடியுமா இல்லை இறந்தவங்களைத் திருப்பித் தான் கொண்டு வர முடியுமா சொல்லு?'' என அர்த்தமுள்ளதாக நீள மாகப் பேசினான் ஆதிரன்.

''ட்ரை பண்ணறேன் ஆதி!'' எனச் சொன்னவளிடம், ''சரி! இப்போ இருந்தே அதை ஆரம்பிக்கலாம் வா!'' என அவளை இழுத்துக் கொண்டு அந்தக் கட்டடத்தின் உள்ளே கால் பதித்தான்.

உள்ளே சென்றவனுக்கு நிலை கொள்ளவில்லை. அவன் சொல்லி வந்திதா கேட்டுக் கொண்டாளே என மேலே பறக்க ஆரம்பித்தான். நிஜம் தான்! அதிவேக மான எலிவேட்டரில் (மின்தூக்கி) மேலே சென்று கொண் டிருந்தான்.

அதன்பின்னர் வந்திதா மிரட்சியுடன் பேசுவதையே பார்த்துக் கொண்டிருந்தவனுக்கு அவள் பேசியது எதுவும் காதில் ஏறவில்லை. அவளின் உதட்டசைவில் அவள் உதட்டின் நீளத்தையும் உதட்டில் உள்ள வரிகளின் ஆழத்தையும் அளந்து கொண்டிருந்தான்.

வந்திதா அவனை உலுக்கியப் பின்னர் தான் சுய நினைவுக்கு வந்து, 'ச்சே என்ன நினைப்பு இது! எல்லாம் அந்த நிஷாந்த் படுபாவி பண்ணினது. சும்மா இல்லாம என்னோட மனசைக் கலைச்சிட்டுப் போயிட்டான்' என நிஷாந்தை வேறு நன்கு வைதான்.

என்ன அநியாயம்டா இது? இவனோட தாறுமாறான எண்ண ஓட்டத்துக்கு நிஷாந்த் காரணமாம்! சரிதான். அவர்கள் இப்படித் தான் தங்கள் பதினாலாவது நாளைக் கழித்தனர்.

---

**நியூயார்க்....**

**இலக்கு: 408 மைல்கள்...**

**நயகரா பால்ஸ்! (niagara falls)**

---

மறுநாள்! நியூயார்க்கில் வேலை இருப்பதாகக் கூறி அவர்களுடன் மேலும் ஒருவர் கூட்டணி அமைத்துக் கொண்டார். அவர் தான் சாதனாவைக் கைபிடிக்கப் போகும் விஷாக்.

நந்திதாவின் குடும்பத்தாரிடம் விடைபெற்றுக் கொண்டு அனைவரும் சிகாகோவிலிருந்து கிளம்பி நயகரா வந்தடைந்தனர். விடுதி அறையில் பெரியவர்கள் 



அடைய, இளையவர்கள் சாப்பிடக் கிளம்பினர். அப்படிக் கிடைத்த தனிமையில் விஷாக் நிஷாந்தைப் பற்றி வந்திதாவிடம் பேசினான்.

''வந்திதா! நிஷாந்த் என்கிட்டே எல்லாம் சொன்னான். என்னோட சித்தி-சித்தப்பா கொஞ்சம் அப்படி இப்படின்னு இருந்தாலும் நிஷாந்த் ரொம்ப நல்லவன். என்னோட சித்திப் பையன் என்கிறதுனால நான் சொல்லலை. ஒரு நல்ல பிரெண்டா சொல்லறேன்.

அவன் என்னை விட ரொம்பவுமே நல்லவன். அவனுக்காகக் கொஞ்சம் கன்சிடர் பண்ணுங்களேன், ப்ளீஸ்!'' என ஒரு வேண்டுகோளை வந்திதாவின் முன் வைத்தான்.

அதைக் கேட்டுக் கொண்டிருந்த ஆதிரனுக்கோ பகீரென்றது. 'என்னடா இது. நிஷாந்துக்குத் தான் 'முற்றும்' போட்டாச்சே. இவன் என்னடான்னா மறுபடியும் பிள்ளையார் சுழி போடறானே' எனக் குழம்பினான்.

வந்திதா சொல்லும் பதிலுக்காக ஆவலுடன் அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். விஷாக் அல்ல. ஆதிரன்!

''அவர் கூட பேசினதுல இருந்தே எனக்கு அது புரிஞ்சிடுச்சு அவர் எவ்வளவு நல்லவர்ன்னு. ஆனா, எனக்கு அவர் மேலே அப்படி ஒரு எண்ணம் வரலையே'' என்றாள்.

''எனக்குத் தெரியும் நீங்க என்னோட சித்தி - சித்தப்பாக்காகத் தயங்குறீங்கன்னு. என்னோட அப்பா சொன்னா அவங்க கண்டிப்பா கேட்டுக்குவாங்க'' என்றான் விஷாக். வந்திதாவை சம்மதிக்க வைக்கும் முயற்சியுடன்.

ஒரு முறுவலுடன் இவனுக்கு என்ன சொல்லிப் புரிய வைப்பது என வந்திதா யோசித்துக் கொண்டிருந்தாள்.

அதைப் பார்த்த ஆதிரன், ''ஏன் வந்திதா உனக்குப் பிடிச்ச ஹீரோ யாரு?'' என்றான் பேச்சின் திசையைத் திருப்பும் முயற்சியாக. அதாவது அவன் வந்திதாவை பதில் சொல்வதில் இருந்து காக்கிறானாம்!

'லூசா நீ?' என்ற விஷாக்கின் பார்வையை லூசில் விட்டவன், ''சொல்லு வந்து-தா உனக்கு சூர்யாவைத் தானே பிடிக்கும்'' என்றான்.

ஏற்கனவே விடை தெரிந்த கேள்விக்கு அவளிடம் இருந்து வரும் விடையை சரி பார்த்துக் கொள்ள அவன் என்ன பரீட்சையா வைக்கிறான்?

வந்திதாவும் கிடைத்தது வழி என்று நிஷாந்தைப் பற்றி மறந்துவிட்டு சூர்யாவைப் பற்றி பேச ஆரம்பித்து விட்டாள்.

அடுத்துக் கிடைத்த சந்தர்ப்பத்திலும் விஷாக் நிஷாந்தைப் பற்றிப் பேச ஆரம்பிக்க, ''வந்து-தா! உனக்குப் பிடிச்ச மியூசிக் டைரக்டர் யாரு? இளையராஜா தானே?'' என்றான் அடுத்த கேள்வியும் பதிலுமாக.

'இவன் என்ன சினிமாவா எடுக்கப் போகிறான்?' என விஷாக் பல்லைக் கடித்துக் கொண்டான்.

அடுத்த முயற்சியில், ''உன்னோட போட்டோஸ் எல்லாம் புக்கா வெளியிடறதுக்கு, எல்லா போட்டோஸும் செலக்ட் பண்ணிட்டியா?'' எனக் கேட்டான் ஆதிரன்.

கடந்த பத்து நாட்களாக கூடவே பயணித்துக் கொண்டிருப்பவளுக்கு அதைச் செய்ய நேரம் கிடைத்திருக்காது என ஆதிரனுக்குத் தெரியாமலா இருந்திருக்கும்?



வந்திதாவும் தப்பித்தால் போதும் என்று அவளும் அதைப் பற்றி பேச ஆரம்பித்துவிட்டாள். அடுத்தடுத்து இது தொடரவே விஷாக்கிற்கு ஆதிரன் மேல் எரிச்சல் வந்தது.

பின்னே தன் சித்திப் பையன், அதுவும் நண்பனாக இருக்கும் நிஷாந்துக்கு உதவ நினைத்தால் ஆதிரன் நந்தி போல நடுவுல உட்கார்ந்து ரகளை பண்ணினால் எரிச்சல் வரத்தானே செய்யும்.

அடுத்த முறை ஆதிரன் இல்லாத பொழுது நிஷாந்தைப் பற்றி விஷாக் பேச, அதற்குள் வந்திதா அவனுக்குப் புண்படாதவாறு எவ்வாறு விளக்கம் சொல்ல வேண்டும் என ஒருவாறு யோசித்து வைத்திருந்தாள்.

ஏனெனில், தன் தோழி சாதனாவைக் கைப்பிடிக்கப் போகும் விஷாக்கை இனி வாழ்க்கை முழுக்கப் பார்க்கவும் பேசவும் வேண்டும் அல்லவா? முகத்தில் அடித்த மாதிரி எதுவும் சொல்லிவிடக் கூடாதே!

வந்திதா விஷாக்கிடம் மிகவும் தன்மையாகத் தன் ஆசைகளைப் பற்றியும் இந்தியா போக வேண்டும் என்பதைப் பற்றியும் கூறினாள். பின்னர் நிஷாந்தின் மேல் அப்படி ஒரு எண்ணம் தனக்கு வரவில்லை என்பதை நன்கு தேர்ந்தெடுத்த வார்த்தைகளில் வலியுறுத்திச் சொல்லி அதற்கு முற்றுப்புள்ளி வைத்தாள்.

* * *

மறுநாள்! விடுதி அறையில், அதிகாலையில் உறக்கம் வராமல் புரண்டுப் புரண்டு படுத்த ஆதிரன், அருகில்

படுத்திருந்த பிரணவின் தூக்கத்தையும் சேர்த்துக் கெடுத்துக் கொண்டிருக்க மனமில்லாமல் மெல்ல எழுந்து ஓசைப்படாமல் வெளியில் சென்றான்.

சற்று தூரம் நடந்து சென்றவன் அதற்கு மேல் நடக்க மனமில்லாமல் அருகில் இருந்த காபி கடைக்குள் நுழைந்து காபியை வாங்கிப் பருகியவாறு அமர்ந்திருந் தான். தன் கைப்பேசியை சிறிது நேரம் ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தவன் அதற்கு மேல் அங்கும் அமர இய லாமல் அறைக்குத் திரும்பினான்.

திரும்பும் வழியிலும், எண்ண வலைக்குள் விழுந்து வெளிவர முடியாமல் எதைப் பற்றியோ படு தீவிரமாக எண்ணிக் கொண்டிருந்தான். அறைக்கு வந்த பின்னரும் பிரணவ் கேட்ட கேள்விகளுக்கு வேற்று கிரகவாசியைப் பார்ப்பது போல அவனைப் பார்த்து மலங்க மலங்க விழித்துவிட்டுக் குளிக்கச் சென்றான்.

ஆதிரனின் செய்கையைப் பார்த்த பிரணவ் இவ னுக்கு என்ன ஆச்சு என அவன் பங்குக்கு விழித்தான்.

சற்று நேரம் ஆதிரனைக் கவனித்துக் கொண்டிருந்த பிரணவுக்குக் கூட கவலையாகிவிட்டது. ஒருவேளை தாங்கள் திரும்பிப் போவதற்கு இப்படிக் கவலைப்படு கிறானோ என ஒரு காரணத்தை ஊகித்தான்.

ஏனெனில், ஆதிரன் இந்தப் பயணம் முடிந்ததும் நியூ ஜெர்சி சென்று வீடு பார்த்துவிட்டு, இன்னும் இரண்டு வாரங்களில் மீண்டும் திரும்பி வந்து புதுப் பணி யில் சேர முடிவு செய்திருந்தான். இதைப் பற்றி அவ னிடம் கேட்க வேண்டும் என எண்ணிக்கொண்டான் பிரணவ்.



அவர்கள் அனைவரும் புறப்பட்டு நயகரா பால்ஸ் சென்றடையக் காத்திருந்ததைப் போல பிரணவின் கைப்பேசி இசைத்தது. அதை எடுத்துப் பேசிய பிரணவ் மிக முக்கியமான ஒரு வேலையை அவசரமாகக் கவனிக்க வேண்டியிருப்பதால் மற்றவர்களை மட்டும் சுற்றிப் பார்த்துவிட்டு வருமாறு கூறினான்.

அவர்கள் பதிலைக் கூட எதிர்பார்க்காமல் அங்கிருந்த பெஞ்சில் அமர்ந்து கொண்டு மேற்படி பேச்சைத் தொடர்ந்தான்.

சந்திரசேகரும் அவருடைய மனைவியும் எதிர்பாராத விதமாக நெடுநாளைய நண்பர் குடும்பம் ஒன்றைச் சந் தித்ததால் அவர்களுடன் சிறிது நேரம் கழிக்க வேண்டிய தாயிற்று.

இன்னும் சில மாதங்களில் திருமணம் செய்து கொள்ளப் போகும் சாதனா-விஷாக்கிற்குப் பேசுவதற்கு கோடி விஷயங்கள் இருக்க, அதனால் சுதந்திரப் பறவை களாகத் தனியே நழுவிச் சென்றனர்.

மீதம் இருந்த ஆதிரனும் வந்திதாவும் மட்டும் நீர்வீழ்ச்சியின் அழகை ரசிக்கச் சென்றனர்!

அன்றைக்குக் காலையில் மிக உற்சாகமாக எழுந்து வெளியில் சென்று காபி அருந்திய ஆதிரனுக்குத் தன் கைப்பேசியில் ஒரு மின்னஞ்சல் வந்திருந்தது. அவனுக் குப் பார்த்த ஒரு பெண்ணின் புகைப்படத்தை அவன் சின்ன அண்ணன் அனுப்பி இருந்தான்.

சுவாரசியமில்லாமல் திறந்து பார்த்தவனுக்கு ஆனந்த அதிர்ச்சியாக இருந்தது. அதில் ஆதிரன் சில தினங் களுக்கு முன்னால் வர்ணித்த, 'மீன் மாதிரி கண்கள்,

சிப்பி மாதிரி இமைகள், பிறை மாதிரி புருவங்கள், பார்க்கப் பார்க்கத் தூண்டும் கன்னத்துக் குழி...' ஆகிய வற்றுக்குச் சொந்தக்காரியான, இவன் அடிக்கடி சீண்டும், இன்னும் சீண்டிக் கொண்டிருக்கும் அதே வந்திதாவே தான் புன்னகைத்துக் கொண்டிருந்தாள்!

'இல்லை... இல்லை.. அவளையே தினம் பார்த்துக் கொண்டிருப்பதால் அப்படித் தெரிகிறதோ' எனக் கண்களைக் கசக்கி, தன் தலையை பலமாகக் குலுக்கிக் கொண்டு, மீண்டும், மீண்டும், மீண்டும் கண்களைச் சிமிட்டிச் சிமிட்டிப் பார்த்தான்.

வந்திதாவோ நான் அவ்வளவு சீக்கிரம் மறைவதற்குக் காலையில் அவசரமாக வாசலில் போட்ட கோலமா என்ற கேள்வியுடனும் அதே வசீகரப் புன்னகையுடனும் கைப்பேசியிலிருந்த வண்ணம் இவனைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

பழம் நழுவி தேனில் விழுந்து அதுவும் நேராக அவன் மனதில் விழுந்ததைப் போல உடலெல்லாம் இனித்தது அவனுக்கு. ஒருவேளை, அவள் கன்னத்துக் குழியில் தான் தடுக்கித் தலைகுப்புற விழுந்துவிட்டானோ?

இது நிஜமா? நிஜமாக இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என மனதின் ஓரத்தில் நினைத்துக் கொண் டிருந்த அவனது மரமண்டைக்கு அப்போது தான் புரிந்தது. அவனுக்கு வந்திதாவை மிகவும் பிடித்திருப் பது.

அவனுக்கு வந்திதாவைத் திருமணம் செய்து கொள்ள இருந்த ஆவலையும், வந்திதாவைத் தவிர வேறு ஒரு வராலும் அவன் வாழ்க்கையை இனிக்க வைக்க



முடியாது என்ற தாக்கத்தையும் அப்பொழுது தான் முழுமையாக உணர்ந்தான்.

அதனால் தானோ நிஷாந்த் வந்திதாவுடன் நெருக்க மாகப் பழகவும் அவன் பால் கோபமும் சுரந்தது? இருக் கலாம்! தன் உடைமையை வேறு ஒருவர் கைப்பற்ற நினைத்ததால் தன் இதய அறைகளின் சுவர்களும் அதிர்ந்தனவே! அது இப்போ தானே புரிகிறது.

'ஆனால் சில நாட்களுக்கு முன்னர் கூட பிரணவுக்கு அவளைத் திருமணம் செய்யப் பேசிக் கொண்டார்களே.. அப்போது என் மனநிலை வேறு மாதிரி அல்லவா இருந்தது.

இந்தப் பத்து நாட்களுக்குள் எனக்குப் புத்தி ஏதேனும் பிசகி விட்டதா என்ன?' என்ற கேள்விக்கு ஆம் என்றது ஆதிரனின் மனது. இந்தப் பயணம், முற்றிலுமே அவனை அவள் பால் சரித்துவிட்டது. அவன் மனதை மொத்தமாகச் சுருட்டிச் சுறையாடித் தன் வசப்படுத்தி விட்டாள் அந்தக் கள்ளி.

அவளின் அழகு காரணமா? என்ற கேள்விக்கு, அவளை இரண்டு வருடங்களாகப் பார்த்துக் கொண் டிருக்கிறேனே. அப்படி அழகு காரணம் என்றால் பார்த்தவுடனே கவுந்திருப்பேனே என்று பதில் தந்தது மனது.

ஒருவேளை அவளின் சிணுங்கல் காரணமா? என்ற வினாவுக்கு, அதையும் தானே பார்த்ததிலிருந்து செய்து கொண்டிருக்கிறாள். இப்போது புதிதாக என்ன வந்து விட்டது என டக்கென்று முதல் மாணவனாய் விடை சொன்னது மனது.

அவள் மேல் பரிதாபமா? எனக் கேள்வி கேட்கும் முன்னரே, அப்படி இருந்திருந்தால் வந்திதாவின் தனிமையைப் பற்றி தெரிந்தவுடனே அவள் மேல் அன்பை பொழிந்திருப்பேனே என்ற விடையும் கூடவே வந்தது.

அவள் தொட்டத்துக்கெல்லாம் பயப்படும் குணத்தாலா அல்லது என் மேல் கோபத்தை அள்ளித் தெளிப்பதாலா? என்று கேட்டு, இல்லையே, அதனால் எரிச்சல் தானே வந்தது என்று பலமாகத் தலையைக் குலுக்கியது.

அவளின் குணத்தால் கவர்ந்திழுத்திருப்பாளோ? என்ற வினாவுக்கு, இருக்கலாம், பழக பழகத் தான் அவள் குணமும் நல்ல மனமும் எனக்குப் புரிந்தது என்று ஒரு காரணம் சொன்னது.

ஒருவேளை எல்லாம் கலந்த 'காக்டைல்' மாதிரி மேற் சொன்ன அனைத்தும் சேர்ந்து தான் அவள் குணத்தை அறிய வைத்ததோ? என்று யோசித்து, இருக்கலாம்! அதனால் தான் நிஷாந்துடன் அவள் பேசும் போது எனக்குப் பொறாமை வந்தது.

அத்தோடு விஷாக், நிஷாந்தைப் பற்றி வந்திதாவுக்கு விளக்க முயல, நான் விலக்க அல்லவா முயன்றேன்' என அவன் இதய அறையில் வந்திதாவுக்குச் சாதகமாகக் காரணங்களைத் தேடிச் சேகரித்துக் கொண்டிருந்தான் ஆதிரன்.

'ஆக என் காதலை உணர்ந்து கொள்ள கல்யாணப் பெண் என்று ஒரு போட்டோவை அனுப்பி வைக்க வேண்டியதாகிவிட்டது.



நிஜத்தை அருகில் வைத்துக் கொண்டு உண்மையை உணராமல் நிழலைப் பார்த்து உணர வேண்டியிருக்கிறதே? இதைத் தான் நிழல் நிஜமாகின்றதுன்னு சொல்லுவாங்களோ?' என அவன் இயற்கை குணம் தலைத் தூக்கியது.

அதை அவன் காதல் மனம் நங் என்று ஓங்கிக் கொட்டியது. 'இப்படி சீரியஸா யோசிக்கும் போது ஜோக் அடிச்சேன்னா வந்திதாவுக்கு உன்னை எப்படிப் பிடிக்கும்?' என்று. கூடவே அவனுக்கு கவலையாகவும் இருந்தது. வந்திதாவுக்கு அவனைப் பிடிக்க வேண்டுமே என்று.

காதலுக்குப் பல வழிகளில் வலிகள் வந்திருப்பதைப் பார்த்திருக்கிறான்; கேட்டும் இருக்கிறான். பல வில்லங்கங்களைக் கண்டிருக்கிறான்; பல வில்லன்களையும் பார்த்திருக்கிறான். ஆனால் இங்கே அவன் காதலில் அவனே அல்லவா வில்லனாகவும் வில்லங்கமாகவும் இருந்திருக்கிறான்!

'வந்திதாவுக்கு என்னைப் பிடிக்குமா? இட்ஸ் ஓ.கே மா... நாம ஆன்ட்டை ஹீரோன்னு (anti-hero) சொல்லிக்கலாம்' எனத் தன் மனதை திடப்படுத்திக் கொண்டான்.

* * *

மின்னஞ்சலைப் பார்த்ததிலிருந்து ஓயாது சிந்தித்துக் கொண்டிருந்த ஆதிரன் ஒரு முடிவுடன் தான் காலையில் மற்றவர்களுடன் நயகரா நீர்வீழ்ச்சிக்குக் கிளம்பினான்.

பெரியவர்கள் எப்படியும் அசதியாக இருக்கிறது என்று உட்கார்ந்துக் கொள்வார்கள். சாதனாவும் விஷாக்கும்

தங்கள் வழியைப் பார்த்துக் கொண்டு கிளம்பிவிடு வார்கள்.

மீதம் இருந்த பிரணவை மட்டும் எப்படிக் கழட்டி விடுவது என செல்லும் வழி நெடுக யோசித்துக் கொண் டிருந்தான் ஆதிரன்.

'அடப்பாவி நீ எல்லாம் ஒரு பிரெண்ட்டா?' எனத் தன் மனசாட்சி கேட்டதை 'லவ்ல இதெல்லாம் சகஜம்னு நீ போன ஸ்கூல்ல சொல்லிக் கொடுக்கலை?' எனத் தீவிரமாக எதிர் கேள்வி கேட்டு மனசாட்சியையே தோல்வியுறச் செய்தான்.

நயகரா வந்ததும் எல்லாம் அவன் எதிர்பார்த்தபடியே நடந்தது. கூடவே பிரணவிற்கும் வேலை வந்துவிட தைய தக்க என மனதினுள் குதித்த ஆதிரன், தனித் திருக்கும் இந்தத் தருணத்தைப் பயன்படுத்தி வந்திதா விடம் விஷயத்தைச் சொல்லி விடலாம் என எண்ணி சந்தோஷித்தான்.

அவன் வந்திதாவிடம் தனக்குத் திருமணத்திற்குப் பெண் பார்ப்பதாகவும் இன்று காலையில் ஒரு போட்டோ வந்ததாகவும் கூறி, அவளிடம் அவள் புகைப்படத்தைக் காட்ட வேண்டும்.

பின்னர் அவனுக்கு அவளைப் பிடித்திருப்பதாகக் கூறி, சில விளக்கங்களை அளித்து, முடிவில் அவளின் பதிலைக் கேட்கலாம் எனத் திட்டமிட்டவனுக்கு அனைத் துமே எளிதாக முடிந்துவிடும் என்றிருந்தது.

அதன் பிறகு தன் நண்பனிடம் தெரிவித்துக் கொள்ள லாம் என முடிவு செய்து, வந்திதாவைக் காக்கும்



பணியைக் கையில் எடுத்துக் கொண்டான் அந்தக் காவ(த)ல் காரன்.

ஆதிரனின் நல்ல நேரமோ இல்லை விதிக்கு அவனை இன்னும் வந்திதாவிடம் வில்லனாகவே இருக்க வைக்க விருப்பமோ எல்லாம் தலைகீழாக நடந்தேறியது.

தனித்து விடப்பட்ட வந்திதாவும் ஆதிரனும் நடந்த வாறே அருவியின் அருகில் சென்றனர். ''போட் ரைட் போயிருக்கியா வந்திதா!'' என மெதுவாக பொதுவான விஷயத்தைப் பற்றி ஆரம்பித்தான் ஆதிரன்.

''இல்லைங்க ஆதி! உங்களுக்குத் தான் தெரியுமே எனக்கு நீச்சல் தெரியாதுன்னு. அதனால தண்ணில போறதுக்கு பயம்.''

''வது! போட்ல போறதுக்குத் தண்ணில போனா தப்பில்ல. ஆனா, தண்ணில தான் போகக் கூடாது' எனக் குடிப்பதைப் போல சமிக்ஞை செய்து அவளைக் கடித்து வைத்தான்.

வந்திதாவும் ஆதியின் குணத்தை ஓரளவு புரிந்து கொண்டதாலும், இன்னும் இரண்டு நாட்கள் தானே அதுக்குள் எதற்காக வீணாகச் சிணுங்கிக் கொண்டு அனைவரையும் சங்கடப்படுத்த வேண்டும் என்றும் நினைத்து முன்போல ஆதியின் கடிகளுக்குப் பயப் படாமல் கலகலவெனச் சிரித்தாள்.

அத்தோடு அன்று சிகாகோவில் நடந்த பேச்சுவார்த் தையும் ஆதிரனின் முழு குணத்தைப் பற்றி புரியவைக்க வில்லை என்றாலும் கடுகளவேனும் புரிந்து கொள்ள உதவியது.

''தாங்கலை ஆதி! எனக்கு இங்கிருந்து பார்க்கறதே போதும்'' என்றாள், அவனின் வது என்ற அழைப்பில் கவனம் செலுத்தாமல்.

''வந்து-தா! எப்போதும் இருக்கிறதை வச்சு சந் தோசப்பட்டா எப்படி லைஃப்ல முன்னேற முடியும்? அதுவும் நீ இருக்கிற ஃபீல்டுக்கு அது சுத்தமா ஒத்து வராது. போட்ல நீ மட்டுமா போற? எல்லோரும் இருக் காங்க. அங்கே பாரு சின்னக் குழந்தைங்க கூடப் போறாங்க. நான் இருக்கிறப்போ என்ன பயம்?'' எனச் சமாதானம் செய்ய முயன்றான்.

''அது தான் என்னோட பயமே'' எனப் பட்டென்று சிரித்தவாறே அவள் சொல்லவும்,

''கமான் வந்து-தா! இத்தனை பேர் இருக்கிற இடத்துல உன்னைத் தண்ணிக்குள்ளே தள்ளி விட்டுட மாட்டேன். நீ கத்தினா போதும் எல்லோரும் உன்னைக் காப்பாத் திடுவாங்க. அப்புறம் என்னைக் காப்பாத்தறது தான் சிரமம். இந்த ஊரு போலீஸ்கிட்டே மாட்டிக்கறதுக்கு எனக்கு இஷ்டம் இல்லப்பா'' என்றான் அனைத்துப் பற் களையும் காட்டியபடி.

வந்திதாவிற்கும் அடி மனதில் ஆசை இருந்த போதும் பயம் அவளைத் தடுத்து நிறுத்தியது. ஆதிரன் அவளிடம் பலவிதமாக எடுத்துச் சொல்லி ஒருவழியாக அவளை கப்பலுக்குள் அழைத்துச் சென்றான்.

கப்பல் கிளம்பிய சற்று நேரத்தில் பயம் தெளிந்து அந்தச் சூழ்நிலைக்குள் தன்னை நிலைநிறுத்திக் கொண் டாள் வந்திதா. கப்பல் நீர்வீழ்ச்சியின் அடியில் செல்லும் வரை எல்லாமே நன்றாகத் தான் போய் கொண்டிருந்தது!



நீர்வீழ்ச்சியில் இருந்து வந்த சாரல் வந்திதாவின் தேகமெங்கும் முத்தமிட்டுச் செல்ல, கீழே விழும் அருவியின் மோதலோ அவள் மனதை முத்தமிட்டுச் சென்றது.

தண்ணீர் வாரி வழங்கும் முத்தங்களை அரவணைக்க, இரண்டு கைகளையும் விரித்து மெய் மறந்து கண்மூடி நின்றவள், அந்தத் தருணத்தை அணு அணுவாக ருசித்து ரசித்தாள்.

வந்திதாவிடம் உண்மையைக் கூற நினைத்து ஒவ் வொரு அடியாக அவளைப் பார்த்து முன்னேறிக் கொண் டிருந்த ஆதிரனுக்கு, வந்திதா காலைப் பனியில் குளித்த மலராய் தோன்றினாளோ என்னவோ! அவன் மதி மயங் கியது. அத்தோடு சதியும் செய்தது!

வந்திதா இரு கரங்களையும் நீட்டி தண்ணீரின் சாரலை வரவேற்றதை, அவனுக்கு அழைப்பு விடுப்ப தாக எண்ணினானோ? அருகில் இருந்தவளைச் சட்டென இழுத்து மென்மையாக ஆரத் தழுவினான்.

அந்தத் தழுவலிலேயே யார் தன்னை அணைத்தது என உணர்ந்து கொண்டாள் வந்திதா. ஆனால் ஏன்? எதற்கு? போன்ற கேள்விகளுக்கு விடை தெரியாமல் குழம்பினாள்.

பல சமயங்களில் ஆதிரனின் ஸ்பரிசத்தைக் கண்டிருக் கிறாள் தான். ஆனால், இத்தனை நாட்களில் இல்லாத நெருக்கத்தை, உணராத இறுக்கத்தை, அறியாத விருப் பத்தை, தெரியாத உரிமையை என அனைத்தையும் கலந்த ஒரு இதமான ஸ்பரிசத்தை அந்தத் தழுவலில் கண்டாள்.

தான் வாழ்ந்த இத்தனை நாட்களும் எதையோ தேடிக் கொண்டிருந்ததைப் போலவும் இந்த ஸ்பரிசத்தில் அந்தத் தேடல் ஒரு முடிவுக்கு வந்ததைப் போலவும் உணர்ந் தாள்.

'அப்பாடா' என இளைப்பாறத் துடித்த மனதிற்கு, 'ஒருவேளைச் சீண்டுவதுக்கு இப்படிச் செய்கிறானோ அல்லது யார்கிட்டேயாவது பெட் கட்டி இருப்பானோ?' என விழிப்படைந்த அவள் புத்தி, கயிறு அவிழ்ந்த கன்றுக் குட்டியாய் அங்கும் இங்கும் அலைபாய்ந்து ஓடி வேகம் பிடித்து, மூக்கணாங்கயிறை மாட்டியது.

ஆனால், ஆதிரனின் செயலோ இலக்கை அடையும் நோக்குடன் ஓடும் குதிரையின் வேகத்தைத் தொட் டிருந்தது.

நொடிப் பொழுதில் நடந்த இந்தப் போராட்டத்தில் இருந்து வெளிவந்து என்ன? ஏது? என வந்திதா சுதா ரிக்கும் முன்பே குளிர்ச்சியான சாரல் தீண்டிய அவளின் ஈர அதரங்களை மேலும் ஈரப்படுத்தி முற்றுகையிட்டன தழுவியவனின் அதரங்கள்.

அவன் தழுவியவுடன் ஒன்றும் சொல்லாமல், ஏதும் செய்யாமல் வந்திதா தனக்குள்ளே போராடிக் கொண் டிருப்பதை அறியாமல் அதைச் சம்மதமாக எடுத்துக் கொண்டானோ? அவனாக எடுத்துக் கொண்ட சம்மதத் திற்குப் பதிலாக அவன் முதல் முத்தத்தைத் வைத் தானோ?

ஆதிரனின் செயலால் சிந்திக்கும் திறனை இழந்தாள் வந்திதா... அத்தோடு அவள் நினைவையும்!

ஆதிரன் மென்மையாக என நினைத்து இறுக்கி அணைத்தானோ அல்லது முற்றுகையிட்ட இடத்தை



விட்டுவிட மனமில்லாமல் நீண்ட நேரம் தன் ஆதிக்கத் தில் வைத்திருந்தானோ? அவனே உணர்வுக்கு வந்து அவளை விடுவிக்க, வந்திதாவின் தலை அவன் மேலேயே தொய்ந்து விழுந்தது!

அவளைத் தாங்கிப் பிடித்தவன் பதட்டமடைந்தான். 'ஓஹ். காட்! இவ்வளவு சென்சிட்டிவா இருக்காளே. ஸ்டுப்பிட் ஆதி! இப்படிப் பண்ணிட்டியே' எனத் தன் செயலை நினைத்து அவனையே திட்டிக் கொண்டு வந்திதாவை எழுப்புவதில் முனைந்தான்.

அவன் முற்றுகையிட்ட இடத்தை விடுதலை செய்த தாலும் தண்ணீரின் சாரல், சுகமான காற்று என இரண் டும் கலந்து அவள் முகத்தில் பட்டதாலும் விரைவி லேயே அவள் நினைவு மீண்டது.

விழிப்படைந்தவள் ஆதிரனின் முகத்தை மிக நெருக் கத்தில் பார்த்ததும், நடந்தது நினைவுக்கு வந்தது. அவளது மூளையும் சட்டென விழிப்படைந்து தன் பலம் முழுவதையும் திரட்டி அவனைத் தள்ளிவிட்டாள். அவளின் கண்களில் கோபமும் கண்ணீரும் போட்டி போட்டுக் கொண்டு வந்தன.

பெரும் பிரயத்தனப்பட்டுக் கண்ணீரை மட்டும் அடக்கியவள், ''ஆதி! இப்பவே நான் கூச்சல் போட்டு செக்ஸுவல் ஹராஸ்மென்ட் எனச் சொல்லிப் போலீசைக் கூப்பிட முடியும்.

ஆனா பிரணவுக்கு பிரெண்ட்ங்கிற ஒரே காரணத் துக்காகப் பார்க்கிறேன். உங்களால அவர் தான் கஷ்டப் பட நேரிடும். அதோட பின் விளைவுகளைப் பத்தியும் யோசிச்சு உங்களைச் சும்மா விடறேன்.

இத்தனை நாள் சும்மா சீண்டினது பத்தலையா உங்களுக்கு? இப்போ என் உணர்ச்சிகளோட விளையாட ஆரம்பிச்சுட்டீங்க. நீங்க சரியான ஒரு சாடிஸ்ட் ஆதி! என் உணர்ச்சிகளோட விளையாட உங்களுக்கு யார் அனுமதி கொடுத்தது?

போனாப் போகுதுன்னு சும்மா இருந்தா ரொம்பவுமே படுத்தறீங்க. திஸ் இஸ் த லிமிட். தயவு செய்து இனி மேல் என் கண்ல படாதீங்க'' என அவனுக்கு மட்டும் கேட்கும் வண்ணம் பொரிந்துவிட்டு, அங்கிருந்து வேறு இடம் நோக்கி ஓடினாள்.

வந்திதாவின் கண்களில் முதல் முறையாகக் கண்ணீரைக் கண்டதும் வெகுவாகக் கலங்கிப் போனான் ஆதிரன். அவன் ஏதோ சொல்ல வாயைத் திறக்க, அதைக் கேட்க அவள் அங்கிருந்தால் தானே?

கப்பல் கரையில் சென்று நிற்க இன்னும் நேரமாகும் என்பதால் ஓடி ஒளிந்து ஆதிரனிடம் இருந்து தப்பித்துக் கொண்டிருந்தாள் வந்திதா. அவனும் கப்பல் முழுவதும் தேடித் தேடித் தவித்துவிட்டான்.

கப்பல் நின்றதும் கண்ணாமூச்சி ஆட்டம் ஒரு முடிவுக்கு வந்தது என எண்ணி இறங்கி ஓடிய வந்திதாவைக் கண்டுபிடித்து துரத்திக் கொண்டு சென்றான் ஆதிரன். வந்திதாவின் வேகத்துக்கு ஈடு கொடுத்து ஓடினாலும் அவனால் அவளைப் பிடிக்க முடியவில்லை.

வந்திதாவை முதலில் இருந்து ஆதிரன் சீண்டாமல் இருந்திருந்தால் அவனின் வார்த்தைகளும், விளக்கங்களும் உணர்த்த முடியாததை அவன் கப்பலில் அவளிடம் நடந்து கொண்ட அந்த ஒரு செயலே



கோபமின்றி, கண்ணீரின்றி அவன் காதலை வந்திதாவுக்குப் பறைசாற்றி இருக்கும்.

ஆனால் இதுவரை வந்திதாவிடம் அன்பாக ஒரு சொல், ஆசையாக ஒரு செயல் என எதுவுமே அவன் செய்ததில்லையே?

என்ன தான் அக்கறையுள்ளவனாக அவ்வப்பொழுது பேசியிருந்தாலும் சந்திரசேகரிடம் நல்லவனாக இருக்கப் பாடுபட்டதாக அவன் வாயாலேயே சொல்லி அதற்கும் மூடுவிழா நடத்திவிட்டானே.

எப்பொழுதும் கேலியும் கிண்டலுமாக, அவளை வாரி விடுவதில் குறியாக, அவளிடம் சண்டைக்கு மல்லுக் கட்டுபவனாக என இருந்தவன் அவ்வாறு அணைத்தால் பாவம் அவளும் தான் என்ன நினைத்துக் கொள்வாள்?

கப்பலில் இருந்து இறங்கி, பிரணவ் இருந்த இடத்துக்கு ஓட்டமாக ஓடிச் சென்று அவனருகில் அமர்ந்து கொண்டாள் வந்திதா. அதன் பிறகு ஆதிரன் என்ற ஒரு மனிதப் பிறவி அங்கிருப்பதைச் சிறிதும் சட்டை செய்யவில்லை அவள்.

பலமுறை அவளிடம் பேச முயன்ற ஆதிரனின் முயற்சியை ஏதாவது ஒரு வழியில் தோற்கடித்துக் கொண்டே வந்த வந்திதா பிரணவை விட்டு நகர்ந்தாள் இல்லை.

'தனியாக இருந்தால் தானே ஆதிரன் தன்னிடம் பேச முயற்சிப்பான். இன்னும் இரண்டு தினங்களை ஓட்டி விட்டால் அப்புறம் அவன் கிளம்பிவிடுவான். இனிமேல்

இவனைக் கனவிலும் காணக்கூடாது. இவன் சங்காத்தமே ஆகாது.

என்னை என்னவென்று எண்ணிக் கொண்டான்? இவன் செய்யும் கோமாளித்தனத்தை எல்லாம் பொறுத்துக் கொள்ளும் ஏமாளி என்றா? கடைசியிலே என் உணர்வுகளோட விளையாட ஆரம்பிச்சுட்டானே?'

வந்திதாவின் மனம் பாட்டுக்கு அதன் வேலையைச் செய்து கொண்டிருக்க, மற்றவர்களும் அங்கு வந்து சேர்ந்தார்கள். அங்கிருந்து வீடு திரும்பும் பொழுது வந்திதா அருகில் விஷாக்கும் சாதனாவும் அமர, பெரியவர்கள் நடுவிலிருந்த இருக்கையில் அமர்ந்து கொண்டார்கள்.

காரில் அமர்ந்தவுடன் காதில் பாட்டைக் கேட்கும் கருவியை மாட்டிக் கொண்டு கண்மூடி அமர்ந்தாள் வந்தனா. சாதனாவும் விஷாக்கும் பேசுவது அவளுக்குக் கேட்கக் கூடாது என நினைத்துத் தான் அவள் அவ்வாறு செய்கிறாள் என நினைத்து பெருமைப்பட்டுக் கொண்டாள் சாதனா.

அது மட்டும் காரணம் அல்லவே! வந்திதாவுக்கு ஆதிரனின் குரலைக் கூட கேட்க இஷ்டமில்லை. அவன் மற்றவர்களிடம் ஏதாவது பேசிக் கொண்டு வந்தால் அதை எப்படி சகிப்பது என்று தான் அவ்வாறு செய்தாள்.

ஆனால் கேட்டுக் கொண்டிருந்தப் பாட்டில் மனம் லயிக்காமல் ஆதிரன் தந்த சூடான முத்தத்திலேயே மனம் மொத்தமும் பசைபோட்டு ஒட்டிக் கொண்டிருந்தது.

முன்னிருக்கையில் அமர்ந்திருந்த ஆதிரனுக்கோ தவிப்பு அடங்கவில்லை. எப்படி அடங்கும்? அவளின்



கைப்பேசிக்கு எஸ்.எம்.எஸ். அனுப்பலாம் என்று ஒரே வரியில், 'சாரி! ஐ கேன் எக்ஸ்ப்ளைன்' என்று அனுப்பினான்.

செய்தி வந்ததைப் பார்த்ததும் கைப்பேசியை அணைத்து வைத்தாள் வந்திதா. ஒரு பதிலும் வரவில்லை என்று மீண்டும் மீண்டும் மன்னிப்புக் கேட்கும் படலத்தில் ஈடுபட்டிருந்தான் ஆதிரன்.

மீண்டும் மீண்டும் ஆதிரன் தன் கைப்பேசியை நோண்ட, பிரணவ், ''டேய்! என் பக்கத்துல உட்கார்ந்துட்டு எதுக்குடா போன் கூட பேசிட்டு இருக்கிற? கடுப்பேத்தாதே'' என்றான்.

ஆதிரன் ஒரு புன்னகையை உதிர்க்க, ''போர் அடிச்சா காரை ஓட்டறியா?'' என்றான் பிரணவ்.

அவன் கேட்டு முடிக்கும் முன்னர், ஆதிரன் எப்பொழுதும் காரை ஓட்டுவதை விட வேகமாக 'இல்லை' என தலை அசைத்தான்.

அவனை வியப்பாகப் பார்த்த பிரணவ் அதன் பிறகு ஒன்றும் கேட்கவில்லை. ஆனால் ஆதிரன் மனதில் இருப்பதை மறைத்து, நண்பனிடம் ஓரளவுக்கு இயல்பாகப் பேசிக் கொண்டு வந்தான்.

பிரணவுக்கு சந்தேகம் வரக் கூடாது. முதலில் தான் வந்திதாவிடம் பேசித் தெளிவுபடுத்திவிட்டுப் பின்னர் இவனிடம் பேசலாம் என எண்ணி வழி நெடுக அல்லாடிக் கொண்டிருந்தான்.

வந்திதாவிடம் பேச ஆதிரன் அடுத்தடுத்து எடுத்த முயற்சிகள் அனைத்தும் வெற்றிகரமாகத் தோல்வியைத்

தழுவின. அன்றிரவு ஆதிரனால் நிம்மதியாக உறங்க முடிந்திருக்கும் என்றா நினைத்தீர்கள்?

---

**இலக்கு: 0 மைல்கள்...**

**நியூயார்க் நகரம்! (Newyork City)**

---

அன்றிரவை நியூயார்க்கில் உள்ள ஒரு விடுதியில் கழித்துவிட்டு மறுநாள் வந்திதா புதிதாகக் குடியேற இருக்கும் அபார்ட்மென்ட்டில் தங்குவதாக எல்லோரும் திட்டமிட்டிருந்தனர்.

அதன்படியே, மறுநாள் வந்திதாவும் பிரணவும், வந்திதாவின் வீட்டுச் சாவியை வாங்குவதற்கு நேரத்தில் கிளம்ப, ஆதிரனும் அவர்களுடன் வருவதாகப் போய் நின்றான்.

விஷயம் அறியாத பிரணவோ, ''என்ன சொல்லற? நீ தான் நியூயார்க் சிட்டியைப் பார்த்ததில்லை. பார்க்க ரொம்ப ஆசையோட இருந்தியே. போயிட்டு வாடா'' என்றான்.

''இல்ல, நான் இங்க தானே இருப்பேன். அப்புறமா வந்து பார்த்துக்கறேன். உங்க கூட வரேன். இனி கொஞ்ச நாள் தானே உன்னோட ஸ்பென்ட் பண்ண முடியும்'' என சுரத்தே இல்லாமல் ஆனால் பிரணவ் நம்பும் விதமாக ஒரு காரணத்தைச் சொன்னான்.

''ஆதி! ஏன்டா ஓவரா சீன் போடற? போடா அம்மா - அப்பாக்குத் துணையாப் போயிட்டு வா. அவங்க சிட்டியைப் பார்த்துப் பத்து வருஷத்துக்கு மேல இருக்கும். அதான் போகணும்ன்னு பிரியப்படறாங்க.



விஷாக்கும் சாதனாவும் தனியா இருக்கக் கிடைக்கிற சான்சை அம்மா-அப்பாக்கு எஸ்கார்ட் பண்ணச் சொல்லி கெடுக்கச் சொல்லறியா? ஈவ்னிங் வந்து உங்களோட ஜாயின் பண்ணிக்கறோம்'' என்றான் பிரணவ்.

அதற்கு மேல் மறுத்துப் பேச இயலாமல் பரிதாபமாக வந்திதாவைப் பார்க்க, அவளோ படு தீவிரமாகத் தன் கைப்பையைக் குடைந்து கொண்டிருந்தாள்.

வேறு வழியில்லாமல் மற்றவர்களுடன் நியூயார்க் நகரைச் சுற்றிப் பார்க்கச் சென்ற ஆதிரனுக்கு மருந்துக்குக் கூட உற்சாகம் இல்லை.

அவர்கள் சென்று பார்த்த எம்பயர் ஸ்டேட் கட்டடமாகட்டும், கட்டிக் கொண்டிருக்கும் வேர்ல்ட் ட்ரேட் சென்டர் ஆகட்டும், படகில் சென்று பார்த்த சுதந்திர தேவி சிலையாகட்டும் எதிலுமே அவன் மனம் ஒன்றவில்லை.

'ச்சே! வந்திதாகிட்டே உண்மையை சீக்கிரமா சொல்ல முடியாம இது என்ன அவஸ்தை?'' என்றிருந்து ஆதிரனுக்கு.

வந்திதாவின் கைப்பேசிக்கு அழைக்க, இவன் அழைப்பான் என ஊகித்தவளோ அதை இன்னுமே அணைத்துத்தான் வைத்திருந்தாள்.

'வந்திதா! ப்ளீஸ் என்னைப் பேச விடு. இது என்ன பிடிவாதம்? நான் வேணும்னே பண்ணலை. நான் ஏன் அப்படி செஞ்சேன்...' என்பதற்கு மேலே பேச விடாமல் அவள் குரல் அஞ்சல் பெட்டி நிரம்பிவிட்டதாகக் கூறி அவனைத் துண்டித்து, தண்டித்தது.

நிதிஷ் தான் வந்திதாவை அழைத்துப் பல செய்திகளை வாசித்திருந்தான். அதாவது அடுத்த முறை வரும் பொழுது அவனுக்கு வாங்க வேண்டிய விளையாட்டுப் பொருட்களின் பட்டியல் மற்றும் விவரம்.

ஆதிரனின் தொல்லையில் இருந்து விடுபட கைப் பேசியை நேற்றிலிருந்து அணைத்து வைத்திருந்த வளுக்கு நிதிஷின் செய்தி காதுகளுக்கு எட்டவில்லை. அதனால் அதை அழிக்காமல் இருந்ததினால் அவளின் குரல் அஞ்சல் பெட்டி நிரம்பி வழிந்தது.

இதை அறியாத ஆதிரனோ, 'ச்சே!' எனக் காற்றைக் குத்தி நொந்து கொண்டான். அடுத்தக்கட்ட முயற்சியாக, பிரணவைப் பல தடவைகள் அழைத்தான்.

''பிரணவ்! எங்கேடா இருக்க?'' என ஒரு தரம், ''என்ன பண்ணிட்டு இருக்க?'' என மறுதரம் கூப்பிட்டுக் கேட்டான்.

''சாப்பிட்டியா? வந்திதா எங்க?'' என கேட்பதற்கு ஒரு தடவை, ''எப்போ வருவே?'' எனக் கேட்பதற்கு ஒரு தடவை என அவனிடம் பலமுறை அக்கறையாக விசாரித்தான். ஆனாலும் வந்திதாவிடம் பேச என்ன காரணத்தைச் சொல்வது எனத் தயங்கினான்.

ஒருவழியாக சூரியன் தன் பணியை முடித்துக் கொண்ட மாலை வேளையில் வந்து சேர்ந்த பிரணவையும் வந்திதாவையும் பார்த்ததும் ஆதிரனுக்கு சூரியன் மீண்டும் உதயமாகிவிட்டதைப் போல உற்சாகம் கரைபுரண்டோடியது!

பிரணவும் வந்திதாவும் சேர்ந்து கொள்ள அனைவரும் டைம்ஸ் ஸ்கோயரில் உள்ள ஓர் பௌலிங் விளையாடும் இடத்துக்குச் சென்றனர். வந்திதா, சாதனா மற்றும் விஷாக் ஒரு அணியாகவும், சந்திரசேகர், ஆதிரன், பிரணவ் ஒரு அணியாகவும் பிரிந்து விளையாட ஆரம்பித்தனர்.



ஒரு கட்டத்தில் பந்து உருண்டு செல்லும் வழவழப்பான தரையில் தெரியாமல் வந்திதா காலை வைத்து விட, சர்ரென்று வழுக்கிக் கீழே விழுந்தாள்.

'பார்த்துப் பார்த்து' என அனைவரும் பதற, முதல் ஆளாக அவளருகில் சென்று அவள் எழுந்திட உதவியது ஆதிரன். என்ன கொடுமையடா இது?!

இதே சில தினங்களுக்கு முன்னர் இருந்த ஆதிரனென்றால் வந்திதா கீழே விழுந்ததற்கு விழுந்து விழுந்து சிரித்திருப்பான்.

ஆனால் இப்பொழுது கீழே விழுந்தது, இவன் காதலில் தடுக்கி விழக் காரணமான கன்னத்துக் குழிக்குச் சொந்தக்காரி அல்லவா! பதறாமல் என்ன செய்வான்?

உதவிக்கு வந்த ஆதிரனின் கையை உதாசீனப் படுத்திவிட்டு வந்திதாவே கீழிருந்து எழுந்து கொண்டாள். அனைவரும் வந்திதாவிடம் அவளுக்கு அடிபட்டதா என விசாரித்துக் கொண்டிருக்க, ஆதிரனின் பதறிய செயல் பின்னுக்குத் தள்ளப்பட்டது.

ஆனால் கூடவே சுற்றித் திரியும் பிரணவுக்கு மட்டும் இந்தச் செய்கை புருவம் உயர்த்த வைத்தது.

மேலும் சற்று நேரம் அங்கே விளையாடிவர்கள். இரவு உணவிற்குப் பின்னர் விஷாக் தன் நண்பன் வீட்டில் தங்கிக் கொள்வதாகக் கூறி விடைபெற மற்றவர்கள் வந்திதாவின் அபார்ட்மெண்ட்டுக்குச் சென்றனர்.

வந்திதாவும் பிரணவும் ஏற்கனவே விடுதியில் இருந்த தங்கள் உடைமைகளை இங்கே கொண்டு வந்து வைத்திருந்தனர். அத்தோடு வந்திதா கலிபோர்னியா விலிருந்து அனுப்பியிருந்த சில சாமான்களும் அன்று மதியம் வந்து சேர்ந்திருந்தன.

வீட்டுக்கு வந்தவர்கள் அசதி மிகுதியினால் அன்றிரவு விரைவிலேயே உறங்கி விட்டனர். ஆனால், ஆதிரனுக்கு அது தூங்கா இரவாய்க் கழிந்தது. இப்பயணத்தின் அடுத்த மூன்று தினங்கள் இவ்வாறாகக் கழிந்தன.

* * *

மறுநாள்! காலையில் எழும்பொழுதே வந்திதாவிற்கு அன்றைய தினம் மிகவும் சோம்பலுடன் விடிவதாகப் பட்டது. இத்தனை நாட்கள் சந்திரசேகர் குடும்பத்தா ருடன் சந்தோசமாகச் செலவு செய்துவிட்டு இனி தான் மட்டும் தனியாக இருக்க வேண்டும் என நினைத்து கண்களில் நீர் குளம் கட்டியது.

எப்படியும் நிதர்சனத்தை ஒப்புக் கொண்டு தானே ஆகவேண்டும்! எழுந்து குளித்தவள் சாதனாவுடன் ஒட்டிக் கொண்டு அலைந்தாள். ஆதிரனின் கண்கள் அவளையே சுற்றிச் சுற்றி வந்தன. ஆனால் வந்திதா தான் அவனைத் தன் அகராதியில் இருந்தே அழித்து விட் டாளே!

ஆதிரன் வந்திதாவிடம் பேச முயன்ற பொழுதெல் லாம் அவள் சாதனாவுக்கு உடைமைகளை அடுக்கு வதற்கு உதவி புரியும் போர்வையில், சமையலறையில் சௌந்திரவல்லிக்கு உதவி புரியும் போர்வையில், பிரணவுடன் அரட்டை என்கிற போர்வையில் என



ஆதிரனின் முயற்சிகள் அத்தனையையும் விதவிதமான பெரிய போர்வைகளால் மூடி முறியடித்துக் கொண்டே இருந்தாள்.

மதியம் உணவு உண்டு முடித்து அனைவரும் கிளம்ப ஆயத்தமாயினர். வாடகைக்கு எடுத்திருந்த காரை திருப்பிக் கொடுத்துவிட்டு, திரும்பும் பொழுது விமானம் மூலம் செல்வதால் அவர்களே விமான நிலையத்துக்குச் சென்று விடுவதாகக் கூறினர்.

வந்திதாவும் உடன் வருவதாகச் சொல்லவும், தேவை யில்லாமல் அலைய வேண்டாம் என மறுத்துவிட்டுச் சந்திரசேகரின் குடும்பம் தங்கள் பயணத்தை முடித்துக் கொண்டு வீடு நோக்கிக் கிளம்பினர். விஷாக்கும் அவளிடம் வந்து விடைபெற்றுக் கொண்டு கிளம்பி னான்.

ஆதிரன் அவர்களுடன் விமான நிலையம் சென்று அவர்களை வழி அனுப்பி வைத்துவிட்டு நியூஜெர்சி போவதாகக் கூறினான்.

அவர்களுக்கு விடைகொடுத்த வந்திதா தன் கைப் பேசியை எடுத்து உயிர் கொடுத்தாள். ஆதிரன் கேட்ட பல மன்னிப்புகள் அடங்கிய செய்திகள் கண்ணில் பட்டு எரிச்சலுறச் செய்தது.

'என் உணர்ச்சிகளோட விளையாடிட்டு எவ்வளவு மெத்தனமா சாரி கேட்கிறான். யாருக்கு வேணும் இவ னோட புடலைங்கா சாரி' என அவன் அனுப்பிய அத் தனை செய்திகளையும் படிக்காமல், கேட்காமல் அழித்து விட்டாள்.

பின்னர் நிதிஷின் செய்திகளைப் பார்த்தவள், மலர்ச்சி யுடன் அவனை அழைத்துச் சிறிது நேரம் பேசினாள்.

தனிமை அவளை மிகவும் வாட்ட, இப்பவே இப்படி யென்றால் இனி வரும் நாட்களில் என்ன செய்வது? என நினைத்து மருகினாள்.

வேறு ஏதாவது வேலையில் மூழ்கலாம் என்று தன் மடிகணினியை உயிர்ப்பித்தாள். ஏதாவது படம் பார்க் கலாம் என நினைத்து சிறிது நேரம் அதை நோண்டிக் கொண்டிருந்தாள்.

முயன்று, ஆதிரனின் நடத்தையைப் பற்றி நினைக் காமல இருந்தாள். ஆனால் அவள் செய்யும் ஒவ் வொன்றும் அவனையே நினைக்கச் செய்தது. இந்த வீட்டிற்கு வந்தவுடன் பிரணவ் அசதியாக இருப்பதாகக் கூறவும் ஆதிரன் தான் இன்டர்நெட் இணைப்பு செய்து கொடுக்க உதவினான்.

அவள் ஆதிரனின் 'கேமராவை உபயோகப்படுத்தி எடுத்திருந்தப் புகைப்படங்களை அவள் மறந்தே விட் டிருந்தாள். ஆனால் ஆதிரன் தான் ஞாபகமாக அனைத் தையும் அவள் மடிகணினியில் பதிவேற்றம் செய்து கொடுத்தான்.

சற்று நேரம் அந்தப் புகைப்படங்களைப் பார்த்தவாறு அமர்ந்திருந்தவளுக்குத் தங்கள் பயணத்தில் நடந்தது எல்லாம் ஒவ்வொன்றும் நினைவுக்கு வந்தது.

முக்கியமாக ஆதிரன் செய்த கலாட்டாக்கள், சீண் டல்கள், பேச்சுக்கள் என அனைத்தும் வரிசையில் நின்று அவளைப் பார்த்துக் கைகொட்டிச் சிரித்தன.

'அவனைப் பற்றி நினைக்கக் கூடாது என முடிவு செய்தால் அவனையே நினைத்துக் கொண்டிருக்கிறோமே' எனத் தன்னையே கடிந்து கொண்டாள்.



திரைப்படம் பார்க்கலாம் என ஒரு படத்தை ஓட விட்டாள். 'கொடுமை கொடுமைன்னு கோவிலுக்குப் போனா அங்க ரெண்டு கொடுமை ஆடிட்டு வந்துச்சாம்' என்பதற்கு இணங்க, அதிலும், நயகரா நீர்வீழ்ச்சியைக் காட்டி, ஆதிரனின் செயலுக்குள் அவள் மனதை மீண்டும் விழ வைத்து அவளை இம்சை செய்தது.

இது சரிப்பட்டு வராது என மடிகணினியை மூடியவள் வெளியில் சென்று மளிகைச் சாமான் வாங்கி வரலாம் என முடிவு செய்து வெளியில் கிளம்பினாள்.

சற்று நேரம் வெளியில் இருந்துவிட்டு வந்தது ஆதிர னின் நினைவுகளை மூட்டை முடிச்சுகளுடன் ஓட வைத்திருந்தது. இரவுக்கு சமைக்கலாம் என வெங் காயத்தை எடுக்க அழைப்பு மணிச் சத்தம் செவிகளுக்கு எட்டியது.

'யார் இந்த நேரத்துல?' என யோசித்தவாறே சென்று கதவின் வியூ பைண்டரில வெளியில் பார்த்தவள் அதிர்ந்தாள். ஏனெனில் தன் மூட்டை முடிச்சுகளுடன் வெளியில் நின்றிருந்தவன் ஆதிரன்.

'இவன் எதுக்கு இப்போ இங்கே வந்தான்? இந்நேரம் ட்ரெயின்ல இல்ல போயிட்டு இருக்கணும்? எதையாவது விட்டுட்டுப் போயிட்டானா?' என யோசித்தவாறே கதவைத் திறக்காமல் என்ன வேண்டும் என வினவி னாள்.

''வது! ப்ளீஸ் கதவைத் திற. உன்கிட்டே நான் பேசணும். ப்ளீஸ்ம்மா!'' என்றான் வெளியில் நின்றிருந் தவன். அவனின் வது என்ற அழைப்பில் திகைத்து விழித் தவள் மௌனமாக நின்றாள்.

''வது! எல்லோரும் பார்த்துட்டுப் போறாங்க. ப்ளீஸ் நான் சொல்லறதைக் கொஞ்சம் கேளு'' எனக் கமறிய குரலில கெஞ்சினான்.

அதற்கு மேல் பிகு செய்யாமல் கதவைத் திறந்து விட்டவள் அவன் உள்ளே நுழைந்ததும் அவள் செய்த முதல் காரியம் அவனைத் திகைக்க வைத்தது. உள்ளே வந்தவனை நெருங்கி அவன் சற்றும் எதிர்பார்க்காதவாறு அவன் கன்னத்தில் பளாரென அறைந்தாள்.

நேற்றிலிருந்து அவள் உள்ளத்தில் கனன்று கொண் டிருந்த நெருப்பின் சூடு அவன் கன்னத்தில் தீயாகத் தகித்தது!

கன்னத்தைத் தடவிக் கொண்டு நின்றவனிடம், ''நேத்துப் பண்ண நினைச்சதை இப்போ பண்ணிட்டேன். சொல்லுங்க என்ன வேணும்? எதையாவது விட்டுட்டுப் போயிட்டீங்களா?'' என்றாள் ஒன்றுமே நடவாததைப் போல.

தேடி வந்து வாங்கிக் கட்டிக் கொண்டது இவன் ஒரு வனாகத்தான் இருக்கும். ஆனால் காரியம் ஆக வேண் டுமே. அதனால் அதைப் பற்றிக் கவலைப்படாமல், ''ஆமாம் வது! விட்டுட்டுத்தான் போயிட்டேன். என் னோட வாழ்க்கையை'' என்றான்.

அவன் சொன்ன பதிலில் விழிகள் விரிய திகைத்து நின்றாள். ஆனால் வாய் மட்டும், ''என்ன உளறறீங்க?'' என்றது.

''உனக்கு உளறலாத் தான் தெரியும் வது. என்னோட செய்கைக்குக் காரணம் சொல்ல வேண்டாமா? உனக்கு உன் பாட்டி மாப்பிள்ளை பார்ப்பது தெரியும் தானே?''



என்ற அவன் கேள்விக்குப் பதிலாக வந்திதா தலை யசைக்க,

''தரகர் மூலமா எனக்கு வந்த பொண்ணு நீதான். உன் போட்டோவை அண்ணன் நேத்து அனுப்பி இருந்தார். சுவாரசியமில்லாமல் தான் பிரிச்சிப் பார்த்தேன். ஆனா, அந்த போட்டோல உன்னைப் பார்த்ததும் எனக்குள்ளே ஒரு இனம் புரியாத சந்தோசம்'' என அவன் விளக்க விளக்க, வந்திதாவின் முகம் விளக்கைப் போலப் பிர காசித்ததோ?

''உன்னை முதல் முதல்ல பார்த்தப்போ நீ என்னை ஈர்த்தியா? எனக்குத் தெரியாது. அதே மாதிரி பார்க்கப் பார்க்க வந்த ஈர்ப்பா? அதுவும் எனக்குத் தெரியாது. ஆனா இனிமேல் என் வாழ்க்கை முழுக்க என்னை ஈர்க்கும் பெண் நீ மட்டுமா தான் இருக்க முடியும்'' என்ற விளக்கத்துக்கு, அவள் விழிகளில் பல மின்னல்கள் ஒரு சேர வெட்டியதோ?

''நேத்துக் காலையிலிருந்து என் பார்வை உன்னைத் தான் அலசிட்டு இருந்தது. முற்றிலும் வேற கோணத்துல வச்சு. எனக்கு அந்தக் கோணமும், பார்வையும் புதுசா இருந்தாலும் ரொம்பப் பிடிச்சிருந்தது. இதை எப்படி உன்கிட்டே சொல்லறது என யோசிச்சிட்டு இருந்தப்போ நாம நயகராக்குக் கிளம்பிட்டோம்'' என்ற விளக்கத்துக்கு, அவள் கண்கள் மலர்ந்தனவோ?

''ஒருத்தர் மேலே ஆசை, பற்று, காதல் எல்லாம் வர ரொம்ப நாள் தேவையில்லை வது! உன்னைப் பார்த்த இந்த ரெண்டு வருஷத்துல வராத இந்த உணர்வு கடந்த பத்து நாள்ல எனக்குள்ளே வந்துடுச்சு!

கொஞ்ச நாளாவே இந்த எண்ணம் என் அடி மனசுல இருந்திருக்கும் வது. நீ பிரணவ் கூட பேசினப்போ என்னால தாங்கிக்க முடிஞ்சதை நிஷாந்த்கிட்டே பேசினப்போ சுத்தமா தாங்கிக்க முடியலை. அப்போவே உன்னை நேசிக்க ஆரம்பிச்சிட்டேன் போல'' என்ற விளக்கத்துக்கு, அவள் இதயம் முரசொலி கொட்டியதோ?

''நீ எனக்காகப் பார்த்திருக்கும் பொண்ணுன்னு உன்கிட்டச் சொல்ல சரியான தருணம் பார்த்துட்டு இருந்தப்போ தான் சகுனம் இடையில் புகுந்து சகுனி வேலையைக் காட்டிடுச்சு. என்னைக் கட்டுப்படுத்த முடியாம, என்னோட அணைப்பே உனக்குப் புரிய வச்சிடும் என நினைச்சுத்தான் என் பதிலை நயகரால அப்படிச் சொன்னேன்'' என்ற விளக்கத்துக்கு, அவள் கன்னங்களில் செம்மைப் பூத்ததோ?

''உன்னை முதல்ல பார்த்தப்போ நீ தான் என் மனைவின்னு நான் நினைச்சுப் பார்க்கலை. ஆனா, இப்போ நீ தான் கல்யாணப் பெண்ணுன்னு பார்த்த உடனே எனக்கு மனைவியா உன்னைத் தவிர வேற யாரையும் மனசுல நினைச்சுப் பார்க்க முடியலை. என்னைக் கல்யாணம் பண்ணிக்குவியா வது?'' என அவன் உளறலின் சாராம்சத்தை எடுத்து விளக்கியதற்கு அவள் உள்ளம் பூரிப்படைந்ததோ?

அவன் விளக்கங்களில் சிக்குண்டவள், அவனின் கேள்வியில் நடப்புக்கு வந்தாள். ''ஒஹ் மை காட். ஐ ஜஸ்ட் கான் பிலீவ் இட். நீங்க மறுபடியும் என்னைச் சீண்டலையே. ஏன்னா நீங்க எதையுமே சீரியஸா எடுத்துக்க மாட்டீங்களே'' என்றாள். அவள் முகமோ தண்ணீர் கொண்டு உணர்ச்சிகளைத் துடைத்தெடுத்ததைப் போல இருந்தது.



''வது! இதுவரைக்கும் நான் எதையும் சீரியஸா எடுத்துக்கலை. ஆனா என்னோட லைஃப்ல இது மாதிரி சீரியஸா இருந்ததும் இல்ல.''

''ஆனா, எனக்கு என்னமோ இது சரி வரும்ன்னு தோணலை. நம்ம ரெண்டு பேருமே ஒருத்தரை ஒருத்தர் நிறைய ஹர்ட் பண்ணியிருக்கிறோம். ஒருத்தரோட ஒருத்தர் சண்டைப் போட்டிருக்கோம். ஒருத்தர் பண்ணறது இன்னொருத்தருக்குப் பிடிக்காம போயிருக்கு. அப்புறம் எப்படி?'' எனக் கேள்வியோடு நிறுத்தினாள்.

''எனக்குத் தெரியலை வது. நினைச்சா ஆச்சரியமா இருக்கு. ஆனா, யாரை நமக்கு ரொம்பப் பிடிச்சிருக்கோ அவங்களைத் தான் நாம நிறைய ஹர்ட் பண்ணுவோம் தெரியுமா? என் மேலேயும் தப்பு இருக்கு. ஒருநாள், ஒரு பொழுது கூட உன்னோட ஆசையா பேசினது இல்லை. அப்புறம் எப்படி உனக்கு என் மேலே நம்பிக்கை வரும்?

ஆனா வது, உன்கிட்டே நான் நடிக்கலை. நான் நானா இருந்தேன். அது தப்பா? இப்பவும் நானா தான் இருக்கேன். இனி எப்பவும் அப்படித்தான் இருப்பேன். ப்ளீஸ் என்னை நம்புடா'' என்றான் ஆதிரன் காதல் ததும்பும் குரலில்.

ஆதிரன் வந்திதாவிடம் காட்டிய இந்த முகம் அவளுக்குப் புதிது. புதிதான ஒன்றை எந்த நம்பிக்கையில்

ஏற்க என மனம் தயங்கும் தானே? அந்த நிலையில் தான் வந்திதாவும் இருந்தாள்.

''ஆதி, என்னால இதை நம்ப முடியலை. உங்களுக்கு எப்படி என்னைப் போய்? எனக்குப் பயமா இருக்கு...'' என முடிக்காமல் இழுத்தாள்.

''எல்லாத்துக்கும் பயப்படற மாதிரி இதுக்கும் பயப் படற வது. நாம் வாழ்க்கையை வாழ்ந்து பார்க்கலாமே? நான் உன்னை எப்பவுமே சீண்டலைன்னு சொல்ல மாட்டேன். ஆனா எப்பவுமே சீண்டுவேன்னும் சொல் லலை. அதுதான் என்னோட குணம், வேணா கொஞ்சம் மாற ட்ரை பண்ணறேன். உனக்காக...

பொதுவா காதலிக்கறப்போ குறைகள் எதுவுமே தெரியாது. ஆனா, கல்யாணத்துக்கு அப்புறம் அது விஸ்வ ரூபம் எடுக்கும். நம்ம வாழ்க்கை அப்படி இருக்காது வது. ரெண்டு பேரும் அறிமுகமானதிலிருந்து, நீ, நீயா இருந்த. நான் நானா இருந்தேன். ரெண்டு பேரோட நிறை குறை களைப் பத்தி நமக்கு நல்லாவே தெரியும்.

மிச்சமிருக்கும் என் வாழ்க்கையை உன்னோட கழிச்சா சுவாரசியமா இருக்கும். அதே சமயத்துல சந்தோஷ மாவும் இருக்கும். இதுக்கு மேலே உன்கிட்டே புரிய வைக்க எனக்குத் தெரியலை. நீ சம்மதிச்சா நான் ரொம்ப சந்தோஷப்படுவேன் இல்லைன்னா...'' என நிறுத்தி னான்.

''இல்லைன்னா... சொல்லுங்க...'' எனத் தெரிந்து கொள்ளும் ஆவலில் கேட்டாள்.

''உனக்கு லக் அவ்வளவு தான்னு நினைச்சுக்குவேன். அப்படியே இங்கேயே நியூஜெர்சில் செட்டில் ஆயிடு



வேன். கண்டிப்பா வேற கல்யாணம் பண்ணிக்க மாட்டேன். யோசிச்சு உன் முடிவைச் சொல்லு. அப்புறம் வீணா என்னை மிஸ் பண்ணிட்டேன்னு நான் கைவிட் டுப் போனதுக்கு அப்புறம் ஃபீல் பண்ணக் கூடாது'' எனச் சொல்லி அவளைப் பார்த்து முறுவலித்தான்.

ஆதிரனின் இந்தக் கேலியில், அவன் அன்பும் அரவணைப்பும் பதுங்கிக் கொண்டிருந்ததை உணர்ந் தாள். இது தானே அவள் எதிர்பார்த்தது!

வந்திதாவின முகத்தில் யோசனையின் ரேகை படியவும, ''ஒரு காபி போட்டுக் கொடுத்தா குடிச்சிட்டுப் போய்...'' என இடைவெளி விட்டு, ''அப்படியே மூலைல உட்கார்ந்து லேப்டாப்ல ஏதாவது பார்க்கறேன். நீ மெதுவா யோசிச்சு ஒரு நல்ல முடிவைச் சொல்லு'' எனத் தன் நீண்ட உரையை முடித்தான்.

காபி குடிச்சிட்டுப் போயிட்டு அப்புறம் வரேன் என்று சொல்வான் என எதிர்பார்த்தவளுக்கு ஆதிரன் சொன்னது அவள் இதழ்களை மலரச் செய்தது.

அதைக் காட்டிக் கொள்ள மனமில்லாமல் இறுக்கமாக இருப்பதைப் போலக் காட்டிக் கொண்டு ஒன்றும் பேசா மல் சமையலறைக்குச் சென்று காபி போடும் வேலையை ஆரம்பித்தாள் வந்திதா.

ஆதிரன் பேசி முடித்தவன், முன்னறையில் தரையில் அமர்ந்து கால்களை நீட்டிக் கொண்டு கண்களை மூடி னான். வந்திதா சற்று யோசிக்கட்டும் எனத் தனிமைக் கொடுத்து விலகியிருந்தான். இப்படித் தான் அவன் தன் காதலை அவளிடம் புரிய வைத்தது!

* * *

வந்திதாவுக்குத் தனித்திருக்கும் அந்தத் தனிமை மிகவும் பிடித்திருந்தது! காபி கலக்கும் போது சுய அலச லில் ஈடுபட்டிருந்தாள் வந்திதா.

ஆதிரனை அவளுக்குப் பிடிக்காமலில்லை. அவள் ஆதிரனை முதன் முதலில் பார்த்தபொழுதே அவன் அவளை ஈர்த்திருந்திருந்தான். அதுவும் முழுமையான அழகால்! புற அழகால் அல்ல. அவன் அழகான குடும் பத்தால்.

இரண்டு வருடங்களுக்கு முன்பு வந்திதா பெங்க ளூரு விமான நிலையத்தில் தான் அவன் குடும்பத் தினரைப் பார்த்தாள். வந்திதா படிக்கவென்று கலிபோர் னியா வந்தபொழுது அவளைத் தவிர யாரும் விமான நிலையத்திற்கு வரவில்லை.

அவள் பாட்டியை வயதான காலத்தில் அல்லாட வேண்டாம் எனக் கூறிவிட்டாள். அவள் பெரியப்பாவோ தனியாக அவ்வளவு தூரம் சென்று படிக்கப் போகும் பெண்ணிற்கு இங்கிருக்கும் விமான நிலையத்திற்குத் தனித்துச் செல்ல முடியாதா எனக் கேட்டு, யாரும் அவ ளுடன் செல்லாமல் வீட்டிலிருந்தவாறே வழி அனுப்பி வைத்தனர்.

என்னதான் அவர்கள் முன்னால் தைரியமாக இருப்ப தாகக் காட்டிக் கொண்டாலும் தனித்து விமான நிலை யம் நோக்கிப் பயணிக்கும் பொழுது கண்களில் நீர் தளும்பியது. இப்படியும் மனிதர்கள் இருப்பார்களா என்ன என மனங் கலங்கினாள்.

விமான நிலையம் அடைந்ததும் தன் உடைமைகளை எடுத்துக் கொண்டு நடக்கும் பொழுது தான் ஆதிரனின்



குடும்பம் அவள் கண்களில் பட்டார்கள். அனைவரும் கூட்டமாக நின்று வருவோர் போவோரின் கவனத்தை ஈர்த்தவண்ணம் இருந்தனர்.

ஒரு சிலர் வந்திருந்தால் கவனித்திருக்க மாட்டாள். ஆனால் ஒரு குட்டிக் கிராமமே வந்திருக்கும் போல என எண்ணும் அளவுக்கு மனிதர்களைப் பார்த்ததும் தனித்து வந்திருந்தவள் வியந்தாள்.

அவள் நினைத்ததை உறுதிப் படுத்துவது போல, ''ஏம்பா! இப்படி மொத்தக் குடும்பமும் எல்லா இடத் துக்கும் போயிட்டு இருந்தா எல்லோரும் நம்மைக் குட்டிக் கிராமம் வந்துட்டாங்கன்னு கிண்டல் பண்ணாம என்ன செய்வாங்க?'' எனச் சீண்டலான குரலில் ஒருவன் பேசு வது அவள் காதில் விழுந்தது. அவன் தான் ஆதிரன் எனப் பின்னர் தெரிந்து கொண்டாள்.

''ஆதி! எங்க போனாலும் எல்லோரும் ஒரே குடும் பமா போனாத்தான் சந்தோஷமா இருக்கும். இல் லைன்னா குழந்தைகளை, பெரியவங்களை விட்டுட்டு வந்துட்டோம்... அவங்க ஒழுங்கா சாப்பிட்டாங்களா தூங்கினாங்களா... இல்லை, குழந்தைங்க குறும்புப் பண் ணாம இருப்பாங்களா... என இருக்கிற சூழ்நிலையை மறந்துட்டு சந்தோசத்தையும் அனுபவிக்காம வீணா மனசு அல்லாடும்.

இப்படி எல்லோரும் வெளியே வந்தா குழந்தைகளுக் கும் ஒரே குஷியா இருக்கும். பெரியவங்களுக்கும் உற் சாகமா இருக்கும். வீட்டுக்குள்ளேயே எதுக்கு அவங் களை அடைச்சி வைக்கணும்'' எனப் பெரியவர் பதில் தந்தார். அவர் தான் ஆதிரனின் தந்தை என ஊகித்துக் கொண்டாள்.

மற்றவர்களின் உரையாடலை ஒட்டுக் கேட்கும் ரகம் இல்லை வந்திதா. தான் உண்டு தன் வேலை உண்டு என்றிருப்பவள். ஆனால் ஒரே குடும்பத்தில் உள்ள அனைவரையும் ஒரே இடத்தில் பார்த்ததும் கலங்கியிருந்த மனதுக்கு இதமாக இருந்தது.

நின்று அவர்களை ஆசை தீரக் கண்களில் பருகிக் கொண்டிருக்கும்பொழுது தான் ஆதிரனின் சீண்டலும் அவன் தந்தையின் விளக்கமும், அதுவும் தமிழில் பேசியதும் காதில் விழுந்தது.

ஆதிரனின் தந்தை தந்த விளக்கம் வந்திதாவுக்கு சுவாரசியத்தை உண்டு பண்ணியது. அவன் குடும்பத்தாரின் செய்கை அவளுக்கு ஆறுதலாகவும் இருந்தது. மேலே செல்ல நினைத்தாலும் அவள் கால்கள் நின்ற இடத்தில் இருந்து அகலாமல் பசை போட்டு ஒட்டிக் கொண்டன.

அவள் பைகளில் எதையோ தேடுவதைப் போல அங்கேயே நின்று கொண்டு மேலும் ஆதிரனின் குடும்பத்தார் நடத்தும் பாசப் போராட்டத்தை நேசத்துடன் கவனித்தாள்.

ஆதிரனின் குடும்பத்தார் சின்னவர்களில் ஆரம்பித்துப் பெரியவர்கள் வரை ஒவ்வொருவராக ஆதிரனுக்கு விடை கொடுக்க, 'அடடா! ஃபிளைட் ஏற ரெண்டு செக்யூரிட்டி லைனைத் தாண்டனும் எனத் தெரியாமப் போச்சே' என ஆதிரன் அவர்களைக் கிண்டல் அடித்தது இன்றும் அவள் நினைவிலிருந்தது.

என்ன தான் கிண்டல் அடித்தாலும், ஒவ்வொருத்தரிடமும் தனித் தனியே பிரியா விடை பெற்றுக்



கொண்டுதான் அவ்விடத்தை விட்டு அகன்றான் என்பது வேறு விஷயம்.

''உடன் பிறப்ஸ்! நான் ஊர்ல இல்லைன்னு அம்மா - அப்பா கிட்டே ஓவரா செல்லம் கொஞ்சாதே சொல்லிட்டேன். ஒழுங்கா உன் குழந்தைகளை மட்டும் கொஞ்சற வழியைப் பாரு'' எனக் கூடப் பிறந்த இரட்டைச் சகோதரியை வம்புக்கு இழுத்து அவள் கண்ணீருடன் முறைத்தது இன்றும் வந்திதாவின் கண்களில் படமாக ஓடியது.

ஆதிரனின் அண்ணிகளிடம், ''அண்ணீஸ்! நான் போனதும் என்னை ரொம்ப மிஸ் செஞ்சு அழுவாச்சியா அழாதீங்க. நீங்க ம்ம்ம்ன்னு சொன்ன உடனேயே ஓடோடி வந்துடறேன்'' என்றான் ஆதிரன்.

''அப்போ என்ன சொன்னா ஓடிப் போவீங்க?'' என ஒரு அண்ணி சந்தேகம் தெளிவுறக் கேட்டாள். சூழ்நிலையை சகஜமாகக் கேட்கும் கேள்வி என்பது அவள் குரலில் நிரம்பி வழிந்த நேசமே பறைசாற்றியது. ஒட்டுக் கேட்டிருந்த வந்திதாவுக்கே அது புரிந்தது என்றால் ஆதிரனுக்கா புரியாது?

''அண்ணி! இப்போ இப்படித்தான் கிண்டல் பண்ணுவீங்க. ஆனா, நான் அந்த சைடு போனவுடனேயே குப்புறப்படுத்துட்டு ஒன்னு அழுவீங்க. நீங்க போன தடவை அப்படிப் பண்ணினதை அண்ணன் வீடியோ எடுத்து எனக்கு அனுப்பி வச்சார்'' எனக் கூறி தன் அண்ணனை மாட்டி விட்டான்.

''உனக்கு ஏன்டா ஊருக்குக் கிளம்பறப்போ இந்த நாரதர் வேலை?'' என ஒரு அண்ணன் முதுகில் ரெண்டு

வைத்ததும், ''ப்ரியா! உன்னோட அண்ணி பார் எவ்வளவு பாசமா இருக்காங்க உன் மேலேன்னு சொன்னதை இப்படி மாத்திப் பத்த வைக்கிறான்'' எனச் சமாதானம் செய்ததும் ஞாபகம் இருந்தது.

''ப்ரீ அண்ணி! நான் அதுக்காகச் சொல்லலை. நீங்களும் அழுதா அப்புறம் அம்மாக்கு யாரு சமாதானம் சொல்லறது?'' என ஆதிரன் நெகிழ்ந்ததும், மற்றொரு அண்ணியோ, ''நீங்க இல்லாம குழந்தைங்கதான் ரொம்ப ஏங்கிடுவாங்க'' என்றாள் தழுதழுத்தவாறே.

அப்போ அங்கே வந்த ஒரு வாண்டு, ''சித்தப்ஸ்! சீக்கிரம் போய் ஃபிளைட் ஏறுங்க. உங்களை விட்டுட் டுப் போயிடும்'' என்றான் மொத்தப் பற்களையும் காட்டி.

''இதுதான் ஏங்கறதா உங்களுக்கு?'' என இன்னொரு அண்ணியிடம் முறைத்தவன், ''சித்தப்ஸ் ஊருக்குப் போறதுல உங்களுக்கு எல்லாம் அவ்வளவு சந்தோஷமா?'' எனக் கேட்டான்.

அச்சிறுவனும், ''நீங்க ஊருக்குப் போய் எங்களுக்கு டாய்ஸ், சாக்லேட் எல்லாம் வாங்கிட்டு வருவீங்களே. ஃப்ளைட் மிஸ் பண்ணினா எப்படி வாங்கிட்டு வரமுடியும்?'' என்று நடைமுறையை எடுத்துரைத்தான்.

''நீங்க ஒண்ணுமே வாங்கிக் கொடுக்கறதே இல்லையா அண்ணாஸ். இப்படிச் சின்னப் பசங்களைக் கொடுமைப்படுத்தி ஏங்க வைக்கலாமா. டூ பேட்... இந்த சித்தப்ஸ் இல்லைன்னா இவங்க நிலைமை என்னாகறது? ஐயகோ!'' என அண்ணன்களிடம் நாடக வசனம் பேசினான்.



அதற்குப் பாராட்டாக முதுகில் அடிகளை வஞ்சனையில்லாமல் இரு அண்ணன்களிடமிருந்தும் பெற்றுக் கொண்டு தன் அன்னையிடம் நகர்ந்தான்.

ஆதிரனின் அன்னை அவன் நெற்றியில் இதழ் பதித்தவாறே, ''ஆதிரா! படிக்கறதுக்குப் போகணும்ன்னு அடம் பிடிச்சுப் போன. இப்போ வேலையும் அங்கே தான் பார்க்கணுமாப்பா. இங்கேயே இருக்கக் கூடாதா'' எனக் கண்ணீருடன் கேட்டதும்,

''அம்மா! உங்ககிட்டே எத்தனை தடவை சொல்லறது என்னை ஆதிரன் எனக் கூப்பிடுங்கன்னு. அது என்னப் பொண்ணு மாதிரி ஆதிரா?'' என அவன் தாயின் கேவலுக்கு வேண்டிய பதிலைத் தராமல் குறை கண்டுபிடித்ததும் வந்திதாவின் நினைவில் இப்போதும் புரண்டது.

ஆதிரனின் அண்ணன்கள், ''அம்மா இதெல்லாம் அநியாயம். உங்க கூடவே ரெண்டு பசங்க, ஒரு பொண்ணு குத்துக் கல்லாட்டம் இருக்கோம். எங்களை எல்லாம் விட்டுட்டு வெளிநாடு போயே தீருவேன்னு நிற்கிறவனிடம் உங்கப் பாசத்தைப் பொழியறீங்களே!'' எனத் தங்கள் அன்னையிடம் குறைபட்டுக் கொள்ள,

''போங்கடா! உங்களுக்கு எல்லாம் கல்யாணம் ஆயிடுச்சு. உங்களைப் பார்த்துக்கத்தான் ஒரு ஆளு வந்தாச்சே. ஆனா, ஆதிராக்கு அப்படியா? நான் தானே அவனைக் கவனிச்சுக்கணும்' என மீண்டும் கண்ணீர் வடித்ததும், அவரின் தாயுள்ளம் படும் வேதனையை உணர்ந்து கண்ணீர் வந்தது, ஆதிரனுக்கு அல்ல! வந்திதாவிற்கு.

''அம்மா! டோன்ட் வொர்ரி! நான் வேணா அங்கேயே ஒரு பொண்ணைப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக்கறேன். பிரச்சனை தீர்ந்துடும்'' என ஆதிரன் பதில் சொன்னதும், ஆதிரனின் அன்னைக்குக் கோபம் வந்ததோ இல்லையோ வந்திதாவுக்குச் சுறுசுறுவெனக் கோபம் வந்தது.

இப்படி மனபாரம் தாங்காமல் அழுபவரிடம் கிண்டலடிக்கிறானே என நினைத்துத்தான். ஆனால் அவள் சற்றும் எதிர்பார்க்காத விதத்தில் அவன் அன்னை, ''டேய் படவா! இப்பவே உனக்குக் கல்யாணம் கேட்குதா? அப்படி எல்லாம் எங்களுக்குத் தெரியாம பண்ணின... பிச்சிப் போடுவேன் பிச்சி'' என்றார் ஒரு விரலில் எச்சரிக்கை விடுத்து, கண்களை உருட்டியவாறு.

''அப்போ உங்களுக்குத் தெரிஞ்சே கேட்கிறேன். நீங்க எனக்கு முத்தம் தந்ததைப் பொறாமையோட அங்கே ஒரு பொண்ணுப் பார்த்துட்டு, 'நீங்க மட்டும் எப்படி முத்தம் தரலாம்? நானும் தருவேன்'னு வந்து லைன்ல நிக்கறா. அவளுக்கு எந்தக் கன்னத்தைக் காட்டட்டும்?'' என்றான் படுதீவிரமாக.

அவன் கேலியை உணர்ந்த அவன் அன்னை, ''எந்தக் கன்னத்தை வேணா காட்டு. ஆனா, வலிக்குதுன்னு இந்த அம்மாகிட்டே வந்து அழக்கூடாது சொல்லிட்டேன்'' என்றார் புன்னகையுடன்.

''இது நல்ல அம்மாக்கு அழகு! இப்படிச் சிரிச்சு வழியனுப்பறதை விட்டுட்டு அழுமூஞ்சி அழகம்மா மாதிரி இருந்தா உங்கச் சின்னப் பையனோட பெரிய மனசு தாங்காது'' என அவரின் நெற்றியில் தன் மண்டையை வைத்து ஒரு முட்டு முட்டி அவரை மேலும் மலரச் செய்தான்.



ஆதிரன் தன் குடும்பத்தாரைக் கேலி என்ற போர்வையில் சமாதானம் செய்து கொண்டிருந்ததைப் பார்த்து நெகிழ்ந்தாள் வந்திதா.

ஆதிரன், அவன் குடும்பத்தினரிடம் இருந்து விடை பெற்று அகலும் முன்னால் அவன் பாட்டியைப் பார்த்து, ''வரேன் எங் லேடி. ரொம்ப வெயில்ல அலையாதீங்க. அப்புறம் உங்க முகப் பொலிவு கெட்டுடும்'' எனக் கிண்டலடித்து,

அவரின், ''படவா ராஸ்கல்... கிளம்பறப்போ கூட உன்னோட குசும்பு குறையலையே'' என்ற பாராட்டையும் அள்ளிக் கொண்டு தான் நகர்ந்தான்.

அவர்களின் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த வந்திதாவிற்கோ தானும் அந்தக் குடும்பத்தில் ஓர் அங்கமாகி விட்டதைப் போல இருந்தது.

'பேச்சுக்கே இப்படி என்றால் தினம் தினம் இவர்களுடன் பொழுதைக் கழிக்க நேர்ந்தால் எப்படி இருக்கும்? அன்பு வெள்ளத்தில் அல்லவா சிக்கி மூழ்கிவிடுவோம்' எனத் தோன்றும் அளவுக்கு அவர்களின் அன்னியோன்யம் பிடித்திருந்தது.

எந்நேரமும் பாசமும் நேசமும் புரள, அன்பும் அரவணைப்பும் தவழ என வாழ்வதற்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டும் என ஏக்கப் பெருமூச்சு விட்டுக் கொண்டு தன் வழி(லி)யில் பயணித்தாள்.

சிங்கப்பூர் போய்ச் சேரும் வரை ஆதிரனின் குடும்பம் தந்த இதமான சூட்டில் குளிர் காய்ந்து அந்த கதகதப்பில் முழுவதுமாக முடங்கிக் கொண்டாள்.

மறுபடியும் சிங்கப்பூரில் விமானம் ஏறிய பின்னர் தன் பக்கத்து இருக்கையில் இருந்த ஆதிரனைப் பார்த்ததும் அவள் மனம் கும்மாளமிட்டது. ஏதோ அவன் குடும்பத்தில் அவளும் ஒரு அங்கமாகி விட்டதைப் போல!

வந்திதா ஆதிரனிடம் நட்பை வளர்த்துக் கொள்ள விரும்பி அவனுடன் பேச, ஆதிரனோ எப்போதும் போல அவன் இயற்கைக் குணத்தைக் காட்டினான். ஆதிரன் அப்படித் தான் எனத் தெரிந்ததால் அதைச் சகித்துக் கொண்டாள்.

ஆனால், நேரம் ஆக ஆகத்தான் அவளுக்கு ஒன்று புரிந்தது. ஆதிரன், அவன் குடும்பத்தாரிடம் காட்டிய சீண்டலில் ஒட்டிக் கொண்டிருந்த நேசமும், பாசமும், அரவணைப்பும் இவளைச் சீண்டும் பொழுது சுத்தமாக இல்லை என்று.

அதை உணர்ந்து காயப்பட்டுப் பரிதவித்தாள். அந்தத் தவிப்புடனே அவள் தன் மாய உலகில் இருந்தும் தூக்கி வெளியே எறியப்பட்டாள்!

வந்திதாவுக்கு ஆதிரன் மேல் எதிர்பார்ப்பு மிகுந்திருந்ததால் ஏமாற்றமும் மிகுந்திருந்தது. அவளின் ஏமாற்றத்துடன் இயலாமையும் சேர்ந்து கொள்ள, தொட்டதற்கெல்லாம் ஆதிரன் மேல் கோபமாக வெடிக்க வைத்தது.

கண்ணீர் ஒருத்தரை பலவீனமாக்கும் எனப் புரிந்துத் தன் கண்ணீரைக் கோபமாக மாற்றி அதைக் கேடயமாகவும் ஆக்கிக் கொண்டாள்.

இப்பொழுது என்னவென்றால், இரண்டு வருடங்களுக்கு முன்னால் வந்திதா எதிர்பார்த்திருந்த அந்த



நேசத்தைத் தருகிறேன் அதுவும் நட்புடன் சேர்த்து மனைவி என்ற உரிமையையும் தருகிறேன். வருகிறாயா என ஆதிரன் வந்திருக்கிறான்.

ஆதிரனை நம்புவதா வேண்டாமா என்ற கேள்வி அவளைக் குடைந்தது. கேள்விக்குப் பதிலாக இவன் குடும்பத்தை வைத்துப் பார்த்தால் நம்பலாம் எனத் தோன்றுகிறது என்றது அவளின் ஆசை கொண்ட மனது!

இப்படித் தான் வந்திதா பூட்டியிருந்த தன் மனதை நம்மிடம் திறந்து காட்டியது!

* * *

பழைய ஞாபகங்களில் இருந்து வெளியே வந்தவள் காபியை கப்பில் ஊற்றினாள். ஆனால் மனம் மட்டும் இன்னும் ஆதிரனுக்கு என்ன பதில் சொல்வது என அதன் வேலையைச் செய்து கொண்டிருந்தது.

காபியைக் கையில் ஏந்திக் கொண்டு நடந்தவள், நினைவு வந்தவளாக, 'ஆ... இதை எப்படி மறந்தேன்' என முணுமுணுத்தவாறே காபியை ஆதிரனிடம் தந்தாள்.

''தேங்க்ஸ்'' என வாங்கிக் கொண்டவனிடம், ''உங்களுக்குத் தெரியுமோ தெரியாதோ எனக்குக் கல்யாணத்துக்கு அப்புறம் இந்தியா போகணும். அங்கே போய் சந்தோஷமா ஒரே குடும்பமா இருக்கணும். ஆனா உங்களுக்கு இங்க இல்ல செட்டில் ஆகணும். அப்புறம் எப்படி?'' என்றாள்.

''அப்படின்னா உனக்குச் சம்மதமா? ஹுர்ரேய்...'' எனக் குதூகலித்துத் துள்ளி எழுந்தான்.

''நான் எப்போ சம்மதம் சொன்னேன்?'' எனக் குழம்பினாள் வந்திதா.

''நீ இப்போ தானே சொன்ன. கல்யாணத்துக்கு அப்புறம் உனக்கு இந்தியா போகணும்ன்னு. அப்படின்னா சம்மதம் தானே?'' என்றவன், அவளைப் பேச விடாமல் தொடர்ந்தான்.

''உடனே இந்தியாக்குக் கிளம்பிடறேன் வது. எனக்கு அடுத்த வேலை கிடைச்சு செட்டில் ஆகற வரைக்கும் ஒரு ஆறு மாசம் டைம் கொடு. அப்புறம் கல்யாணத்தை வச்சுக்கலாம். உனக்குத் தெரியும் எனக்கு ரெண்டு அண்ணன்கள், ஒரு ட்வின் சிஸ்டர் இருக்காங்க. எல்லோருக்கும் கல்யாணம் ஆயிடுச்சு'' என்றான் காபியைப் பருகியவாறே.

''எனக்குத் தெரியும்'' என்றாள் வந்திதா.

''ஓஹ்... நான்தான் முன்னாடியே சொல்லியிருக்கேனே'' என அவன் சொல்ல, ''இல்லை... நான் உங்க எல்லோரையும் ரெண்டு வருஷத்துக்கு முன்னாடிப் பார்த்திருக்கிறேன்'' என அவள் பார்த்ததைத் தன் ஏக்கம் தவிர்த்துச் சொன்னாள்.

''ஓஹ் அப்படியா, சொல்லவேயில்லை?'' என வியப்புடன் வினவியவன், ''சொல்ல நான் சந்தர்ப்பம் தரலை'' என பதிலும் தந்தான்.

''என் குடும்பத்தைப் பத்தி முதல்ல சொல்லிடறேன். பெங்களூர்ல ஒரே அபார்ட்மென்ட்ல, ஒரே ப்ளோர்ல தனித் தனியா அஞ்சு வீடு கட்டி எல்லோரும் தனித் தனியா இருக்கிறாங்க. என் பேர்ல இருக்கிற வீட்டை இப்போதைக்குக் குழந்தைங்க விளையாடற வீடா மாத்தி வச்சிருக்கோம்'' எனச் சொன்னதும் வந்திதாவின் முகம் சோர்வடைந்தது.



''அப்பா - அம்மா, பாட்டி ஒரு வீட்ல, அண்ணன்கள் தனித் தனி வீட்ல இருக்காங்க. சிஸ்டர் குடும்பம் ஒரு வீட்ல இருக்கிறாங்க. இத்தனை பேரும் ஒரே வீட்ல இருக்க முடியாதே. ஆனா, தினமும் நைட் டின்னருக்கு ஒவ்வொருத்தர் வீட்ல கூடுவோம்.

வீக் எண்டு அம்மா - அப்பா கூட எல்லோரும் டேரா போடுவோம். அப்படி இருந்தா கூட்டுக் குடும்பமா இருந்த மாதிரியும் இருக்கும் தனிக் குடித்தனம் போன மாதிரியும் இருக்கும்.

வீட்டுக்கு வந்த மருமகள்களை மனசு ஏங்க வைக்கக் கூடாதுன்னு அம்மா - அப்பா ரெண்டு பேரும் சேர்ந்து எடுத்த முடிவு இது. அவங்கவங்க விருப்பத்திற்கு ஏற்ற மாதிரி வீட்டை வச்சுக்கலாம் பாரு.

பகல் நேரம் அண்ணன் - அண்ணிங்க வேலைக்குப் போயிடுவாங்க. அதனால ஸ்கூல்ல இருந்து குழந்தைங்க வந்தா நைட் வரைக்கும் அம்மா - அப்பாகிட்டே இருப்பாங்க.

தூங்கறதுக்கு மட்டும் அவங்க அவங்க ரூமுக்குப் போற மாதிரி அவங்க அவங்க வீட்டுக்குப் போயிடுவாங்க. நம்ம போனாலும் அப்படித் தான்'' என்ற விளக்கத்தில், சோர்ந்திருந்தவள் மீண்டும் தேர்ந்து விட்டாள்.

ஆதிரன் தந்த காதலின் விளக்கத்தை விட அவன் குடும்பம் பற்றிய விளக்கத்தில் மனம் இளகிய வந்திதா உள்ளே சென்ற குரலில், ''ஆனா, என்னைக் கல்யாணம் பண்ணிக்கப் போறவர் பத்தி நிறைய கனவு இருந்தது. அதுல ஒண்ணு கூட உங்ககிட்டே இல்ல.

உதாரணத்துக்கு என்கிட்டே கல்யாணம் பண்ணிக்கக் கேட்கிறப்போ ஆசையா ரோஸஸ் கொடுத்துக் கேட்கற மாதிரி...'' என மேலே முடிக்காமல் நிறுத்தினாள்.

''அதுலேயும் சொதப்பிட்டேனா? வது, நீ சம்மதிச்சா அந்தப் பூ கொடுக்கறதுல அர்த்தம் இருக்கும் இல்லைன்னா பூ வேஸ்ட் ஆயிடும் தானே'' எனச் சொன்னவன் வந்திதா முறைக்கவும், 'ஆஹா! ரூட்டை மாத்துடா ஆதி' எனத் தனக்குத் தானே கட்டளையிட்டுக் கொண்டான்.

'''பூ'ங்கிற லஞ்சத்தைக் கொடுத்து உன்னை என் பக்கம் திருப்ப இஷ்டமில்லை. எனக்கு லஞ்சம் கொடுத்தாப் பிடிக்காது'' என மீண்டும் தன் இயல்பு நிலைக்குத் திரும்ப, வந்திதாவின் முகம் தெளிவடையாமலிருப்பதைப் பார்த்தான்.

''வது இது தான் நான்! எப்பவும் இயல்பா இருப்பேன். என் மனசுக்குப் பட்டதைச் செய்வேன். யாருக்காகவும் நடிக்க மாட்டேன். உனக்குப் பூ கொடுத்துச் சொல்லணுங்கறதை விட உன்கிட்டே சொல்லி உன் சம்மதத்தை வாங்கறது தான் முக்கியமாப் பட்டது'' என்றான் விளக்கமாக.

''அடிக்கடி 'வெரி ஃபன்னி'ன்னு சொல்லிட்டுச் சிரிப்பீங்களே எனக்கு அது சுத்தமா பிடிக்காது. அதை நீங்க மத்தவங்க எரிச்சல்ல இருக்கப்போவும் சொல்லி இன்னும் எரிச்சல் படுத்துவீங்க'' என்றாள்.

''அப்படியே பழகிட்டேன்ம்மா. வேணா அப்படிச் சொல்லறதைக் குறைச்சுக்கறேன். அதோட உன்னைச் சீண்டறதையும் கம்மி பண்ணிக்கறேன். அதே மாதிரி



எனக்காக நீயும் ஒண்ணை மட்டும் விட்டுக் கொடு. உன்னோட பயத்தை! எனக்கு அது மட்டும் போதும்.

அதைத் தவிர எனக்காக எதையும் மாத்திக்க வேண்டாம். ஒருத்தருக்காக இன்னொருத்தர் மாறிட்டே இருந்தா அப்புறம் நாம் இயல்பா இருக்க முடியாது. ரெண்டு பேரும் அப்படியே ஒருத்தரை ஒருத்தர் ஏத்துப்போம்'' என மீண்டும் நீளமாகப் பேசினான்.

''நம்ம ரெண்டு பேருக்கும் ரசனைகள் எதுவுமே ஒத்துப் போகாதே...'' என முடிக்காமல் இழுத்தாள் வந்திதா.

வந்திதா கேள்வி கேட்க ஆரம்பித்தவுடனேயே ஆதிரன் புரிந்து கொண்டான். வந்திதாவுக்கும் அவனைத் திருமணம் செய்து கொள்ள விருப்பம் இருப்பதை.

அப்படி இஷ்டம் இல்லையென்றால் இவ்வாறு கேள்விக் கணைகளைத் தொடுத்துக் கொண்டிருப்பாளா அல்லது ஆதிரனை நிற்க வைத்துப் பேசிக் கொண்டிருப்பாளா? வீட்டுக்குள் வந்தவுடன் கொடுத்த அறையை மற்றொரு கன்னத்திலும் கொடுத்து, போடா என்றிருப்பாள்.

அதனால் ஆதிரன் முடிந்த அளவு யோசித்து அவளுக்கு விளக்கம் தந்து கொண்டிருந்தான்.

''ரொம்ப நல்லதாப் போச்சு. ரெண்டு பேருக்கும் ஒரே மாதிரி சிந்தனைகள், கருத்துக்கள், ரசனைகள் இருந்தா அப்புறம் எப்படி ஒருத்தருக்கு ஒருத்தர் விவாதம் செய்யறது? எப்படி ஒருத்தர்கிட்டே இருந்து ஒருத்தர் கத்துக்கறது? எப்படிப் புது விஷயங்களைப் பத்தித் தெரிஞ்சுக்கறது?

அந்த விஷயத்துல நாம ரெண்டு பேருமே லக்கி. வாழ்க்கை முழுக்க ஒருத்தர்கிட்டே இருந்து இன்னொருத்தர் கத்துக்கிட்டே இருக்கலாம் பாரு'' என்றான், என்னவோ அவள் சம்மதம் தெரிவித்ததைப் போல.

''எனக்குக் குழந்தைகளைத் தத்து எடுத்து வளர்க்கணும்...'' என அவள் மேலும் தொடரும் முன்னர்,

''எனக்குத் தெரியும் வது! எனக்கும் பரிபூரண சம்மதம்டா. உன்னோட இந்தக் கண்டிஷனை கேட்டா அம்மா ரொம்ப சந்தோஷப்படுவாங்க. நான் பிறக்கறதுக்கு முன்னாடி ஒரு பொண்ணைத் தத்தெடுக்க நினைச்சாங்களாம். அதுக்குள்ளே தர்ஷினியும் நானும் பிறந்துட்டோம்.

எங்களை வளர்த்து ஆளாக்குறதுக்குள்ளே அம்மாக்கு உடம்பு முடியாமப் போயிடுச்சு. அப்புறம் வயசாயிடுச்சுன்னு விட்டுட்டாங்க. அவங்களோட ஆசை ஈடேறவே இல்லை. உன்னால அது நடந்ததுன்னா ரொம்பவுமே சந்தோஷமடைவாங்க'' என்றான் ஆதிரன்.

அவள் மேலும் தொடரும் முன்னர் ஆதிரன் கைப்பேசி அவனை அழைத்தது. பேசியது அவன் அன்னை!

ஆதிரன் அதை ஸ்பீக்கர் மோடில் போட்டவன் தன் அன்னையிடம் பேச ஆரம்பித்தான். ''ஆதி கண்ணா! நாங்க அனுப்பின போட்டோ பார்த்தியா? பார்த்துட்டுக் கூப்பிடுவேன்னு நினைச்சா கூப்பிடவே இல்லை. நீ கலிபோர்னியா திரும்பிட்டியா? சொல்லுப்பா அந்தப் பொண்ணைப் பிடிச்சிருக்கா'' எனக் கேள்விகளை அடுக்கினார்.

''வந்து... அம்மா... எனக்கு என்னமோ அந்தப் பொண்ணுகிட்டே ஏதோ மிஸ்ஸிங்ன்னு தோணுது''



எனச் சொன்னவாறே வந்திதாவிடம் 'ஒன்றும் சொல்லாதே' என அவன் உதட்டின் மேல் விரலை வைத்து சைகை செய்தான்.

ஆனால் வந்திதாவின் முகபாவனையில் இருந்தே அவள் அதைக் கேட்கப் போவதில்லை என உணர்ந்து, விரைந்து அவளருகில் சென்றவன், வந்திதா, 'பொய்' என வாயைத் திறந்து கத்தப் போக, அவள் வாயை மறு கையால் மூடினான்.

''அப்படிச் சொல்லாதடா! பொண்ணு தங்கமான பொண்ணாம்'' என ஆதிரனின் அன்னை மறுமுனையில் முடிக்கும் முன்னர்,

''அப்போ உரசிப் பார்த்துடலாம்'' என அன்னைக்கு பதில் சொல்லிக் கொண்டே வந்திதாவைப் பார்த்துக் கண்ணடித்தான்.

கிடைத்த சந்தடி சாக்கில் கைப்பேசியைக் கீழே வைத்துவிட்டு வந்திதாவை வளைத்துத் தன் கையிருப்பில் வேறு வைத்துக் கொண்டான். ஆதிரனின் அன்னைப் பேசுவதில் காட்டிய சுவாரசியத்தில் ஆதிரனின் அணைப்புக்குள் இருப்பதை வந்திதா உணர்ந்தாளில்லை.

''விளையாடாதே ஆதி. வந்திதாக்கு ஒரு பெரிய குடும்பத்துல வாக்கப்படத் தான் ஆசையாம். இந்தக் காலத்துல யாரு அப்படி எல்லாம் யோசிக்கறாங்க? கூடப் பிறந்தவங்க யாரும் இருக்கக்கூடாது. தனிக் குடித்தனம் போகணும்ன்னு கல்யாணத்துக்கு முன்னாடியே கண்டிஷன் போடறாங்க.

ப்ளீஸ் கண்ணா! நல்லா யோசிச்சு ஒரு நல்ல முடிவாச் சொல்லு. அம்மா - அப்பா இல்லாத பொண்ணுடா!

நம்ம பொண்ணா வச்சுப் பார்த்துக்குவோம்'' என வந்திதாவைத் தங்கள் வீட்டு மருமகளாக்கிக் கொள்ள ஆர்வம் காட்டினார் அன்னை.

'ம்ம்ம்... அதுக்கு இந்தப் பொண்ணு தான் கிடைச்சாளா...' என அவன் சலித்துக் கொள்ள, அவள் வாயை மூடியிருந்த ஆதிரனின் கையைக் கடித்து வைத்தாள் வந்திதா. அவன் 'ஆ' என அலறிக் கையை உதற அவளும் அவன் பிடியிலிருந்து நழுவினாள்.

அவனிடம் இருந்து தப்பியவள், ''அத்தை, அவரை நம்பாதீங்க. நான் வந்திதா தான் பேசறேன். என்கிட்டே வந்து அவர் சம்மதத்தைச் சொல்லிட்டு உங்ககிட்டே பொய் சொல்லறாரு. அத்தோட என்னையும் பேசவிடாம வாயை அடைச்சுட்டார்'' என மகனை அன்னையிடம் போட்டுக் கொடுத்தாள்.

அவனைப் போட்டுக் கொடுக்கும் போதே அவள் தன் சம்மதத்தையும் அவள் அறியாமலேயே மறைமுகமாக உணர்த்தியது ஆதிரனுக்கு சந்தோஷமளித்தது. ஆனாலும் ஒன்றும் சொல்லாமல் இருந்தான்.

''படவா ராஸ்கல்! உன்னோட விளையாட்டுத் தனத்தை எதுலதான் காட்டறதுன்னு இல்லை. ஆமா, அதுக்குள்ளே வந்திதாவை எப்படிக் கண்டுபிடிச்ச?''

வந்திதாவை எப்படித் தெரியுமென ஆதிரன் தன் அன்னையிடம் விளக்க, ''அப்பாடா! இப்போ தான் நிம்மதியா இருக்கு. வந்திதா, உனக்குச் சம்மதமாம்மா?'' என அவளின் சம்மதத்தைக் கேட்டார்.

''இவரைப் பார்த்தப்போ கூட சம்மதிக்கவா வேண்டாமான்னு யோசனையா இருந்தது. உங்ககூடப் பேச



ஆரம்பிச்சவுடனேயே போனா போகுது. இவருக்கு வாழ்க்கை கொடுக்கலாம்ன்னு மனசைத் தேத்திக்கிட்டேன் அத்தை'' எனத் தன் சம்மதத்தை நேரடியாகக் கூறி ஆதிரனை திக்குமுக்காட வைத்தாள்.

அவள் பதிலில் மறுமுனையில் இருந்த பெரியவர் சிரிக்க, அவளருகில் இருந்த ஆதிரனோ அவளை மீண்டும் இழுத்து அணைத்து, 'வாழ்க்கையா கொடுக்கிற?' என அவள் காதருகில் கிசுகிசுத்தவன், அவள் கழுத்தில் தன் முகத்தைப் புதைத்தான்.

அவனின் தீண்டலின் சீண்டலில் தடுமாறியவள், ''அத்தை! அவர் உங்ககிட்டே ஏதோ சொல்லணுமாம்'' என ஆதிரனை மீண்டும் அவன் அன்னையிடம் மாட்டி விட்டாள்.

''என்னடா ஆதி! சொல்லுப்பா'' என அவன் அன்னை தூண்ட, ''அது... வந்து... அம்மா!'' எனத் திணறியவாறே வந்திதாவை முறைத்தவன், 'உன்னைப் பேசவே விடக்கூடாது. உன் வாயை அடைக்க எனக்கு வேறு வழி தெரியும். அப்புறம் காட்டறேன்...' என வந்திதாவின் காதில் முணுமுணுத்தான்.

பின்னர் தன் அன்னையிடம், ''கல்யாணத்தைக் கொஞ்சம் தள்ளி ஒரு ஆறு மாசம் கழிச்சு வச்சுக்கலாமா?'' எனக் கேட்டான்.

''அவ்வளவு நாளா? ஏன்? கல்யாணத்துக்கு அப்புறம் நீங்க இங்க தானே இருக்கப் போறீங்க?'' எனப் பெரியவர் ஆவலுடன் கேட்க,

ஆதிரன் பதில் கூறும் முன்னால், ''அத்தை! கண்டிப்பா எங்களுக்கு அங்க வந்து இருக்கத் தான் ஆசை.

ஆனா, கல்யாணம் முடிஞ்சு ஒரு ஒன்றரை வருஷம் பொறுத்துக்கோங்க அத்தை. அவருக்கு முக்கியமான ப்ராஜெக்ட் முடிக்கணும் அத்தோட எனக்கும் உடனே வேலையை விட முடியாது.

ஆனா, கண்டிப்பா இன்னும் ரெண்டு வருஷத்துல அங்க வந்துடறோம். வந்து, 'ஏன்டா இவங்களை வரச் சொன்னோம்' என நீங்க நினைக்கும் அளவுக்கு உங் களைத் தொல்லைப்படுத்தப் போறோம்.

இப்போவே ரெடி ஆயிடுங்க... உங்களுக்கும் கொஞ் சம் டைம் வேணும் இல்ல'' என மிகச் சாதுரியமாகப் பேசி ஆதிரனின் அன்னையைச் சிரிக்க வைத்தவள் ஆதிரனை சிலிர்க்க வைத்தாள்.

'நிஜமாகவா சொல்லற?' என ஆதிரன் கண்களால் கேட்டக் கேள்விக்கு, ''அத்தைகிட்டே சொல்லுங்க ஆதி. ரெண்டு வருஷத்துல அங்கே வந்து குதிச்சிடு வோம்னு. அதுக்கு முன்னால அத்தையும் மாமாவும் நம்ம கூட இங்க வந்து கொஞ்ச நாள் இருக்கட்டும்'' என அவன் கேள்விக்குப் பதிலாக, அவனையே அவன் அன்னையிடம் பரிந்துரை செய்ய வேண்டினாள் வந்திதா.

''பைவ் இயர் பிளான் போட்டாச்சா? எகனாமிக்ஸ் படிச்சிருக்கேன்னு அப்பப்போ நிரூபிக்கிற வது'' என உல்லாசமாக அவளைக் கிண்டலடித்தான் ஆதிரன்.

''அவளை ஏன்ப்பா சீண்டற? அவ சொல்லறதுல என்ன தப்பு?'' என அப்பொழுதே வரப்போகும் மரு மகளுக்கு விசிறியாக மாறினார் மறுமுனையில் இருந் தவர்.



''எல்லாம் நேரம் தான். நீங்க நடத்துங்க உங்க ராஜ்யத்தை. அப்புறமா அவகிட்டேயே இதைப் பத்தி எல்லாம் தெளிவா பேசிக்கோங்க அம்மா. இப்போதைக்கு எனக்கு இவகிட்டே இன்னும் கொஞ்சம் பேசணும். அத னால போனை வைக்கிறேன்'' எனக் கூறிப் பேசியை அணைத்தான்.

''வது! உனக்கு இந்தியாக்கு உடனே போக வேண் டாமா?''

''இல்ல ஆதி! நீங்க எவ்வளவு ஆசையா எதிர்பார்த் திருந்த ப்ராஜெக்ட் உங்களுக்குக் கிடைச்சிருக்கு. எனக் காக உங்க வேலையை உடனே உதறிட்டு வரச் சொல் லறது கொஞ்சம் கூட நியாயமே இல்லை. அதுவரைக் கும் நானும் இங்க வேலை பார்க்கிறேன்'' என்றாள்.

அந்த பதிலில் மகிழ்ச்சியடைந்தவன், ''தேங்க்ஸ்டா! அப்புறம்... வது, நம்ம வீட்ல சமைக்கறதுக்குப் பிரச்சனை இருக்காது. எனக்குக் கொஞ்சம் சமைக்கத் தெரியும். மீதியை நீ செஞ்சிடு. அதாவது அடுப்பைப் பத்த வச்சு சட்டியை அது மேல வச்சு எண்ணெய் ஊத்தற வரைக் கும் தெரியும். அதுக்கப்புறம் உனக்குத் தெரிஞ்ச கொஞ்ச சமையலை வச்சு மிச்சத்தைச் செஞ்சு முடிச்சிடு'' என் றான்.

அவன் கேலியாக முடிக்கவும், ''இதுதான் உங்களுக் குத் தெரிஞ்ச கொஞ்ச சமையலா?'' என இடுப்பில் கைவைத்தவாறே அவனை முறைக்க,

''சரி சரி! நான் வேணா எல்லாத்தையும் கட் பண்ணிக் கொடுக்கிறேன்'' எனப் பெரிய மனதாகச் சொல்லிச் சிரித்தான்.

ஆதிரனின் கைப்பேசி மீண்டும் அவனைத் தொல்லைப் படுத்த. அதில் ஒளிர்ந்த பிரணவின் எண்ணைப் பார்த்து மலர்ச்சியுடன் இயக்கினான்.

''ஆதி! சிகாகோ ஏர்போர்ட்ல இருந்துப் பேசறேன். என்னாச்சு உன்னோட லவ்? வந்திதா ஓ.கே. சொல்லிட்டாளா?'' எனக் கேட்டான். ஆதிரன், வந்திதாவிடம் பேச வருவதற்கு முன்னரே அனைத்தையும் தன் நண்பனிடம் ஒப்பித்துவிட்டு தான் வந்திருந்தான்.

ஆதிரன் அவனுக்கு பதில் சொல்லி அலைபேசியை வந்திதாவிடம் கொடுக்க, ''சாரி பிரணவ்! உங்களுக்குச் சங்கடம் இல்லையே?'' என்றாள் மெல்லிய குரலில்.

''நோ நோ வந்திதா! நீ உன்னோட ஆசைகளைச் சொன்ன. அதுக்கு ஏத்த மாதிரி ஆதிரனோட. குடும்பம் இருக்கு. அதனால எனக்கு ரொம்ப சந்தோசமே. வேற யாரையாவது கல்யாணம் பண்ணிக்கறதுக்கு ஆதியை பண்ணினா, பின்னாடி ஏதாவது பிரச்சனை வந்தா ஆதியை உண்டு இல்லைன்னு பண்ணிடலாம் பாரு.

உன்னோட முடிவுல அம்மா - அப்பாக்கும் ரொம்ப சந்தோஷம்'' என அவளுக்குச் சமாதானம் சொல்லிப் பேசியை ஆதிரனிடம் கொடுக்கச் சொன்னான் பிரணவ்!

''ஆதி! எனக்கு இந்த ரெண்டு நாளாவே டவுட்டா தான் இருந்தது. சிகாகோல நான் விஷாக்கோட வீட்டுக்குப் போனப்போ விட்டது தொல்லைன்னு நீ எனக்கு ஒரு போன் கூடப் பண்ணலை.

''ஆனா, இங்க நியூயார்க்ல வந்திதா கூட இருந்தப்போ எத்தனை தடவை போன் பண்ணி உருகின? அப்பவே எனக்குத் தெரிஞ்சிடுச்சு'' எனக் கேலி பேச,



''ஹி ஹி ஹி.... இதெல்லாம் நீ கண்டுக்கக் கூடாது'' என வழிந்தான் ஆதிரன்.

''ஆனா, எனக்கு இன்னுமே ஆச்சர்யமா தான்டா இருக்கு. அவளுக்கு உன்னைவிட உன்னோட குடும்பத்தை ரொம்பப் பிடிச்சிருக்கும். அதனால தான் உன்னைக் கல்யாணம் பண்ணச் சம்மதிச்சிருக்கா'' என நண்பனைத் தொடர்ந்து சீண்டினான் பிரணவ்.

''நாமெல்லாம் சூர்யா மாதிரி! 'என் வீட்டைப் பார் என்னைப் பிடிக்கும்'ன்னு பாடுற ரகம். சோ, எனக்கு இதுல ஒரு கவலையும் இல்லை'' என்ற ஆதிரன்,

''நான் உன்னை அப்புறம் கூப்பிடறேன். எனக்குப் பேச வேண்டியது நிறைய இருக்கு'' என அலைபேசியை வைக்க முயன்றான்.

''ம்ம்ம்ஹ்றஹ்! வாழ்க்கை முழுக்க வந்திதாவை பார்க் கணுமான்னு என்கிட்டே சலிச்சுக்கிட்டவங்க அதே வந்திதாகிட்டே சரணடைஞ்சுட்டாங்களா?'' என ராகம் பாடினான் பிரணவ்.

''லவ் லைப்ல இதெல்லாம் சகஜம்ப்பா! விட்டுடு'' என்றவாறே பேசியை வைத்தான் ஆதிரன்.

முகத்தில் பெரிய கேள்விக் குறியுடன் நின்று கொண்டிருந்த வந்திதாவைப் பார்த்து, ''வது! சீக்கிரமா கேட்க வேண்டிய கேள்விகளை எல்லாம் கேட்டு முடி. வெளில சாப்பிடப் போகலாம். எனக்கு ரொம்பப் பசிக்குது. ரெண்டு நாளா ஒழுங்கா சாப்பிடவே இல்லை'' என்றான்.

''வெளில வேண்டாம் ஆதி! இருக்கிறதை வச்சு நானே சமைக்கிறேன். உங்களுக்கு சூப் பிடிக்கும் தானே?

சீக்கிரம் செஞ்சிடறேன். அப்போ தானே நீங்க ட்ரெயின் பிடிச்சுக் கிளம்பச் சரியா இருக்கும். இல்லைன்னா நைட் இங்கேயே இருங்க'' எனச் சொன்னாள்.

''ஆகா வது! நீயே இங்கே இருக்கச் சொல்றப்போ நான் இங்கிருந்துக் கிளம்புவேனா?'' என அவள் அருகில் நெருங்க,

''இங்க இருங்கன்னு சொன்னது நியூயார்க் சிட்டில ஒரு ஹோட்டல்ல ஸ்டே பண்ணுங்கன்னு. நீங்க என்னன்னு நினைச்சீங்க? வெரி ஃபன்னி ஹ ஹ ஹா...'' என ஆதிரனைப் போலவே செய்து காட்டினாள். ஆதிரனின் பிடியிலும் மாட்டினாள்!

அவளை இறுக்கி அணைத்தவன், ''என்னையே நீ கிண்டல் பண்ணறியா? அப்புறம் பின்னாடி ரொம்ப ஃபீல் பண்ணுவ'' எனச் சொல்லி அவளைப் படபடக்க வைத்தான்.

அவள் முகத்தை நோக்கிக் குனிந்தவனை, மனமும் உடலும் படபடத்தாலும் கண் மூடி ஆவலுடன் எதிர் நோக்கினாள் வந்திதா.

நயகராவில் ஆதிரன் காதலுடன் தந்த முத்தத்தைத் தண்ணீரிலேயே கரைத்து விட்டவள் இப்பொழுது அவனுக்காகக் கரைந்து போய் நின்றாள். அவள் காட்டும் இந்த இணக்கம் ஆதிரனுக்குப் பிடித்திருந்தது.

சற்று நேரம் ஆசையுடன் நின்றிருந்தவள், எதிர் பார்த்தது கிடைக்கவில்லை என்றதும் கண்ணைத் திறந்து பார்த்தாள். ஆதிரனோ அவளை அணைத்தவாறே தலையைத் தட்டி யோசித்துக் கொண்டிருந்தான்.



அவன் செயலில் குழப்பமடைந்தவள் என்னவென்று வினவ, ''வது! எனக்கு ஒரு டவுட். நயகரால உன்னைக் கிஸ் பண்ணினதுக்கு இப்போ கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி கன்னம் பழுக்க வச்சியே அது மாதிரி இப்போ கிஸ் பண்ணினா ரெண்டு நாள் கழிச்சு அடுத்தக் கன்னத்தையும் பழுக்க வச்சிட மாட்டியே? ஏன்னா ரொம்ப வலிச்சது'' என்றான் தீவிரமான பாவனையுடன்.

அவன் இதழோரத்தில் ஒட்டிக் கொண்டிருந்த புன்னகை அவன் கேலியை எடுத்துரைக்க, வந்திதா அவனிடம் இருந்து விலகத் திமிறினாள்.

ஆனால் அவளை இறுக்கிப் பிடித்திருந்தவன் அவள் கண்களைப் பார்த்து அவள் முகத்தை நோக்கிக் குனிந்து அவள் எதிர்பார்த்ததை அள்ளி அள்ளித் தந்தான்.

அவன் பார்வைகள் வைத்த முத்தத்தில் அவள் கண்கள் கட்டுண்டிட, அவன் மௌனம் உரைத்த சத்தத்தில் செவிகள் கள்ளுண்டது! அவன் இதழ்கள் தந்த வெப்பத்தில் அவள் நெஞ்சம் குளிர் கண்டிட, அவன் அதரங்கள் கொண்ட அருகாமையில் அவளின் முதல் முத்தம் உருவானது! முத்தத்தின் அழுத்தம் தெரிவித்த காதலில் அவன் மனம் பித்தானது!

நயகராவில் வந்திதா மூர்ச்சையானது நினைவுக்கு வர நடுங்கிக் கொண்டிருந்தவளைத் தன் பிடியிலிருந்து விடுவித்த ஆதிரன், ''வது! நான் சாப்பிட்டுட்டுக் கிளம்பணும். நாளைக்கு நைட் எனக்கு ஃபிளைட். அதுக்குள்ள வீடு பேப்பர்ஸ் சைன் பண்ணனும்'' என்றான் இயல்பாக.

ஓரளவுக்கு இயல்பு நிலைக்குத் திரும்பிய வந்திதாவும், ''இருங்க சீக்கிரமா சூப் வைக்கிறேன்'' எனக் கூறி

கேனில் இருந்த தக்காளிப் பேஸ்ட்டையும், கொண்டைக் கடலையும் எடுத்து ஆதிரனிடம் தந்தாள்.

''ஆதி! இதைத் திறந்து கொடுங்க. அப்படியே கொண்டைக் கடலையை வடிகட்டிக் கொடுங்க'' என்றாள்.

''இப்பவே ட்ரைனிங் ஆக்கும்'' எனக் கிண்டலடித்தாலும் அவள் கேட்டதை செய்து தர முயன்றான். கவனிக்கவும்! முயன்றான் அவ்வளவே!

''சந்திரசேகர் அங்கிள் மாதிரி யாரும் இருக்க மாட்டாங்க ஆதி. நான் பிரணவை வேண்டாம்ன்னு சொல்லிட்டு அவரோட நண்பன் உங்களைக் கல்யாணம் பண்ணிக்கப் போறேன்னு சொன்னதும் அவங்களுக்கு எவ்வளவு சந்தோசம் பாருங்க'' என வந்திதா சொல்ல சற்று நேரம் அவர்களைப் பற்றிப் பேசினர்.

''சரி! உங்க லேப்ல இருக்கிற அந்த மெலிசா என்ன ஆனா?'' என வெங்காயம் அரிந்து கொண்டே வந்திதா கேட்டாள்.

''பொறாமையா?'' எனச் சிரித்தவன், ''மெலிசா ரொம்ப மெலிசா இருக்கறா. அதனால எனக்குச் சரிப்படாதுன்னு சொல்லிட்டேன்'' என ஆதிரன் பதில் தந்தான்.

''அப்போ என்னைக் குண்டுன்னு சொல்றீங்களா?'' என அவனை மடக்கினாள் வந்திதா.

''அதை என் வாயாலே வேற சொல்லணுமாக்கும்'' எனக் கூறி அவளைச் சீண்டியவன் திடீரென்று,

''ஓஹ் நோ!'' எனப் பதறினான்.



அவன் பதறியதற்குக் காரணம் கொண்டைக் கடலையில் உள்ள தண்ணீரை வடி கட்டுகிறேன் பேர்வழி என்று பேச்சு சுவாரசியத்தில் தக்காளிப் பேஸ்ட்டை வடிகட்டி விட்டான். இல்லை... இல்லை... ஒழுக விட்டான்.

அவனின் பதற்றத்தில் திரும்பிப் பார்த்த வந்திதா ஒன்றும் பேசாமல் முறைக்க, ''சாரி வது! பேச்சு மும்முரத்துல கவனிக்கலைடா'' எனச் சமாதானம் செய்ய முயன்றான்.

சமாதானக் கொடி வேலை செய்யவில்லை என உணர்ந்து தற்காப்புக் கலைக்கு மாறினான். அதாவது அவளிடம் சென்று சரணடைந்தான். அல்ல, அவளைச் சரணடைய வைத்தான். அவள் அருகில் சென்று அவளை அணைத்துக் கொண்டு அவள் கோபத்தை அணைக்க முயன்றான்.

அவனைத் தள்ளிவிட முயற்சித்த வந்திதாவின் கைகள் எப்பொழுது அவன் கட்டுப்பாட்டுக்குள் வந்தன, எவ்வாறு அவன் முதுகைத் தழுவிக் கொண்டன என்பது இருவருக்கு மட்டுமே புரிந்த புதிர்.

அவளைச் சமாதானம் செய்து அவளுக்கும் சேர்த்து இரவு உணவை சமைத்துக் கொடுத்தான் ஆதிரன்.

இவர்கள் எலியும் பூனையும் அல்ல. நிறை குறைகள் உள்ள நம்மைப் போன்ற இப்பூவுலகின் மனிதர்கள். ஆனால் இறுதியில் காதல் இவர்களை ஒன்றாகக் கட்டிப் போட்டு விட்டது.

ஆதிரன், வந்திதாவின் குணங்களில் நல்லதை மட்டும் எடுத்துக் கொண்டான். வந்திதாவும் ஆதிரனின் நற்பண்புகளை மட்டுமே எடுத்துக் கொண்டு பிடிக்காததை விட்டுவிட்டாள்.

மனிதர்களில் யாருக்குத் தான் குறையில்லை. குறைகளை விட்டுவிட்டு நிறைகளை மட்டும் இருவரும் எடுத்துக் கொண்டு வாழ்வது தானே வாழ்க்கை.

அவன் அவளைச் சீண்டாமல் இருக்க மாட்டான். அவளும் அவன் சீண்டலுக்குச் சிணுங்காமல் இருக்க மாட்டாள். அந்தச் சீண்டலுக்கு இவன் சமாதானம் என்ற பெயரில் தன் காதலைக் காட்டாமலும் இருக்க மாட் டான்!

இவர்கள் வாழ்க்கை எப்போதும் ஒரே சீராக இல்லாமல் சற்று கலகலப்பாக, சற்று உற்சாகமாக, சற்று கோபமாக, என எல்லாம் கலந்த ஒரு கலவையுடன் சுவாரசியமாக இருக்கும் என்பதற்கு நிச்சயம் உத்திரவாதம் உண்டு! இப்படித்தான் அவர்கள் இருவரும் ஒன்று சேர்ந்தது!

''சுற்றுலாப் பயணம் நிறைவுற்றது!

வாழ்க்கைப் பயணம் இனிதே துவங்கியது!''

